# ஆவணம்

இதழ் 4 சனவரி 1994



# AVANAM

JOURNAL OF THE TAMIL NADU
ARCHAEOLOGICAL SOCIETY

ஆவணம்



*AVANAM*, Journal of the Tamil Nadu Archaeological Society



இவ்விதழ் குடந்தைக் கல்வெட்டறிஞர் திரு என். சேதுராமன் அவர்கள் நிதி உதவியுடன் வெளியிடப்படுகிறது.

அச்சிட்டோர்

சர்மாஸ் சானடோரியம் பிரஸ்,

கணேஷ்நகர், புதுக்கோட்டை 622 001

# ஆவணம்

இதழ் 4 | AVANAM 4 | சனவரி 1994

## பொருளடக்கம்



தமிழகத் தொல்லியல் கழகம்

## பதிப்புக் குறிப்பு

தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆவணம் 4 உரிய நேரத்தில் வெளி வருவது பற்றி கழகத் தோழர்கள் யாவரும் பெருமைப்பட வேண்டும். கழகம் நன்கு வேரூன்றி விட்டது என்பதற்கு இது நல்ல அறிகுறி. அடுத்து வரும் இதழ்களுக்கு செய்திகளையும் கட்டுரைகளையும் காலந்தாழ்த்தாது அனுப்பு மாறு வேண்டுகிறேன். முடிந்த வரை ஆவணம் வழக்கத்துக்குக் கொண்டுவந்துள்ள நடைச்சீர்மையைக் கடைப்பிடிக்க வேண்டு கிறேன். வரும் இதழ்களில் மேலும் கூடுதலாக ஆய்வுக் கட்டுரைகளைச் சேர்க்கலாம். இதுவரை ஆவணத்தில் வந்துள்ள செய்திகள், கருத்துக்கள் பற்றிய திறனாய்வுக் குறிப்புகளையும் அனுப்பலாம். செய்தித்திரட்டு, வெளியீடுகள், மதிப்புரை ஆகிய பகுதிகளுக்கும் செய்திகள் நிறையத் தேவை. 16ஆம் நூற்றாண்டுக்குப் பிந்திய செய்திகள் இன்னும் கூடவேண்டும். இக்கால வரலாற்றார்வலர்கள் இதற்கு உதவ முன்வரவேண்டும்.

வழக்கம்போல் இந்த இதழ் அச்சேற்று வேலையிலும் பெரும் பொறுப்பை புலவர் செ. இராசு, முனைவர் கா. ராஜன் ஆகியோர் ஏற்றனர் என்பதை நன்றியுடன் பதிவு செய்ய வேண்டும். மேலும் பலவகையில் திருவாளர்கள் பா. ஜெயக் குமார், கி.ரா. சங்கரன், மு. செல்வராஜ் ஆகியோரும் உதவினர். இதழை அழகாகவும் விரைவாகவும் அச்சிட்டளித்த புதுக்கோட்டை சர்மாஸ் சானடோரியம் அச்சகத்தாருக்கும் நன்றி.

தஞ்சாவூர், எ. சுப்பராயலு
25-1-1994

## நன்றி

ஆவணம் இதழில் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை முதலிய பல நிறுவனங்களைச் சேர்ந்த அலுவலர் வெளியிடும் புதிய கண்டுபிடிப்புக்கள் மீதான பதிப்புரிமை அவ்வந் நிறுவனங்களையே சேரும்; அவற்றை வெளியிட இசைவளித்த நிறுவனங்கள் யாவற்றுக்கும் நன்றி.

## கிரந்த எழுத்துக்களும்
## அவற்றிற்கு நிகரான தமிழ் எழுத்துக்களும்

| தமிழ் | Roman | கிரந்தம் |
|---|---|---|
| அ | a | |
| ஆ | ā | |
| இ | i | |
| ஈ | ī | |
| உ | u | |
| ஊ | ū | |
| எ | e | |
| ஏ | ē | |
| ஐ | ai | |
| ஒ | o | |
| ஓ | ō | |
| ஔ | au | |
| ரு0 | ṛ, ṛi | |
| லூ0 | l̥ | |

| தமிழ் | Roman | கிரந்தம் |
|---|---|---|
| க | k | |
| க$_2$ | kh | |
| க$_3$ | g | |
| க$_4$ | gh | |
| ங | ṅ | |
| ச | c | |
| ச$_2$ | ch | |
| | j | |
| ச$_4$ | jh | |
| ஞ | ñ | |
| ட | ṭ | |
| ட$_2$ | ṭh | |
| ட$_3$ | ḍ | |
| ட$_4$ | ḍh | |
| ண | ṇ | |
| த | t | |
| த2 | th | |
| த3 | d | |
| த4 | dh | |
| ந | n | |

| தமிழ் | Roman | கிரந்தம் |
|---|---|---|
| ப | p | |
| ப$_2$ | ph | |
| ப$_3$ | b | |
| ப$_4$ | bh | |
| ம | m | |
| ய | y | |
| ர | r | |
| ல | l | |
| வ | v | |
| ழ | ḻ | |
| ள | ḷ | |
| ற | ṟ | |
| ன | ṉ | |
| ச0 | ś | |
| | ṣ, sh | |
| | s | |
| | h | |

2,3,4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்து தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# 1. நந்திவர்மன் கல்வெட்டு

இல. தியாகராசன், அரியலூர்

சோழநாட்டில் கிடைத்த பல்லவர் காலத்தைச் சார்ந்த 41 கல்வெட்டுக்களில் தெள்ளாற்றெறிந்த நந்திவர்மனின் (846-869) கல்வெட்டுக்கள் பதினைந்தாகும். இரண்டு புதிய கல்வெட்டுக்கள் திருவையாறு, கோபுரப்பட்டி ஆகிய ஊர்களில் உள்ளன. திருவையாறு பஞ்சநதீசுவரர் கோயிலின் கருவறைத் தென்சுவர்க் கல்வெட்டை 1976-இல் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையைச் சார்ந்த திரு.சு.இராசகோபால் அவர்கள் கண்டு பிடித்தார். இதுபற்றிய தகவலையும் அவர் எழுதிய திருவையாறு எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் இதுவரை பாடம் வெளியாகவில்லை.

இக்கல்வெட்டில் மன்னரின் ஆட்சியாண்டு ஏதும் குறிப்பிடப்பெறவில்லை. நந்திப்போத்தரையர் திருவையாற்று மகாதேவர்க்கு நந்தா விளக்கு எரிக்கக் கொடுத்த ஒரு கொடையைப் பற்றிக் குறிக்கிறது. குமரமார்த்தாண்டன் இம் மன்னருடைய சிறப்புப் பெயர் எனத் தெரிகிறது. குமரமார்த் தாண்டபுரம் என்ற பெயரில் வணிக நகரமொன்று கும்பகோண மருகே இருந்துள்ளது. காரிகுடி திருவையாறு அருகில் உள்ளது. அந்தனூர் இன்று அந்தணக்குறிச்சி என்ற பெயரில் திருவையாறு அருகே உள்ளது.

இக்கல்வெட்டு இருப்பது அறியப்படுமுன் இக்கோயில் முதலாம் ஆதித்தசோழன் காலத்தில் கட்டப்பட்டது என்று அறிஞர் கருதினர். ஆனால் இக்கல்வெட்டின் அடிப்படையில் இப்போதுள்ள கோயில் இப்பல்லவ மன்னரின் காலத்தில் கட்டப் பெற்றிருக்கலாம் என்ற மற்றொரு கருத்தும் கூறப்பட்டுள்ளது. ஆனால் கல்வெட்டின் எழுத்தமைதி இதே சுவரில் உள்ள முதலாம் ஆதித்தனின் கல்வெட்டைப் போன்றுள்ளதால் இக்கல் வெட்டைச் சோழமன்னன் படியாக எடுத்து மீள எழுதியுள்ளார் எனக் கருதலாம். கல்வெட்டின் வாசக அமைப்பும் இதை உறுதி

செய்வதாக உள்ளது. இதிலிருந்து பல்லவமன்னன் காலத்தில் இருந்த கற்றளி சோழனால் மீண்டும் பிரித்துப் புதுப்பித்துக் கட்டப் பட்டது எனலாம்.

1.1

1 ஸ்வஸ்திஸ்ரீ திருவையா

2 ற்று மஹாதேவர்க்கு

3 தெள்ளாற்றெறிந்த நந்தி

4 ப்போத்தரையர் குடுத்

5 த பொன் 10 பதின் கழ

6 ஞ்சு இப்பொன் கொண்டு

7 ஒரு நந்தா விளக்கெரிக்க

8 இக்கோயிலிற் சந்திராதித்த

9 வற் குமரமாத்தாண்டத்தா

10 ல் நிசதி உரிய் நெய் அட்டு

11 வோமானோம் காரிகுடிச் ச

12 வையோம் அந்த

13 னூர் வாழ்க்கைக் கருவூர் கா

14 ரியான் உள்ளிட்ட ஊரார் குடுக்க

15 இவர்களிடைப் பெற்ற அம்

16 பர் நாட்டுக் கொற்றமங்கல

17 த்து நன்னன் சிறுநம்பி

18 மணலூர்ந்து திருவையா

19 றுடைய மஹாதேவர்க்கு ஒரு நந்

20 தாவிளக்கு நிசதி குமரமாத்

21 தாண்டத்தால் உரிய் நெய்

22 யெரிப்பதற்கு குடுத்த் நி

23 ல்ம் பத்து மா.. உ

# 2. திருமால்புரம் கல்வெட்டு

சூ. சாமிநாதன், மைசூர்

திருமால்புரம் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள வாலாசாபாத் வட்டத்தில் அமைந்துள்ள சிவன், திருமால் கோயில்களில் பல கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டுள்ளன.[1] இவ்விரு தொன்மையான கோயில்களும்[2] முதற் பராந்தக சோழன் (கி.பி.907-955) காலத்தில் கற்றளியாக்கப்பட்டன என்பதை இவ்விரு கோயில்களின் கருவறைச் சுவர்களில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களால் உணரலாம்.

திருமால் கோயிலின் கருவறையின் கிழக்குப் பகுதியில் உள்ள முதலாம் இராசராசசோழனின் கல்வெட்டை[3] ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

21

1 சுவத்தி ஸ்ரீ காந்தளூர். சாலை கலமறுத்த

2 கோராஜ ராஜகேசரிவன்மக்கு யாண்டு பத்தாவது தாமர்

3 கோட்டத்து தாமர்னாட்டு கோவிந்தபாடிபுறத்து வேள்கள வெண்பாக்கத்தூ

4 ரோம் கைய்எழுத்து சோழனாட்டு வடகரைப் பிடவூர் நாட்டுக் குளக்கூரு

5 டையான் அருநிலை ஸ்ரீகிருஷ்ணனான மூவேந்தப் பிடவூர் வே-

6 ளார் கையால் யாங்கள் கொண்டு கடவ செம்பொன் தந்த க-

7 ட்டளையால் துளை 20ம் இப்பொன் கொண்ட பரிசாவது இவாட்டை

8 புரட்டாதி முதல் கழஞ்சிந்வாய் திங்களிரண்டு மாப் பொலிசையா லோராட்

9 டைக்கு வந்த பொந் 3ம் இப்பொன்னிலிவர் தமப்பனார் காய்வாநருனிலையா

10 ன மூவேந்தப் பிடவூர் வேளார் ஸ்ரீகோவிந்த

1. தெஇக, தொகுதி 24, எண், 265-302; இகஆ, 1906, எண், 303-344.

பாடி ஆழ்வான் விண்ணப்பம் செ[ய்]

11 கோல நற்குழலெனும் திருப்பதியம் இவாள்வார்
திருவிழாவி லேழானாளாலா

12 டி [ப்பா]டின பரிஷை நாயகன்மார்க்கு இருகழ
ஞ்சுங் கேட்பிச்ச கோயில் நம்பிமார்க்கு

13 கழஞ்சும் ஆக பொலிசை முக்கழஞ்சு பொன்னும்
சந்திராதித்தவல் ஆட்டாண்டு தோறும் மா

14 ள்வார் ஸ்ரீகாரியம் செய்கின்ற நம்பிமாரே தண்டி
இடுவிப்பதாகவும் இடோமாகில்

15 திருவாணை மறையும் பட்டு தேவகந்மிகள் நாங்கள்
வே. . . த்தில் தாங்கள் வேண்டு

16 தண்டமிடப் பெறுவார்களாகவும் மிவர்களிட்ட
தண்டமிறுத்தும் இன்னிபந்தமிப்படி

17 இடக் கடவோமாகவும் இப்பரிசொட்டி இட்டுக்
குடுத்தோ மூவேந்தப் பிடவூர் வேளார்க்கு

18 வேள்கள வெண்பாக்கத் தாரோம் ஊரார் பணிக்க
இசிலாலேகை வெட்டினேன்

19 ஆறையான ஸ்ரீகோவிந்தபாடி ஆசாரியநேன்
இவை என் எழுத்து இ

20 து ஸ்ரீவைஷ்ணவர் ரட்சை

இக்கல்வெட்டு உணர்த்தும் செய்தியின் சாரம்: கோவிந்த பாடியின் புறப்பகுதியாக உள்ள வேள்கள வெண்பாக்கத்து ஊரார் சோணாட்டுப் பிடவூர் நாட்டுக் கூருடையான் அருநிலை ஸ்ரீகிருஷ்ணனான மூவேந்தப்பிடவூர் வேளார் என்பவரிடமிருந்து 20 [கழஞ்சு] பொன்னைக் கொடையாகப் பெற்று, அப் பொன்னுக்கு ஆண்டுப் பலிசையாக [வட்டி] வரும் மூன்று பொன்னைக் கொண்டு இவர் தந்தையான காய்வாந் அருனிலையான மூவேந்தப்பிடவூர் வேளார் கோவிந்தபாடி ஆழ்வார் மீது விண்ணபித்துள்ள 'கோல நற்குழல்' என்று தொடங்கும் ஒரு திருப்பதியத்தை இக்கோயிலில் நடைபெறும் திருவிழாவில் ஏழாம் நாளில் விண்ணப்பம் செய்வதற்கு வகை செய்தனர். 'இவ்விண்ணப்பத்தைப் பாடி ஆடின பரிஷை அல்லது கூட்டத்தாருக்கு இரு கழஞ்சு பொன்னும், அதனை ஏற்பாடு

செய்யும் அர்ச்சகருக்கு ஒரு கழஞ்சு பொன்னும் கொடுக்க வகை செய்யப்பட்டுள்ளது.

முதலாம் பராந்தக சோழன் காலத்திலிருந்தே சிவன் கோயில்களில் மூவர் முதலிகள் யாத்த திருப்பதியம் ஓதப்பட்டு வந்தன.[4] ஆழ்வார்கள், நாயன்மார்களின் பாடல் பெறாத கோயில்கள் முதலாம் இராசராசன் காலத்தில் புலமை வாய்ந்த பெரியோர்களால் பாடப்பெற்றன.[5] கருவூர்த் தேவர், சேந்தனார், கண்டராதித்தர், பூந்துருத்தி நம்பி, காடநம்பி போன்ற பெரியோர்கள் மூவர் முதலிகளுக்குப் பின் வாழ்ந்தவர்கள். இவர்களது பக்திப் பாடல்கள் ஒன்பதாந் திருமுறையாகத் தொகுக்கப்பட்டு கோயில்களில் ஓதப்பட்டுவந்தன என்பது தெளிவு.[6] நம் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள 'கோலநற்குழல்' என்ற பாடலோ அல்லது சொல்லோ எந்த வைணவ சமய இலக்கியங்களிலும் காணப்படவில்லை. இதனை விண்ணப்பம் செய்தவர் காய்வாநருனிலை ஆன மூவேந்தப்பிடவூர் வேளார் என்பது இக் கல்வெட்டிலிருந்தே அறியமுடிகிறது. இதே கோயிலிலுள்ள பெயரில்லாத ஒரு சிதைந்த கல்வெட்டு[7] சமயப் பாடலான திருவாய்மொழி ஓத நிவந்தம் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கின்றது.

சோழர் காலத்தில் சைவம் ஆதரிக்கப்பட்டாலும் வைணவம் புறக்கணிக்கப்படவில்லை. முதலாம் பராந்தக சோழன் காலத்திலிருந்தே வைணவம் சோணாட்டில் தழைத்தோங்கியது. பராந்தகனே திருவரங்கம் கோயிலில் துலாபாரம் எடுத்தார் என்று வேலஞ்சேரி செப்பேடு கூறுகின்றது.[8] இவர் கோவிந்தபாடி திருமால் கோயிலுக்குத் திருமேனி அளித்தார்.[9] இவரது பேரர் சுந்தர சோழனோ வைணவ சமயத்தைச் சார்ந்த தனது அமைச்சரான அனிருத்த பிரமாதிராசனுக்குப் பத்துவேலி நிலம்

4. இகஆ, 1929, எண்.99; தெஇக, தொகுதி 8, எண். 529.

5. மு. இராகவையங்கார், சாசனத் தமிழ்க்கவி சரிதம், 1937, பக்கம். 45

6. ஒன்பதாம் திருமுறை, தருமை ஆதினம், 1960.

7. இகஆ, 1906, எண். 326.

8. இரா. நாகசாமி, திருத்தணி வேலஞ்சேரி செப்பேடுகள், 1979, பக்கம் 2.

9. இகஆ, 1906, எண். 309.

முழு உரிமையுடன் துய்க்க அளித்தார்.[10] சுந்தரசோழன் காலத்தில் தான் வைணவப் பெரியார் நாதமுனிகள் வைணவப் பாடல்களை யெல்லாம் பெரிய திருவாய் மொழியாகத் தொகுத்தார்.[11] முதல் இராசராசனோ சைவத்தைப் பெருமளவு போற்றினாலும் வைணவத்திற்குத் தொல்லையளிக்கவில்லை. முதல் இராசேந்திர சோழரின் கல்வெட்டொன்று பாடல் பெறாத திருமுக் கூடலாழ்வார் கோயிலில் புதிதாக திருப்பதியம் பாடுவார்க்கு நெல்லளித்தது பற்றிக் குறிப்பிடுகின்றது.[12] எனவே கல்வெட்டில் கண்ட கோல நற்குழலென்னும் திருப்பதியத்தை இயற்றியவர் காய்வாநருனிலை ஆன மூவேந்தப்பிடவூர் வேளார் என்று பல ஆண்டுகளுக்கு முன்பே மூதறிஞர் மு. இராகவையங்கார் வெளியிட்ட கருத்து பொருத்தமே எனலாம்.[13]

---

11. K.V. Raman, ' Religious Trends under Rajaraja1'
    *Rajaraja the Great* (1987), p.111

12. இக.ஆ. 1915, எண். 183.

13. பார்க்க அரு. 5

# 3. வாழைக்குறிச்சிக் கல்வெட்டுக்கள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்

3.1. திருமயம் வட்டம், வாழைக்குறிச்சி சிவன்கோவிலின் வடபுறத்துச் சுவரின் அதிட்டானத்தின் கிழக்குப் பகுதியில் உள்ள கல்வெட்டு

1 வி . . . . . . தி . . . . புவன ச [க்கர] வத்திக[ள்]
1 7 தேவ . . . . . . . . . . . . . . .
டபாடி கொண்ட சோழ . . . . . . [கூ]டலூர் நா

2 செம்பியன் [வ] ழை குறு[ச்சி] . சல்லூர் ஈ[ச். ]
வ[ர] முடை [ம]ஹா தேவர்க்கு இவ . . . . ளால்
முத . . . . . . ந ந . ப . க்கு[டு]த்த திருவிள[க்கு]

3 மூன்று இத்திருவிளக்கு . . . . . . பமமு

3.2. மேற்படி கோவில் மேற்கு அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டு

1 இராசாதி. . . . தேவற்கு யாண்டு . . . .
வது வாழைக்கு[றிச்சிஈ]ர லூ . . . வர
முடை [ம] . . . தேவற்கு திரு[ந]லெக் குந்றத . . . .
ஈ . . . . . . . வ நன வாழைக்கு
றிச்சி . . . . . . . விலை கொண்டுடைய செ

2 மேற்கடைய . . . . . . . . திருமடைப்பள்ளிபுறமாக
கு[டுத்]தோ இறை ஊர் தந்ம இது ப[ந்] . . .
ம . . . . . . . இன்னிலத்தால் வந்த
இறை . . . . . . . . யனி இடுவான் தன்[ம]
மாக சம்மதித்தோம் ஊரோம்.

3.3 மேற்படி கோவில் வாசற்படிக்குத் தென்புறம் சுவரில் உள்ள கல்வெட்டு

1 ஸ்ரீகூடலூர் நாட்டுப் ப
2 னையூர் மறவந் பரம்பன் உய்
3 யவந்தாநாந து[வராவ] திப் பே
4 ரையந் தந்மம் . . . திரு நிலை
5 காலும் படி[யும்]

3.4. மேற்படி கோவில் வடக்குச் சுவரின் அதிட்டானத்தில் கீழ்புறம் உள்ள கல்வெட்டு

*1* *ஸ்ரீதி[ரி] புவனச் ச[க்கிரவத்திகள்*
*குலசே] கர தேவற்கு யாண்டு . . . . . . .*
*இரட்]டபாடி கொ[ண்]ட சோ [ழவளநாட்டு கூ]*
*டலூர் நா[ட்டு]*

*2* *செம்பியன் வா ழை குறு[ச்சி]சரல்லூர்*
*வரமு [டைய] மஹா தேவர்கு [இவூர்*
*வே]ளான் முத . . . . ந உத நாய[னா]ற்கு[குடு]*
*த்த திருவிள[க்கு]*

*3* *மூன்று இத்தி[ரு] விளக்கு . . . பெபமூ . . .*

3.5. மேற்படி கோவிலின் வாசற்படிக்கு தென்புறம் சுவரில் உள்ள கல்வெட்டு [12ஆம் நூற்றாண்டு]

*1* *ஸ்வஸ்திஸ்ரீ கூடலூர் நாட்டு[ப்]ப*
*2* *னையூர் மறவந் பரம்பந் உய்*
*3* *யவந்தாநாந து[வராவ]திப் [பே]*
*4* *ரையந் தந்மம் . . . . . திருநிலை*
*5* *காலும் ப[டியும்]*

3.6. மேற்படி கோயிலின் மேற்குச் சுவரின் அதிட்டானத்திலுள்ள கல்வெட்டு

*1* *ஸ்ரீஇராசாதி ராசதேவர்க்கு யாண்டு 10 வது*
*வாழைக் குறி[ச்சிச]ரலூ [ர்] வரமுடை*
*மஹாதேவற்கு திரு[ந]லக்கு[ந்]றதார்*
*. . . . . . . . நன வாழைக்கு*
*றிச்சிச ... விலைகொண்டுடையசெல்வ*
*. . . . . . .*

*2* *மேற்க்கடைய திருமடைபள்ளி புறமாக குடு*
*த்தேந் இரை ஊர் தந்மம் இதுப . ம . . . . .*
*. . . . . . இன்னித்தால் வந்த இரை . . . . .*
*யவி இடுவான் தன்மமாக சம்மதித்தோம்*
*ஊரோம்.*

# 4. நாட்டார் கல்வெட்டுக்கள்

இல. தியாகராசன், அரியலூர்

நாடு என்பது பல சிற்றூர்களையும் அதன் நிலங்களையும் உள்ளடக்கிய வருவாய்த்துறை நிருவாகப் பிரிவாகும். இந்நாட்டுப் பிரிவுகளில் உள்ள ஊர்க் கோயில் நிருவாகங்களில் பங்கேற்றல் வருவாய்த் துறை நிர்வாகங்களை கவனித்தல் போன்ற பணிகளைச் செய்த குழு நாட்டார் என அழைக்கப்பட்டனர். இக்குழுவினர் பொதுவாக அந்தந்த நாட்டுப்பிரிவின் ஊர்களில் உள்ள பெருநிலக்கிழார்களாகவும் வெள்ளாள இனத்தவர்களாகவும் விளங்கியதைக் கல்வெட்டுகளில் காண்கிறோம். இக்குழுவிற்கென செயல்பட்ட கணக்கு அலுவலர் நாட்டுக் கணக்கு எனப்பட்டார். இக்குழு வசூலித்த வரித்தொகை நாட்டு முதல் எனவும் நிருவாகச் செலவுக்கென வசூலிக்கப்பட்ட தொகை நாட்டு வினியோகம் எனவும் குறிப்பிடப்பெற்றது. பல நாடுகளின் நாட்டார்கள் இணைந்து ஏற்படுத்திய பேரமைப்பு பெரியநாடு அல்லது சித்திரமேழிப் பெரியநாடு, எழுபத்தொன்பது வளநாட்டுப் பதினெண்பூமி சித்திரமேழி நாட்டார் எனற பெயர்கள் கொண்டு விளங்கியது.

இத்தகைய நாட்டார்களின் செயல்பாடுகளைப்பற்றிக் கூறும் கல்வெட்டுக்கள் பல அரியலூர் பகுதியில் (வெள்ளாறு - கொள்ளிடம் ஆற்றுக்கு இடைப்பட்ட பகுதி) கிடைத்துள்ளன. அவ்வகையில் சோழர் காலத்தவையாக மொத்தம் 43 கல்வெட்டுகள் உள்ளன. இதில் வெளியிடப்பெறாத புதிய கல்வெட்டு ஒன்றாகும் (எண். 4.1)

பாண்டியர் காலத்தைச் சோந்தவையாக நாட்டார் பற்றிக்கூறும் கல்வெட்டுக்கள் அரியலூர் பகுதியில் முப்பத்தாறு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவற்றில் 6 கல்வெட்டுக்கள் புதிய கல்வெட்டுக்களாகும்.

வடகுரங்காடுதுறை கல்வெட்டு ஜடாவர்மன் வீரபாண்டியனின் (1253-1283) 10-ஆவது ஆண்டில் (கி.பி. 1263) எழுதப்பெற்றுள்ளது. சித்திரமேழிப் பெரியநாட்டாரும், பதினெண் விஷயம் என்ற வணிகக்குழுவினரும் ஒன்றாகக் கூடி

இக்கோயிலில் திருநடைமாளிகை (சுற்றாலை) கட்டுவதற்காகக் கொடுத்த கொடை பற்றிக்கூறுகிறது.

இதேபோன்ற கொடையை நாடும், நகரமும், பிரமதேயங்களும் இணைந்து விறையான அகளங்கபுரத்து (இன்றைய பெரியமறை ஊர்) திருப்பாற்பதீசுவரமுடைய நாயனார் கோயிலுக்கு வழங்கியதை திருப்பழனத்தில் உள்ள முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 10-ஆவது ஆண்டு (கி.பி.1278) கல்வெட்டு கூறுகிறது.

இதே மன்னரின் 12ஆவது ஆண்டில் (கி.பி.1280) எழுதப் பெற்ற தே.புடலூர் கல்வெட்டு இவ்வூர் பாற்பதீசுவரமுடைய நாயனார் கோயிலில் இம்மன்னரின் மகன் சுந்தரபாண்டியன் எழுந்தருளிவித்த திருக்காமக்கோட்டமுடைய தேசமிக்க பெருமாள் நாச்சியார் எனும் அம்மனுக்கு தென், வட புடலூர் நஞ்சை நிலம் 1000 குழியை நாட்டு இறையிலியாக மன்னரால் கொடுக்கப்பட்டதாக அறிகிறோம்.

இதே மன்னரின் 30ஆவது ஆண்டில் (கிபி.1298) இராயம்புரம் என்ற ஊரில் எழுதப்பெற்றுள்ள கல்வெட்டு எழுபத்தொன்பது நாட்டவரும் நான்குதிசை பதினெண் விஷயத்து நகரத்தாரும் கூடி இக்கோயில் திருப்பணிக்கும், பட்டணப் பகுதிக்கும் கொடுத்த கொடை பற்றிக் கூறுகிறது.

அயன்பேரையூரில் உள்ள ஐந்தாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் 4ஆவது ஆண்டுக் கல்வெட்டு (கி.பி.1327) இவ்வூர் திருமுக்கூடலுடைய நாயனார் கோயிலுக்குக் கீரனூர் என்ற ஊரை மன்னர் இறையிலியாக வழங்கி ஆணைபிறப்பித்தைக் கூறுகிறது.

தே.புடையூரில் மாறவர்மன் பராக்கிரமபாண்டியனின (1335-1362) 3ஆவது ஆண்டுக் கல்வெட்டு உள்ளது. இது இவ்வூர் பாற்பதீசுவரர் கோயில் வழிபாட்டுக்கென கோழியூர் பற்றில் நாட்டு இறையிலியாக நஞ்சை நிலம் இரண்டு மாவும் புஞ்சை நிலம் ஐந்து மாவும் மன்னர் சுந்தரபாண்டியனால் அவரின் 17வது ஆண்டில் விடப்பட்டதைக் குறிப்பிட்டு அவ்வாணையை ஏற்று கோழியூர்ப் பற்று சபையாரும், நாட்டாரும் செயல்படுத்தியதைக் கூறுகிறது.

நாட்டார் பற்றிக்கூறும் கல்வெட்டுகளில் விசய நகர மன்னர் காலத்தவையாக மொத்தம் 54 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இவற்றில் மூன்று சல்வெட்டுக்கள் புதியனவாகும். இவை திட்டகுடி, கோழியூர் ஆகிய ஊர்களில் உள்ளன. திட்டகுடி சுகாசனப்பெருமாள் கோயிலில் விசயநகர மன்னர் வீரபூபதி உடையார் என்பவரின் ஆட்சிக்காலத்தில் (சகம் 1343: கி.பி.1421) எழுதப்பெற்ற கல்வெட்டு உள்ளது. இது கரைப்போக்கு நாடு நாட்டார்கள் இக்கோயிலுக்கு குளத்துவாய்க் கீரனூரான கருப்புக்கட்டிக் குறிச்சி (தற்போதைய கருப்பட்டாங்குறிச்சி) என்ற ஊரிலிருந்து நாட்டு வினியோகம் உட்பட கிடைக்கும் பணத்தை கோயில் பூசைக்கு கொடுத்ததையும் இத்தொகை போக அவர்கள் இவ்வூருக்கென நாட்டு வரியாக வசூலிக்க ஐந்து வீரசம்பன் குளிகைப்பணம் நிச்சயித்ததையும் கூறுகிறது. கரைப்போக்குநாடு என்பது வெள்ளாற்றங்கரையில் உள்ள திட்டக்குடி, திருவட்டத்துறை, கோழியூர், பெண்ணாடம், இராசேந்திரபட்டணம் உள்ளடங்கிய பகுதியைக் குறிப்பதாகும்.

கோழியூர் திருவாலங்காடுடையார் கோயிலில் கி.பி. 1430-இல் எழுதப் பெற்ற இரண்டாம் தேவராயரின் கல்வெட்டு உள்ளது. இது கரைப்போக்கு நாட்டு நாட்டாரும் தந்திரிமார்களும் (வன்னிய படைவீரர்களின் தலைவர்களடங்கிய குழு ) இணைந்து இக்கோயில் அதிகாரிகளுக்கு கொடுத்த உறுதிமொழிப்பட்டையம் பற்றிக் குறிப்பிடுகிறது.

திட்டகுடி வைத்தியநாத சுவாமிகோயிலில் இரண்டாம் தேவராயரின் காலத்தில் (4-11-1443) எழுதப்பெற்ற கல்வெட்டு உள்ளது. இது இவ்வூர் ஊருடைய நாயனார், வீற்றிருந்த பெருமாள் ஆகிய இரண்டு கோயில்களுக்கும் பதினெட்டு பற்று நாட்டார்களும், தந்திரிமார்களும் இணைந்து வழங்கிய இறையிலி தர்ம சாதனப்பட்டையம் பற்றிக் குறிப்பிடுகிறது.

4.1 இடம் : திருவாலந்துறை (பெரம்பலூர் வட்டம்)
திருவாலந்துறையார் கோயில் கருவறை
வடக்கு-மேற்கு குமுதபீடம், அர்த்தமண்டப
வடக்குச் சுவர் குமுதபீடம்*.

காலம் : மூன்றாம் குலோத்துங்கன் கி.பி.1185

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்து
ங்க சோழதேவற்கு யாண்டு ஏழாவது மேஷநாயற்று
பூர்வ பக்ஷத்து பஞ்சமியும் திங்கள்கிழமையும் பெற்ற
சோதி நாள் வடகரை கரிகால கன்ன வளநாட்டு
மேல்கரை நாட்டு உடையார் திருஆலந்துறை
உடைய நாயனார்ச் சித்திரைத் திருநாள் எழுந்தரு
ளுகையில் இராராதேவன் வாணகோவரையனேன்
கும்பிட்டு திருவோலக்க மண்டபத்தே வினோ

2 தேவாசிரியன் திருவுறைக்கட வாசலாலே
ஒரு சற்பம் திருவோலக்க மண்டபத்தே புகுந்து
இதுக்குப் பட்டர்களை அழைத்து ப்ராயச்சித்தங்
கேட்க உடையாற்க்கு சில தேவதானமும் மஉறா
யேசுரற்க்குச் சிலபூமி தானமும் பண்ணவேணுமென்று
விதிக்கையில் உள்ளூர்த் தேவதான இறையிலியாகை
யாலே மேல்கரை நாட்டவரை அழைத்து உங்கள்
நாட்டு நாயனார் திரு ஆலந்துறை உடைய னாய
னாருக்கு உங்களூர்கள்

3 கற்பூண்டி கிளிஞலூர் மாம்பூண்டி தென்கரை
மாம்பூண்டி விசாலூர் சிற்றூர் ..... புன்செயிலும்
நன்செ குழி இருநூறும் இறைஇலியாக கு

4 டுத்தோம் இராராதேவரான வாணகோவரைய
னேன் இதந்மத் ..... பறையனுக்குத் தன் பெண்
டாட்டியைக் குடுத்தவனாவான் இது பன்மாஹேச்வ
ர ரக்ஷை

5 இவை வாணகோவரையன் எழுத்து ஸ்வஸ்திஸ்ரீ

---

* இவ்வூர்க் கல்வெட்டு பற்றி தகவல் அளித்து உதவிய அரியலூர் அரசு கலைக்கல்லூரி புள்ளியியல் துறைத்தலைவர் பேராசிரியர் செ.செல்லையா அவர்களுக்கு நன்றி.

4.2 இடம் : திருப்பழனம்கோயில் 2 ஆவது கோபுர பீடத்தில் வைத்துக் கட்டப்பட்டுள்ள ஆறு துண்டுக் கல்வெட்டுக்கள்.

காலம் : முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன், கிபி. 1278

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மர் திருபுவனச்சக்ரவத்திகள் ஸ்ரீகுலசேக ரதேவர்க்கு யாண்டு 10- [ஆவது வடக]ரை விக்ரம சோ ழவளநாட்டு விறைக் கூற்றத்து வி

2 றையாந அகளங்கபுரத்து உடையார் திருப்பார்பதீச்வர முடைய நாயனார்க்கு [பூசைக்]கும் திருப்பணிக்கும் நாடும் நகரமும் [பதி]

3 னென் விஷையமும் அகர ப்ரஹ்ம தேதங்களும் நிறைவற நிறைந்து குறை [வறக்கூடியிருந்து] கல்வெட்டிக் குடுத்தோம் [இவ்வூ]

4 ரிலும் பிடாகைகளிலும் போகத்துக்கு குடிக்கு நாள் ஒன்றுக்கு செல்லும் பல [ஏறு] சாத்துக்கும் இறங்கு சாத்துக்கும் பா .....

5 புடவைக்கட்டுக்கும் பொதி ஒன்றுக்குக் காலாக வந்த பணம் பெறவும் அரிசிப்பொதிக்குப் பொதி மிளகு பொ[திக்குஒருகா]

6 சு பெறவும் தலைச்சுமைக்கு அரைக்காசு [பெறுவதா]கவும் அளப்பன முகப்பன இவையிற்று[க்கு]ப் பொதி ஒன்றுக்கு ஒ[ருகாசு]

7 பெறவும் இப்படி பெறக் கடவதாகச் சம்மதித்துக் கல்வெட்டிக்குடுத்தோம் இப் ......

8 இப்படிக்கு இவை ..............

4.3 இடம் : விருத்தாசலம் வட்டம், தே.புடையூர் பசுபதீசுவரர் கோயில் கருவறை வடசுவர்

காலம் : ராஜகஜகேசரி குலசேகரபாண்டியன். கி.. 13.7.1280.*

1 ஸ்வஸ்திஸ்ரீ கோனேரி

2 ன்மை கொண்டான் திருபுவன ச

3 க்ரவத்திகள் ஸ்ரீராஜகஜகேஸரி கு

4 லசேகர தேவற்கு யாண்டு பன்னி

5 ரண்டாவது மேஷநாயற்று பூர்வ பக்ஷத்து

* இக்கல்வெட்டின் காலத்தைக் கணித்து உதவிய குடந்தை திரு. என். சேதுராமன் அவர்களுக்கும் கல்வெட்டுகள் பற்றித் தகவல் அளித்து உதவிய

6 துவாதஸியும் நாயற்றுக் கிழமையும் பெற்ற உத்தி
7 ரத்து நாள் வடகரை விருதராஜ பயங்கர வளநாட்
8 டு மேற்க்கா நாட்டு இருங்கோளப்பாடி நாட்டு
9 கோழியூர் பற்றில் புடலூர் உடையார் பாற்பதீச்வ
10 ரமுடைய நாயனாற்க்கு உபயதள குமர ஸார்துல
11 ஸுந்தர பாண்டியதேவர் எழுந்தருளப் பண்ணிய
12 ருளின திருக்காமக் கோட்டமுடைய தேசமிக்க பெரு
13 மாணாச்சியார்க்கு நாட்டிறையிலியாக தென்பு
14 டலூர் வடபுடலூர் நஞ்செய் னிலத்தில் விட்ட நாயனார்
15 பழந்தேவதாநத்துக்கு மேற்கும் வடக்கும் ஒடை
16 க்குத் தெற்கும் வாய்க்காலுக்குக் கிழக்கும் பல தடி
17 யால் விட்ட குழி ஆயிரத்திநால் நிலம் இரண்டு மா
18 வும் னாட்டு இறையிலியாகக் குடுத்தோம் உ

4.4 இடம் : அரியலூர் வட்டம் இராயம்புரம் இராஜகம்பீர சோரீகக் கோயில் கற்பலகை

காலம் : முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் கிபி. 22.8.1297*

1 ஸ்வஸ்திஸ்ரீ க
2 லி மிக்கீத்திக்கு
3 மேற் செல்லாநின்ற
4 கோமாறபன்மர் திருபுவனச்சக்கர
5 வத்திகள் ஸ்ரீகுலசேகரதே
6 வற்க்கு யாண்டு 30-வது
7 ஸிம்உற நாயற்று பூர்வபக்ஷத்து
8 திருதியையும் திங்கட்கிழமையும்
9 பெற்ற வுத்திரத்து நாள் வடகரை விருதராச
10 பயங்கர வளநாட்டு மே
11 ற்கா[ரை] காட்டு செ
12 ன்னிவனக் கூற்றத்து இ
13 ராசகம்பீரபுரத்து உ
14 டையார் இராசகம்பீ

* இக்கல்வெட்டைக் கண்டறிந்து களஆய்விலும் உடனிருந்து உதவிய திரு. மு. கலைவாணன், இ.ஆ.ப., அவர்களுக்கும் வரலாற்றுப் பேராசிரியர் திரு. சே. பாண்டியன் அவர்களுக்கும் தேதியைக் கணித்தளித்த குடந்தை

15 ரசோளீசுவரமுடைய

16 னாயனார் கோயில் திருக்

17 காவணத்து எழுபத்தொ

18 ன்பது நாட்டவரும் நா

19 ன்கு திசை

20 பதினெண் விஷ

21 யத்தாரும் நிறை

22 வற நிறைந்து குறை

23 வறகூடி இன்னாய

24 னார் திருப்பணிக்கும் பட்

25 டணப்புகுதிக்கும் வைத்து

26 க்குடுத்த பரிசாவது மிளகு பாக்குபொதி ஒன்

27 றுக்கு கால் பணம் கொ

28 ள்ளவும் புடவை கட்டுக்கு கால் பணமும்

29 கருஞ்சரக்கு உள்ளிட்ட

30 பொதிக்கு அரைக்கால்

31 பணமும் அரிசி நெல்லு

32 ள்ளிட்ட பொதிக்கு ந

33 டை முதலிலே காசு அரைப்

34 பணமும் அளப்பன நிறுப்பனவை

35 யிற்றுக்கு ஒரு காசு கொள்ளவும்

36 இது முதலாக குடுத்து திருப்பணி

37 செய்வித்தார் இவ்வூர் செங்காயதேவர்

38 காரியத்துக்கு கடவ கூத்தர் இப்படிக்கு

39 சந்திராதித்தவற் கொள்ளவும் இப்படி

40 கொண்டு முதல் திருப்பணிக்கு குடுத்தோம்

41 பதினெண் விஷயத்தாரோம்

4.5 இடம் : பெரம்பலூர் வட்டம், அயன்பேரையூர் முக்குட்டிசுவரர் கோயில் மகாமண்டபத் தென் சுவர் வாயில் இடப்பக்கம்

காலம் : ஐந்தாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியன், கி.பி. 1327.

1 *ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்தி கோநேரின்மை கொண்டான் விக்ரம பாண்டிய தேவற்குயாண்டு 4*

2 *வது வடகரை கரிகால கன்ன வளனாட்டு வன்னாட்டுப் பேராவூர் உடையார் திருமுக்கூடலுடைய னாயனார் கோயில்*

3 *தானத்தாற்கும் வெம்பார் நாட்டு கீழ்கூற்று நாட்டவற்கும் [மேஷ] நாயற்று பூர்வ பஷத்து வியாழக்கிழமையும் வெள்ளியும் பெற்ற மூ*

4 *லத்து நாள் உகளூர் கூற்றத்து கீரனூர் யின்னாயினார் கோயிலல் முன்னாள் கல்வெட்டின படியே நாமும் தேவதான இறை*

5 *யிலியாக ஸர்வ சிற்றாயங்களும் யிழந்து தேவதான இறையிலியாக தந்தோம் இப்படிக்கு இவ்வோலை பிடிபாடாகக்*

6 *கொண்டு இன்னாயனாற்கு பூசையும் திருப்பணியும் நடத்தி இராசாக்கள் னாயன் சந்தியும் அமுது செய்தருளப்*

7 *ண்ணி இராசாக்கள் னாயன் திருநாளும் ஆடி மாஸத்து நம் ஆட்டை பிறந்த நாள் அத்தத்திலே தீர்த்தம் ப்ரஸாதித்த*

8 *ருளும்படி எழுந்தருளப் பண்ணுக இப்படிக்கு இவை இரவிகுலமாணிக்க நல்லூர் உடையான் பழந்தீபராயன்*

9 *எழுத்து உ*

4.6 இடம் : விருத்தாசலம் வட்டம் தே.புடையூர் பசுபதீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவர் பீடம்

காலம் : மாறவர்மன் பராக்கிரமபாண்டியன், கி.பி. 1337.

1 *ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மர் திருபுவனச் சக்கரவத்திகள் பராக்ரம பாண்டிய தேவர்க்கு யாண்டு 3ஆவது தென் புடலூர் உடையார் பாற்பதீச்வர முடையார்க்கு துலா நா*

2 *யற்று பூர்வ பக்ஷத்து த்வாதஸியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற மூலத்து நாள் வடகரை விருதராஜ பயங்கரவளநாட்டு இருங்கோளப்பாடி நாட்டு கோழியூர் பற்றில் தென்புடலூர் உடையா*

3 ர் பாற்பதீச்வர முடைய நாயனார் கோயில்த் தாநத்தார்க்கும் பூசைத் திருப்பணிக்கும் கோழியூர் பற்றில் ஸபையாரும் நாட்டாரும் முன்னாள் பெருமாள் சுன்தரபாண்டிய தேவர்க்கு 17-வது நா

4 ளில் கோழியூர் பற்றில் நாட்டி இறையிலியாக விட்ட நஞ்செய் நிலம் இரண்டு மாவும் புன்செய் நிலம் ஐஞ்சு மாவும் ஆக நஞ்செய் புன்செய் நிலம் ஏழும் மாவும் நாட்டி இறையிலியாக தாங்கள்

5 வேண்டும் குடி அனைத்து பையிர் செய்வித்து சந்திராதித் தவரையும் பூசைக்கும் திருப்பணிக்கும் உடலாக விட்டோம் கோழியூர் பற்றில் ஸபையாரும் நாட்டவரோம் ஸுபமஸ்து.

4.7 இடம் : திட்டகுடி சுகாசனப்பெருமாள்கோயில்
கருவறைத் தென்சுவர்

காலம் : வீரபூபதி உடையார், கிபி. 1421.*

1 ஸ்வஸ்திஸ்ரீமத் மஹாமண்டலீஸ்வரன் ஹரிராயவிபாடன் பா

2 ஷைக்குத் தப்புமராயர்கண்டன் பூர்வ தக்ஷிண பச்சிம

3 உத்தர ஸமுத்ராதிபதிஸ்ரீ வீரதேவராய உடையார் குமாரர் ஸ்ரீவீர

4 பூபதி உடையார் ப்ருதிவி ராஜ்யம் பண்ணி யருளா

5 நின்ற சகாப்தம் 1343 ன் மேல் செல்லா நின்ற

6 .... ஸம்வத்ஸரத்து துலா நாயற்று பூர்வ பக்ஷத்து

7 த்ரயோதசியும் புதவாரமும் பெற்ற உத்திரட்டாதி நாள் வட

8 கரை விருதராச பயங்கர வளநாட்டு மேற்கால் நாட்டு கரை

9 ப் போக்கு நாட்டு ப்ரஉற்மதேயம் திட்டை குடியான வித்யாரண்ய

10 புரத்து திருமேற்கோயிலெம் பெருமானான சித்திரமேழி

11 விண்ணகர் எம்பெருமாநின் திருநாமத்துக்காணி ஆன தென் பி

12 டாகைக் குளத்துவாய்க் கீரனூரான கருப்புக்கட்டிக் குறிச்சி

13 யை நோக்கி வரும் நாட்டு விநிவோகம் உட்பட பல முதலும்

14 இவ் எம்பெருமானுக்கு திருவாராதனம் திருப்பணிக்கு குடுத்த

15 முதல் நீங்கலாக வருஷம் ஒன்றுக்கு நாட்டுக்கு கொள்ள நிச்சயித்த

16 வீரசம்பன் குளிகை பணம் 5 இப்பணம் அஞ்சும் ஒழிந்து பட்டி

* இக்கோயில் கல்வெட்டுக்களை 11.1.1987-இல் கண்டறிந்து படிக்க உதவிய இக்கோயில் நிருவாக அதிகாரி திரு பி.கோதண்டராமன் மற்றும் மறைந்த

17 றை பாடாவிரி ஆள்ளமஞ்சி வந்தாலும் கேட்க கடவதல்ல

18 வாகவும் இப்படிக்கு சந்த்ராதித்தவரையும் செல்லக் கல்

19 வெட்டிக் குடுத்தோங் கரைப்போக்கு நாட்டாரோம் இப்படிக்கு

20 இத்தன்மத்துக்கு அகிதம் பண்ணினவன் உண்டாகில் கங்கைக்க

21 ரையிலே குரால் பசுவை கொன்றவன் பாவங் கொள்ளக் கடவன் இப்படிக்கு

22 நாட்டவர் பணியால் கரைப் போக்கு னாட்டுக் கணக்கு ....ய....வன் எழுத்து.

4.8 இடம் : திட்டகுடி வட்டம், கோழியூர் திருவாலங்காடுடையார் கோயில் அர்த்தமண்டபத் தென்சுவர்

காலம் : இரண்டாம் தேவராயர், கிபி. 1430

1 ... வீர விஜயராய உடையார்

2 குமாரர் ஸ்ரீவீர தேவராய மஹாராயற்கு செல்லா நின்ற சகாப்தம் 1352 —ன் மேல்

3 சௌமிய வருஷத்துக்கு செல்லு

4 ம் சாதாருண வருஷம் சித்திரை மீ

5 .... [கரைப்போக்கு] நாட்டுநா

6 ட்டார் தந்திரிமாரோம் கோழியூர்

7 திருவாலங்காடுடைய நாயனார் கோ

8 யில் தானத்தார்க்கு பட்டையம் குடு

9 த்தபடி இந்த நாயனார் கோயில் திருமடை

10 விளாகம் அனைத்து —

11 ..... திரு

12 மடை விளாகத்தில் ஏறும் செட்டியள் கைக்கோ

13 ளர் சேனைக் கடையர் வாணியர் மற்றும் பல குடிக்கு

14 ம் நாட்டு வினியோகம் என்று கேட்க கடவது அல்ல

15 வாகவும் பட்டிறை பாடாவிரி அருங்கேடு பெருங்கேடு

16 உண்டானாலும் இந்த திருநாமத்துக் காணி திருமடை

17 விளாகத்தில் இருக்கிற குடிக்கு ஒரு தாழ்வு என்று கொ

18 ள்ளக் கடவது அல்லவாகவும் இந்த திருமடை விளாகத்தில் இருக்கிற

19 வர்கள் திருவாலங்காடுடைய நாயனார் திருநாமத்துக் காணியில் நன்பயிர்

20 புன்செய் வான்பயிர் புன்பயிருக்கும் நாட்டு வினியோகம் கேட்க கடவது அ

21 ல்லவாகவும் மற்றும் புறவரி புதுவரி பட்டிறை பாடாவிரி அருங்கேடு பெருங்கேடு வந்

22 தாலும் வேறு ஒன்றும் கேட்கக்கடவது அல்லவாகவும் இப்படிக்கு இந்தப் பட்டை

23 யம் கண்டு விட்டு ஆகக் கொண்டு ஏறுங்குடி ஏற்றுவித்து

24 திருநாமத்துக்காணி நன்செய் புன்செய் வான்பயிர் புன்ப

25 யிரும் இந்த குடி முதல் கொண்டு பயிற் செய்வித்து இந்நாயனார் திருவாலங்காடுடைய

26 நாயனாருக்கு பூசை [புனஸ்காரம்] தாழ்வற நடத்தி வேறு ஒன்றுக்கும் அஞ்சாமல் இருக்கவும் இப்படிக்.....

4.9 இடம் : திட்டகுடி வைத்தியநாத சுவாமி கோயில் இரண்டாம் கோபுர உட்புறச்சுவர்

காலம் : இரண்டாம் தேவராயர், கிபி. 4-11-1443*

1 ஸ்வஸ்தி ஸ்ரீமன் மஹா மண்டலீசுரன் ஹரியராய விபாடன்

2 பாஷைக்குத் தப்பும் இராயர் கண்டன் மூவராயர் கண்டன்

3 கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்

4 தக்ஷிண பச்சிம உத்தர ஸதுர்ச் சமுத்திராதிபதி ஸ்ரீவீரப்ர

5 தாப தேவராய மஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்

6 ணி யருளாநின்ற சகாப்தம் 1365-மேல்

7 செல்லாநின்ற உத்ரோற்காரி ஸம்வத்ஸரத்து

8 விருச்சிக நாயற்று பூர்வ பக்ஷத்து துவாதஸியும் சோ

9 ம வாரமும் பெற்ற ரேவதி நாள் வடகரை விருதராச பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு இருங்கோளப்பாண்டி நாட்டு

10 கரைப் போக்கு நாடு திட்டைகுடி உடையார் ஊருடைய

---

* இதே தேதி உடைய கல்வெட்டுக்கள் வெள்ளாற்றங் கரையில் திட்டகுடிக்கு அடுத்துள்ள திருவட்டத்துறை (215/1928-29) பெண்ணாடம் (250/1928-29) இராசேந்திர பட்டணம் (379/ 1958-59) ஸ்ரீமுஷ்ணம் (230/1916) ஆகிய ஊர்களில் உள்ளன. இவைகளிலும் பதினெட்டுப்பற்று நாட்டார், தந்திரிமார்கள்,

நாயனாற்கும் இவ்வூர் பெருமாள் வீற்றிருந்த பெருமாளுக்கும்

11 இன்னாடு பதினெட்டு பற்று நாட்டு தந்திரிமாரோம் சாதன ஸர்வமான்ய பட்டையும் குடுத்தபடி இன்னாயன்மார் திரு

12 மடை விளாகம் நத்தம் நான்கெல்லைக்குக் உட்பட்ட திருவீதிகளிலும் பல குடிகளையும் பல பற்றினுக்குள்ளும் ஏற்றுவித்துக்

13 கொள்ளக் கடவதாகவும் ஏற்றுவித்துக் கொள்ளும் இடத்து இந்த குடிகள் பேற்கு நாட்டுக் காணிக்கை நாட்டு

14 விநியோகம் ஆட்டைக் காணிக்கை பட்டிறை பாடாவிரி பழவரி புதுவரி எப்பேற்பட்ட பல உபாதிகளுமே

15 இன்னாயன்மார் பெரிய நாட்டான் சந்தியாக வரச் சந்தி அமுது செய்தருள இந்த குடிகள் பேற்கு கொள்ளும்

16 வரிகள் சந்திராதித்த வரையும் சர்வமான்ய இறையிலியாக நடக்கும்படிக்கு கழித்த அளவுக்கு சந்திராதித்தவரை

17 யும் பெரிய நாட்டான் சந்தி அமுருது செய்தருள இந்த குடிகள் பேற்கு கொள்ளும் பல வரியும் இன்னாயமார்க்கு சந்த்ரா

18 தித்யவரையும் ஸர்வமாந்ய இறையிலியாக குடுத்தோம் உடையார் திருமடை விளாகம் திருவீதியில் இருக்கும் பல

19 குடிகளுக்கும் கொள்ளும் பல வரியும் பெருமாளுக்கு விளாகச் சீர்மையில் இருக்கும் பல குடிக்குகொ

20 ள்ளும் பல வரியும் இன்னாயமார் கோயிற் பண்டாரம் கைக்கொண்டு இன்னாயமார் பெரிய நாட்டான்

21 சந்தி அம்முது செய்தருள குடுத்தோம் இந்த தன்மத்துக்கு அஹிதம் பண்ணிவர்களும் பெரிய நாட்டான்

22 சந்தி அம்முது செய்தருள பண்ணாதவர்களும் கெங்கை கரையிலே கபிலை பசுவை கொன்ற பாவத்திலே

23 போக கடவர்களாகவும் இப்படிக்கு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் குடுத்தோம் உடையார் ஊருடைய நாயனாற்க்கும்

24 பெருமாள் வீற்றிருந்த பெருமாளுக்கும் பதின்எட்டுப் பற்று நாட்டு தந்திரிமார்ரோம் இவை பெரிய நாட்டு வேளான் எழுத்து.

# 5. திருக்கோயிலூர் வட்டத்தில் சில புதிய கல்வெட்டுக்கள்

சு. இராசகோபால், மதுரை

இக் கல்வெட்டுக்கள் 12.10.1991 அன்று விழுப்புரத்தில் தமிழகத்தொல்லியல் கழகத்தின் கருத்தரங்கை ஒட்டிக் கூடிய பேராளர் சிலர் திரு. கொடுமுடி சண்முகன் அவர்கள் வழிகாட்டலின்பேரில் கண்டு படிக்கப்பட்டவை.

5.1 இடம் : வசந்தகிருஷ்ணாபுரம் (திருக்கோயிலூருக்கருகில்) ஊருக்கருகில் உள்ள பாறைக்கல்வெட்டு.

காலம் : சுமார் 17ஆம் நூற்றாண்டு

1 சார்யபுத்ர தாத்தாச்சார்யருக்கு ஸஹிரணோதக தாராபூர்வக

2 செங்குன்றக்கோட்டத்து கொறுக்கை கூற்றத்து வழுதலம்பட்டு [மண்] டலத்து சிங்கமூலைப்பற்று விரபாண்டிய நல்லூர் சீர்மை குள்பட்ட மேலைக்குன்றம்

3 எல்லைக்கு தெற்கு கரிய பெருமாள் இலவத்தடி தரங்....பெருமாள் கோயிலுள்பட குளம் குளசிற்றேரி மேலைக்காலுக்கு மேற்கு......

5.2 இடம் : வசந்தகிருஷ்ணாபுரம் மோட்டுக் கொல்லைப் பாறைக்கல்வெட்டு

காலம் : சுமார் 12ஆம் நூற்றாண்டு

1 உய்யக் கொண்டி வேளைக்காற தொண்ட

2 மாற் படைச்சந் இவனுக்கு பின் இருப்பேனாகில்

3 தம்மைக்குத் தாநேய் மிணாளன்.

4 கொண்டி வேளக்காறந் வாளி தொண்டமாந்

5 இவநுக்குப் பின்பு இருப்பார் தங்களம்மைக்கு மிணாளர்.

5.3 இடம் : வசந்தகிருஷ்ணாபுரம் - முருகர் பாறை-தூலக்கல்பாறை

காலம் : சுமார் 12ஆம் நூற்றாண்டு

1 ஸ்ரீமேலை

2 க்குன்றத்து து

3 ற்கையார் தேவதானம்

4 இதன் பேர் உடை

5 யபிராட்டி

5.4 இடம் : வசந்தகிருஷ்ணாபுரம் முருகர் பாறை தூலக்கல்பாறை

காலம் : சுமார் 12-ஆம் நூற்றாண்டு

*1 இச்செறுச் செ*
*2 ய்விச்சான் கொ*
*3 ண்ட நாடுடையா*
*4 ன் வீர [கேரளன்]*

5.5. இடம் : வசந்தகிருஷ்ணாபுரம் மாரியம்மன் கோயில் அருகில் உள்ள பாறை.

காலம் : சுமார் 16ஆம் நூற்றாண்டு

*1 சித்திறபானு வருஷம்*
*2 காத்திகை மாதம்*
*3 ஸ்ரீகிருஷ்ணராயர் யி*
*4 ராச்சியம் ஆளுகை*
*5 மேலைக்குன்றத்துப்*
*6 பெருமாள் கோயி*
*7 தேவர்க்கு குறுக்கைப்*
*8 பெருமாள் உதகமாக*

5.6. இடம் : திருக்கோயிலூர் வெண்ணாற்றங்கரை தென்புறம் சித்தேரி பஞ்சணாம்பறை

காலம் : மூன்றாம் குலோத்துங்கன் கிபி.1186

*1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்*
*2 கரவத்திகள்ஸ்ரீ குலோத்து*
*3 ங்க சொழ தேவர்க்கு யாண்டு*
*4 18 ஆவது திருக்கோயி*
*5 லூர் திருவிடைக்கழி எம்பெருமான்*
*6 திருவிடையாட்டத்துக்கு நீர்பா*
*7 ய இவ்வேரியும் வெட்டித் தூம்பு*
*8 ம் இடுவித்தான் திருவரங்கம் பெரிய*
*9 கோயிற் பெரிய திருமாளிகை செய்த*
*10 உலகமுண்ட பெருமாளான அக[ள]ங்*
*11 கப் பிரம்ம மாராயன் உ*

# 6. குடிகள் வெளியேற்றம்

மங்கையர்க்கரசி இராகவன், விழுப்புரம்

முதலாம் இராசேந்திரன் காலத்தில் திருமுனைப்பாடி நாட்டில் வேளாண் குடிகளின் வெளியேற்றம் குறித்து மூன்று கல்வெட்டுக்கள் உள்ளன. இவற்றில் இரண்டு தென்னார்க்காடு மாவட்டம், திருக்கோவிலூர் வட்டத்தில் ஏமப்பூர் வேதபுரீசுவரர் கோயிலில் பிள்ளையார் சந்நிதியில் உள்ளன. இவ்விரண்டு கல்வெட்டுக்களும் 1921ஆம் ஆண்டில் இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் பதிவாகியுள்ளன[1].

மூன்றாவது கல்வெட்டு பண்ணுருட்டி வட்டத்தில் அவியனூர் என்னும் ஊரிலுள்ள சந்தியாத்தா கோயிலின் அருகில் ஒரு தூணில் பொறிக்கப்பட்டிருப்பது அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு இந்திய தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப்பிரிவைச் சேர்ந்த திரு சு. இராசவேலு அவர்களால் படியெடுக்கப்பட்டுள்ளது. மூன்று கல்வெட்டுக்களும் மீண்டும் படியெடுக்கப்பட்டு இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

இம்மூன்று கல்வெட்டுக்களும் முதலாம் இராசேந்திரனின் பதின்மூன்றாவது ஆட்சியாண்டில் அதாவது கி.பி. 1025-26இல் பொறிக்கப்பட்டவை. அரசனின் நேரிடை ஆணை என்கிற வகையில் 'ஸ்ரீமுகப்படி' எனவும் கோனேரின்மை கொண்டான் எனவும் குறிப்பிடுகின்றன.

இக்கல்வெட்டுக்களில் ஏமப்பூர்க் கல்வெட்டு ஒன்றும், அவியனூர்க் கல்வெட்டும் ஒரே பாடத்தைக் கொண்டுள்ளன. ஏமப்பூரின் பிறிதொரு கல்வெட்டில் சிறிது மாற்றம் காணப் படுகிறது.

இக்கல்வெட்டுக்களில் கோயில்கள் பற்றியோ அவற்றிற்கு அளிக்கும் கொடைகள் பற்றியோ செய்திகள் இல்லை. அவற்றிற்கு மாறாக அரசனின் ஆணை திருமுனைப்பாடி நாட்டார்க்குத்

1. இகஆ. 1921, எண். 531, 532.

தெரிவிக்கப்பட்டமை கூறப்பட்டுள்ளது. இவ்வாணையின்படி திருமுனைப்பாடி நாட்டில் கி.பி.1025-26இல் ஏதோ ஒரு காரணத்திற்காக குடிகள் தம் காணிகளை விட்டு வெளியேறி விடுகின்றனர். அவ்வாறு வெளியேறியவர் நிலங்களில் புதியதாகக் குடியேறி பயிர்செய்து அரசாங்கவரி (இறை) யிறுத்தவர்களுக்கு, காணி உரிமை வழங்கப்படும் என்று தெரிவிக்கப்படுகிறது. குறிப்பாக அந்நிலங்களில் கமுகு பயிரிடுபவர்கள் வரவேற்கப்பட்டார்கள்.

சிறிது மாற்றத்துடன் காணும் மூன்றாவது கல்வெட்டில் திருமுனைப்பாடி நாட்டில் பிற ஊர்களிலிருந்து சோழகுலவல்லி நல்லூர் என்ற (தேவதான) ஊரில் குடியேறுபவர்களுக்கு இப்படிக் காணியுரிமை வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. மூன்று கல்வெட்டுக்களிலும் அரசனின் ஆணை பதின்மூன்றாவது ஆட்சியாண்டில் 207-ஆம் நாளன்று வழங்கப்படுகின்றது. இவ்வாணை சேடன் கங்கை கொண்ட சோழன் என்பவனால் எழுதப்பட்டிருக்கின்றது.

முதல் இராசேந்திரன் காலத்தில் திருமுனைப்பாடி நாட்டிலிருந்த பழைய காணிக்குடிகள் அரசின் வரிச் சுமையைத் தாங்காது வெளியேறியிருக்கலாம். இவர்களை மீண்டும் குடியமர்த்த மேற்குறிப்பிட்ட சலுகைகள் அளிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

திருமுனைப்பாடி நாடு இன்றைய தென்னார்க்காடு மாவட்டத்தில் பெண்ணையாற்றின் தென் பகுதியில் பெண்ணைக்கும் கடிலத்திற்கும் இடைப்பட்ட நாடாகும். இந்நாடு கீழ் ஆன்மூர் நாடு, மேல் ஆன்மூர் நாடு, ஏமப் பேரூர் நாடு, அரசூர் நாடு, அவியனூர் நாடு, மேலூர் நாடு, முடியூர் நாடு, தாமர் நாடு, திருவெண்ணெய்நல்லூர் நாடு, கயற்பாக்கை நாடு ஆகிய சிறு நாடுகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது[2].

இக்கல்வெட்டுக்கள் கிடைத்துள்ள இடங்களான ஏமப்பூர், அவியனூர் முறையே ஏமப்பேரூர் நாடு, அவியனூர் நாடு

---

2 Y. Subbarayalu, *Political Geography of the Chola Country*, 1973, p. 78

ஆகியவற்றின் தலைமை ஊர்களாகும். இன்றைய அவியனூரும் ஏமப்பூரும் ஏறக்குறைய 20 கிலோ மீட்டர் இடைவெளியில் அமைந்துள்ளன. ஆகவே இவ்வாணை திருமுனைப்பாடி நாடு முழுவதும் ஒரே நாளில் பிறப்பிக்கப்பட்டிருக்குமோ என்று கருதவேண்டியுள்ளது. இக்கல்வெட்டுக்களின் ஆண்டு, தேதி, எழுதியோர் பெயர் ஆகியவை மேற்கூறிய கருத்தை உறுதி செய்கின்றன. இவை சோழ அரசின் திறமையான ஆட்சி அமைப்பையும் நடுவணரசுக்கும் நாட்டார்க்கும் இருந்த ஆட்சித் தொடர்பையும் விளக்குகின்றன.

6.1 ஏமப்பூர்க் கல்வெட்டு-1

*ஸ்வஸ்திஸ்ரீ பூர்வதேசமும் கங்கையும் கொண்டருளின உடையார் கல்வெட்டு ஸ்ரீராஜேந்தரசோழதேவர் ஸ்ரீமுகப்படி கோனோன்மை கொண்டான் திருமுனைப்பாடி நாட்டார்க்கு நிலை நில்லாது போனார் நிலங்கள் யாண்டு 13ஆவது பயிரேற்றி இறை இறுத்தார்க்கும் நிலைநில்லாது போனார் நிலங்கள் கமுகிட்டார்க்குமே காணி ஆகத் தந்தோம் தாங்கள் அநிலங்கள் பயி.......க இவை சேடன் கங்கை கொண்ட சோழன் எழுத்து யாண்டு 13 ள் 207*

6.2 ஏமப்பூர்க் கல்வெட்டு-2

*ஸ்வஸ்தி பூர்வ்வதேசமுங் கங்கையும் [கொண்டரு]ளின உடையார் ஸ்ரீராஜேந்தர சோழ தேவர் ஸ்ரீமுகப்படி கோனோன்மை கொண் ... ...ர்க்கு அந்நாட்டு ஊர்களில் குடிகள் சோழகுலவல்லி நல்லூரர்க்கு குடியாய்ப்புக்கார் திருமுனைப்பாடித் தந்தாங் காணி ஆன நிலங்கள் தங்களுக்கேய் காணி ஆக தந்தோம் தாங்கள் கைக்கொ... ...ம் ஏற்றிக் கமுகும் இடுக இவை சேடன் கங்கைகொண்டசோழன் எழுத்து யாண்டு 13 ள் 207.*

6.3 அவியனூர்க் கல்வெட்டு (ஒளிப்படம் 1)

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்திஸ்ரீ பூ | 8 | கப்படி கோனோ |
| 2 | ரவ்வ தேச சமுங் | 9 | ன் இன்மை |
| 3 | கெஙகையு | 10 | கொண்டான் |
| 4 | ங் கொண்டரு | 11 | திருமுனைப் |
| 5 | ளிய உடையார் | 12 | பாடி நட்டார்க்கு அன் |
| 6 | ஸ்ரீராஜேந்த்ர | 13 | னாட்டில் நிலை நில்லாது |
| 7 | சோழ தேவர்ஸ்ரீ மு | 14 | போனார் நி |

15 லங்கள் யாண்டு
16 13 ஆவது பயி
17 ரேற்றி இறை யிறுத்
18 தார்க்கும் நிலைநில்
19 லாது போனார் நிலங்க
20 ள் கமுகிட்டார்க்குமே கா
21 ணியாகத் தந்தோ
22 ம் தாங்கள் அன்னி
23 லங்கள் பயிருமே
24 ற்றிக் கமுகும் இடுக
25 இவை சேடன் கங்
26 கை கொண்ட சோ
27 மூன் எழுத்து
28 யாண்டு 13 நா 207

# 7. பேராவூரணி வட்டாரக் கல்வெட்டுக்கள்

அ. கிருட்டினன், தஞ்சாவூர்

7.1 இடம் : பின்னவாசல், சிவன் கோவில் கருவறை முன்மண்டபத் தெற்குப் புறச்சுவர்

காலம் : இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் 13.9.1259

செய்தி : புன்னைவாயில் ஊரவர், அவ்வூரில் திருக்கோவில் எழுப்பவும், அகரம் அமைக்கவும் கழுமலமுடையான் சிங்கப்பெருமாளான வேணாவுடையார்க்கு எல்லைகள் வகுத்து நிலத்தை இறையிலியாக்கி விற்றுக் கொடுத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலசேகர தேவற்கு யாண்டு 22வது கன்னி நாயற்று அபர பக்ஷத்து தசமியும்

2 சனிக்கிழமையும் பெற்ற பூசத்து நாள் வட வெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டுப் புன்னைவாயில் ஊற்குச் சமைந்த ஊர

3 வரோம் சோழ மண்டலத்து உய்யக் கொண்ட வளநாட்டு ராசராசபுரத்து கழுமலமுடையான் சிங்கப்பெருமாளான வேணாவுடை

4 [யாற்கு] நாங்கள் இவ்வூற் திருமேற் கோயில் உகந்தரு[ள]ப் பண்ணவும் அகரம் வைக்கவும் விற்றுக் குடுத்த நத்தத்துக்கு கீழ்பாற்கெல்லை எழுந்திராவே

5 [ங்கை] தோட்டத்தும் அகல சேந்தன் தோட்டத்துக்கும் மேற்கும் தென்பாற் கெல்லை இத்த சேந்தன் தோட்டத்து தென்வேலி நேர் மேற்குற வடக்கும்

6 மேல்பாற் கெல்லை பழவூற் புளிக்கு கிழக்கும் வடபாற் கெல்லை நகரன் குழிக்கு தெற்கு ஆக இசைந்த பெ ருநான்கெல் லைக்குட்பட்ட நத்தத்துக்கும் இத

7 ...கோயிலுக்கும் அகரத்துக்கும் சந்த்ராதித்தவர் இறையிலியாக விற்றுக் கல்லு நாட்டிக்குடுத்தபடி...

8 [மேலை] காயல் எல்லைக்கு மேற்கும் தென்பாற் கெல்லை மாத்தூரும் மானடி குளத்து எதிரணைக்கு வட.....

9 ட்டுக்கு கிழக்கு வடபாற் கெல்லை இக்குளத்து நீர் நிலைக்குத் தெற்குமாக இசைந்தபெருநான் கெல்லை...

10 மாக காடெழுந்து கிடக்கையில் விலை நிச்சயித்த பணம்.......ம் ... பணம் 20ம் ஆக பணம்........

7.2 இடம் : அம்மையாண்டி (சங்கமங்கலம்) சிவன் கோவில் கருவறையின் முன்மண்டபத் தெற்குப்புற அடித்தளம்

காலம் : முதலாம் சடையவர்மன் விக்கிரம பாண்டியன் 11.8.1248

செய்தி : கண்டீசுவரமுடைய நாயனார்கோவில் திருப்பள்ளியெழுச்சிக்கும், திருவமுது படிக்கும், திருவிளக்குச் சந்திக்கும் இறையிலியாக நிலம் கொடுத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடை பன்மரான திரிபுவந சக்ரவத்திகள் ஸ்ரீவிக்ரம பாண்டிய தேவற்கு யாண்டு 8வது ஸிம்ஹ நாயற்று பூர்வ்வபக்ஷத்து பஞ்சமியும்

2 செவாக்கிழமையும் பெற்ற அசுவதி நாள் செயஸிம்ஹ குலகால வளநாட்டுத் தென்னாச்சநத்து தாநவரோம் இக்கண்டியூராந சோழசிகாமணிபுரத்து

3 உடையார் திரு மாற்கண்டீசுவரமுடைய னாயநாற்கு இன்னாட்டு அரசு மருதாந்தகன் செய்யபெருமாளாந சேதிராயரும் மேன்னின்றாந் நாட்டாரான வாணவ

4 ரையரும் இவ்விருவோம் இன்னாயனார் திருப்பள்ளியெழுச்சிக்கு திருவமுதுபடிக்கும் இச்சந்தி திருவிளக்குக்கும் இறைஇலி செய்து குடுத்த தானமாவது கண்டியூர் மேலை வய

5 லில் இநாயநார் தேவதானமான நிலம் இரண்டு மாக்காணியும் இதில் மிகுதிக்குறை வுள்ளடங்க இறைஇலி செய்து திருக்கை மலரிலே நீர்வாத்து திருமலைஇலே

6 கல்வெட்டிக் குடுத்தோம் இருவோம் இப்படிக்கு இவை

7 மருதாந்தகந் செய்ய பெருமளான சேதிராயர் எழுத்து இப்படிக்கு

8 இவை மேன்னின்றாந் நாட்டாரான வாணவதரையர் எழுத்து

9 இப்படிக்கு இவை மேன்னின்றான் கன்னிறைஞ்ச பெருமாளாந

10 விக்கிரமசோழ...... வானவதரையர் எழுத்து

7.3 இடம் : அம்மையாண்டி (சங்கமங்கலம்) சிவன் கோவில் கருறையின் தெற்குப் புறச்சுவர்

காலம் : முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் கி.பி.1259

செய்தி : கண்டீசுவரமுடைய நாயனார் கோவில் திருக்கற்றளித் திருப்பணி செய்ய அந்நாட்டு அரசைச் சார்ந்த மருதாந்தக வானவதரையன், குலோத்துங்கன் ஆகிய இருவர் பதினெட்டு மா நிலத்தை இறையிலி செய்து கொடுத்தமை.

*1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்தி வீரபாண்டிய தே*

*2 வற்கு யாண்டு 5ஆவது ஐயஸிம்ஹ குலகால வள நா*

*3 ட்டு தென்னாச்சனத்து தரவி நாட்டு கண்டியூரான*

*4 சோழ சிகாமணி புரத்து நாயனார் திரு மாற்கெண்டீசுவர*

*5 முடைய நாயனாற்கு இன்னாட்டு அரசு செய்ய பெருமாள்*

*6 மருதாந்தக ..... த்தானவதரையனேன்னும் தாயி*

*7 ன் மேன்னின்றாரான குலோத்துங்க சோ ....ரு*

*8 வோம் இன்னாயனாற்கு திருக்கற்றளித் திருப்பணி முதலான*

*9 திருப்பணிக்கு நாங்கள் இறையிலி பண்ணிக் குடுத்த*

*10 நிலமாவது இவ்வூர் கீழ் பிடாகை மரவடு குறுச்சி நா*

*11 ன் கெல்லைக் கல்லுக்கு உள்பட்ட நிலம் 18 மா இ*

*12 ன்னிலம் பதினெட்டு மாவும் பெருமாள் சாமந்தரி*

*13 ல் மனவாசகங் கடந்தாரான லங்கேசுவர தேவர்*

*14 பெருமாள் திருமுன்பு விண்ணப்பம் செய்து இ*

*15 .... பாலும் கண்டியூர் கீழ்பிடாகை பங்*

*16 .... வில் கழித்து இன்னிலத்தால் வந்த*

*17 .... திருவாய்மலந்தருளினபடி மண்ட*

*18 பத்தில் அறிவித்து முதல்களோடும் கழித்தது இப்படிக்கு மருதாந்தக தேவன் வானவதரையர் எழுத்து இப்படிக்கு தாயின் மேன்னின்றாரான வானவதரையனெழுத்து*

*19 இப்படி திருநாமத்துக்காணியாகக் கல்வெட்டின இது திருப்பள்ளி எழுச்சி ....*

*20 வானவதரையர் சந்தி திருவொத்தசாமம் சேதிராயர் சந்தி இப்படி பூசிக்கடவர்.*

| | | |
|---|---|---|
| 7.4 இடம் | : | ஆத்தாளூர் திருக்காளநாதீசுவரர் கோவில் கருவறையின் தெற்குப்புறச்சுவர் |
| காலம் | : | போசளர், வீரராமநாத தேவர் கி.பி.1264 |
| செய்தி | : | ஆத்தாளூர் திருக்காளீச்சுரமுடையார் கோவிலுக்குச் சோமன் களப்பாள நாயனார் காராண்கிழமை இறையிலியாக அறுபது மா நிலத்தை எல்லைகள் வகுத்துக் கொடுத்தமை. |

*1 ஸ்வஸ்திஸ்ரீ சார்வ புவனச்சக்கரவத்திகள்*

*2 சி போசள வீரராமனா[த] தேவற்க்கு யாண்டு 10ஆவ*

*3 து திரிசூலக்கு[றி]யுடையார் திருக்காளீச்சுரமுடை*

*4 யார்க்கு சோமன்களப்பாளனாயநார் தன்மமா*

*5 ன இன்னாள் கிடந்த வகை காராண்கிழமை இறை*

*6 யிலியாக ...............*

*7 ....... நாட்டு நாட்டவர்க் கல்நாட்டி விலை கொண்டு நா*

*8 யனாக்கு நீருவு இட்டு குடுத்த சாதனப் பட்டயம் காணகு*

*9 றிச்சியில் வழுவழியார் ஒழுகின்படி நிலம் 60 மாவும் நி*

*10 லம் கீழ்பாற் கெல்லை ஆத்தாளூர்ப்பற்றில்*

*11 தேவி வயக்கல்லுக்கு தெக்கோடிய வாக்காலு*

*12 க்கும் உய்யான் செய் மேலை வரம்புக்கு மேக்கு*

*13 ...... வடக்கெல்லை பள்ளிக்கொண்டான்*

*14 வயக்காலும் பெருவழிக்கு வடக்கும்*

*15 மேல்பாற் கெல்லை கூத்தன் ...... கரையு*

*16 ம் நீளத் திலக வரம்புக்கும் வடபாற்கெல்லை*

*17 வாத்தலைக்கு தெக்கும் இப்படி பெருநான்கெல்*

*18 லைக்கு உள்ப்பட்ட நிலம் 60வது மாவும் நாயனார் திருக்*

*19 காளீச்சுரமுடையாற்க்கு காராங்கிழமை நீர்வார்*

*20 த்துக் குடுத்தேன் சோமன் களப்பாளன் எழுத்*

*21 து பைங்காட்டு னாட்டவரில் பை*

*22 ங்காட்டு னாட்டு வேளான் எழுத்து*

# 8. ஆவியூர், அய்யாக்குளம் கல்வெட்டுக்கள்

வெ. வேதாசலம், மதுரை
சொ. சாந்தலிங்கம், மதுரை

**ஆவியூர்க் கல்வெட்டுக்கள்**

காமராசர் மாவட்டத்தில் மதுரை-அருப்புக்கோட்டை சாலையில் அமைந்துள்ளது ஆவியூர். இவ்வூரில் உள்ள இராசேந்திரசோழீசுவரம் என்னும் சிவன்கோயிலின் வடக்குச் சுவரில் இரண்டு பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுக்கள் உள்ளன.

முதல் கல்வெட்டு அழகன் அருளாளப் பெருமாள் சோழகங்கதேவர் ஆவியூர் இராசேந்திரசோழீசுவரர்க்கும், திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார்க்கும் நிலமளித்ததையும், நாச்சியாரைச் சூரியன் பொதியனான செயதுங்கநாடாள்வான் எழுந்தருளுவித்து நிலமளித்ததையும் குறிப்பிடுகிறது. இரண்டாம் கல்வெட்டு ஆவியூர் ஊரெல்லைக்குள் நடத்தப்பெறும் வணிகத்திற்காக வாங்கப்படும் புறவாயம், ஊராயம் என்ற வரிகளை ஊராரே இராசேந்திர சோழீசுவரர் கோயிலுக்குத் திருப்பணிக்காக கோயில் திருக்களிற்றுப்படியிலே நீர்வார்த்துக் கொடுத்ததைத் தெரிவிக்கின்றது. இக்கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் வயலூர் நாடு பாண்டிநாட்டில் இதுவரை அறியப்படாத நாடுகளில் ஒன்றாகும். ஆவியூரும் அதனைச் சார்ந்த பகுதிகளும் இந்நாட்டிற்குள் அடங்கி இருந்துள்ளன.

8.1 இடம் : ஆவியூர் சிவன்கோயில் வடக்குச்சுவர்
காலம் : 2 ஆம் மாற. சுந்தரபாண்டியன் கி.பி.1250

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள்
2 ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு 11வதின் எதிர் ஆவது
3 வயலூர் நாட்டு ஆவியூர் உடையார் இராசேந்திர சோளீசு வரமுடையாற்கு
4 யினாயனாற் [சூரி]யன் பொதியனான செயதுங்கநாடாள்வான் எ
5 ழுந்தருளுவித்த திருக்காமக்கோட்ட நாச்சியாற்கு அழகனருளாளப் பெருமாள்
6 சோழ கங்[க] தேவர் மேலைக்குளத்தில் நம்முழுவான நி
7 ல ....... [இறை]யிலி தேவதாநமாக நீர் வார்த்துக் குடுத்தநில
8 .....ண்டினால் நிலம்.... இந்நிலம் இரண்டு மாகாணியும் இவன் மக்கள் மக்

9 கள் காராண்மையாயுழுது இவனெழுந்தருளுவித்த திருக்காமக் கோட்ட நாச்சி

10 யாற்கு பளப்பேறு சிற்றா[யமுங்] குடுப்பானாகவும் கோடை போகம்

11 அஞ்சிலொன்று ....ம் இமேல்வாரமுங் கொண்டு அமுதுபடி

12 திருப்பணிக்குடலாக ...... திரு .... கல்லிலு

13 ம் செம்பிலும் வெட்டி ...... குமரனான சோ

14 முகங்கதேவன் எழுத்து சூரியன் பொதியனான செயிங்க நாடாள்வான் எ

15 ழுந்தருளுவித்த திருக்காமக்கோட்ட நாச்சியாற்கு சடைய நேரியில் ஆவியூரார் குடுத்த நிலம் .... மாகாணியு மிக்குடி

16 பக்கல் செயிங்க நாடாள்வான் விலை கொண்டு திருசூலக்கல் நாட்டிகுடுத்த நிலம்....நீர் வாத்துக் குடுத்த நிலம்....யார்க்கு

17 குடுத்த நிலம்....ஆக நிலம்.... நிலம் நாலுமாவரையும் எப்பேற்பட்ட இறையிலி[யாய்].....அமுதுபடிக்கும் குடுப்பத[ர்க்கு]

18 டலாக குடுத்தமைக்கு அழகனருளாளப் பெருமாள் சோழகங்க தேவன் எழுத்து இவை இராச நாராயணப் பிரமாதராயன் எ

19 ழுத்து இவை சங்கராயன் எழுத்து இவை இந்நிலங்கள் செயிங்க நாடாள்வான் மக்கள் மக்கள் காராண்மையாய் உழுது ப[ள]

20 ப் பேறு ஏற்றிய[நீ]க்கி மேல் வாரங் குடுப்போமாகவும் கோடைப் போகம் அஞ்சில் ஒன்று குடுப்போமாகவும்

21 இப்படி இந்நிலங்களுமி...டுத்....

8.2 இடம் : ஆவியூர் சிவன்கோயில் - வடக்குச்சுவர்
காலம் : முதல் சடைய. விக்கிரமபாண்டியன், கி.பி.1246

1 உ ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடையபன்மரான திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீவிக்கிரம பாண்டிய தேவற்கு யாண்டு 5-ஆவது வயலூர் நாட்டு ஆவியூர் உடையார் இராசேந்திர

2 சோளீசுவரமுடைய நாயனாற்கு இவ்வூரா இசைந்த ஊரோம் பிடிபாடு பண்ணிக் குடுத்தபடியாவது..... ஊரெல்லைக்குள்பட்ட எடுத்[து] நடத்துவனவு

3 க்கு தலைச்சுமைக்குமுள்ள புறவாயமும் இவ்வூருக்குள் எடுத்தும் தூக்கும் தலைச்சுமைக்குமுள்ள ஊராயமும் இந்நாயனாற்கு திருப்பணிக்குடலாக திருக்களிற்றுப் படியி

4 லே இறையிலி இவ்வாயத்தாலுள்ளது திருப்பணிக்குடலாக சந்திராதித்தவற் இறையிலி செய்வதாகக் கல்லிலும் செம்பிலு வெட்டிக் கொள்க என்று நீர் வார்த்துக் கொ[டுத்தோ]

5 ம் ஊரா இசைந்த ஊரோம் இந்நாயனாற்கு இப்படிக்கு சூரியன் பொதியனான செயிதுங்க நாடாள்வான் தற்குறிக்கும் அறிவன் தேவனார் தற்குறிக்கும்.....

6 கந் தற்குறிக்கும் தேவந் கண்ணுடையான் தற்குறிக்கும் பெருமான் ஆச்சனான ஆவியூர் கண்டப் பேரையன் தற்குறிக்கும் இராண்ட நாச்சனான பூத......

7 டெறிந்தே இக்கோயில்..... [சூரிய] தேவன் எழுத்து இவை அரியந்தப் பேரையன் எழுத்து இவை ஆனந்தக் கூத்தன் எழுத்து இப்படிக்கு இக் கோயில் சிப்பாச்சாரியந் வித்யாதரன் மணிகண்டீசுவர முடையானான விசு மேதாவி எழுத்து.

அய்யாக்குளம் வேளைக்காரர் கல்வெட்டுக்கள்

அண்ணா மாவட்டம் நத்தத்திற்கு அருகிலுள்ள அய்யாக்குளம் என்னும் கண்மாயின் கல்லுமடைக்குக் கிழக்கே வயல் ஒன்றில் உள்ள சிறிய பாறையில் வேளைக்காரர் எனப்பட்ட படைவீரர்களின் பெயர்கள் கல்வெட்டுக்களாகப் பொறிக்கப் பட்டுள்ளன. பதினொன்றாம் நூற்றாண்டின் எழுத்தமைதி உடையவை. வலங்கைப் பிரிவைச் சார்ந்த வேளைக்காரர் சோழரது படையில் பெரும் எண்ணிக்கையில் இருந்துள்ளனர். வேண்டும்போது தமது உயிரையும் தந்து மன்னனைக்காக்கும் தியாகவீரர்களாக இவர்கள் திகழ்ந்துள்ளனர் எனப் பேராசிரியர் நீலகண்டசாஸ்திரியார் கருதுகின்றார். சோழர் ஆட்சியின்போது பாண்டிய நாட்டிற்கு வந்த வேளைக்காரர் பெயர்களே அய்யாக் குளம் அருகிலுள்ள பாறையில் பொறிக்கப்பட்டுள்ளன.

8.3 1. ஸ்வஸ்திஸ்ரீ 2. கண்டன் வே 3. ளைக்காறன் 4. ....ண்டாந்

8.4

1. ஸ்வஸ்திஸ்ரீ இராசேந்திர சோ
2. ழந் வேளைக்காற
3 ந் கண்டன் இப்ப
4. டைச்சன் நொ

8.5

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கண்டன் வே
3. ளைக்காறன் பள்
4. ளி வேழ்மாநம்பி

8.6

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இராசேந்திர சோள
4. ன் கிடாரத்தரை
5. யன்

8.7

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இராசேந்திர
3. சோழந் வேளைக்காறன்
4. கண்ட தேவப்ப
5. டைச்சன் நா

# 9. சித்தையன் கோட்டைக் கல்வெட்டுக்கள்

ப. சங்கரலிங்கம், திண்டுக்கல்

திண்டுக்கல் வட்டத்தில் உள்ள சித்தையன் கோட்டைச் சிவன் கோயிலிருந்து சேதிராயர்களின் நான்கு கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சேதிராயர்கள் பிற்காலப் பாண்டியர் களிடம் சிற்றரசர்களாக இருந்துள்ளனர். இவர்களின் ஆட்சிப் பகுதியாக ஆற்றூர் நாடு, நெடுங்களநாடு போன்றவை காணப் படுகின்றன.

எடுப்புபொத்தி அஞ்சாத பெருமானான சேதிராயன் என்பவன் தனது தந்தையான பொத்தியான் சேதிராயன் பெயரில் சிவாலயம் எடுப்பித்தும், நிவந்தங்களை வழங்கியும், அதனை நிர்வகிக்கும் பொறுப்பை ஆமுண்ண மடத்து ஸ்ரீநந்தி தேவரிடம் கொடுத்துள்ளதையும் இக்கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இப் பகுதியின் அண்மையிலுள்ள தென்கரைகோயில் சொத்துக்களும், தாபாஸ்ய மடம் மூலம் நிருவகிக்கப்பட்டதை அக்கோயில் கல்வெட்டு கூறுகின்றது.

எழுத்தமைதி அடிப்படையில் இக்கல்வெட்டுக்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் இறுதியைச் சார்ந்தது எனலாம். இக்கோயிலை எடுப்பித்த சேதிராயர்களின் பெயரிலேயே இக்கோயில் சேதிராயஈச்வரம் என்று கோயில் இறைவன் சேதிராய ஈச்வர முடையார் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

ஆத்தூர், எரிவீரதளம் எனும் வணிக நகரமாகச் செயல்பட்டுவந்துள்ளது. இப்பகுதியைச் சுற்றிலும் ஐயம்பொழில் ஆயிரத்து ஐநூற்றுவர் போன்ற வணிகக் குழுக்களும் செயல்பட்டு வந்துள்ளதன் மூலம் இப்பகுதியின் வணிகச் சிறப்பும் தெரியவருகின்றது.

9.1 இடம் : மண்டப வடக்குச் சுவரின் அடிப்பகுதியில் உள்ள கல்வெட்டு

காலம் : 13ஆம் நூற்றாண்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ இருபதினொன்பது வளர்பிறை ஈற்ற நாள் 10வது
எடுப்பு பொத்தி அஞ்சாத பெருமானான சேதிராயன் இவன்
பிதா பொத்தியான் சேதிராயன் பேரால்

2 ஆற்றூர் நாட்டு ஆற்றூர்ரான எரிவீரதளத்து மேல்பால் எழுந்தருளிவித்த சேதிராய ஈச்வரமுடையார்க்கு திருப்படி

3 மாற்று உள்ளிட்டு வேண்டும் நிவந்தகளுக்கு இம் நெடுங் கள நாட்டு ஆலங்குளத்து வடபால் வீர புரந்தரன் கு

4 ளத்துக்கு கிழ்ழெல்லை நெடுங்கள நாட்டுச்செட்டி பிராங்கரட்டுக்கு மேற்கும் இதனெல்லை கோரைக் குளத்து.....

9.2 இடம் : மண்டப வடக்குச் சுவர் அடிப்பகுதியில் உள்ள கல்வெட்டு

காலம் : 13ஆம் நூற்றாண்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ ....... ரு எட்டு ..... எடுப்புபொத்தி அஞ்சாத பெருமானான சேதிராயன் ஆச்சாரியார் விட்ட ..... யற்க ..... திரு வானுக்கு கிழக்கு ..... ச் செய்வித்த சோழ கொண்ட ம......றுவத்துக்கும் ஆமுண்ண மடத்து ஸ்ரீநந்திதேவர் இராசேந்தரம் ......யர் பெரிய தேவர் சிஷ்யரில் ஞான முக்தி தேவர்கள் இவருள் ...... ஷயாக்ருத — உள்ளிட்ட பதினென் கலனே ...... இரு தூணிப் பதக்கு நெல்வரிசை நிலத்தில் நடுவிற் கண்ணாற்றிலே ஐந்துமா நிலம் கடமை ...... அந்தராயமும் இன்னொன்மையில் ... யும் அந்தராயமும் வினியோகமும் ..... மழவராயர் நமக்கு சொன்னமையில் இச்சேதிராய ஈச்வரத்துடையார் கோயில் கீழைத் திருவாசலுக்கு வடகிழக்காக வனவுக்கு இவ்வூர் பற்று ஒன்பதின்கலனே இருதூணிப்பதக்கு வரிசை நிலத்தில் கண்ணாற்றிலே ஐந்துமா நிலம் புற இறையிலியாக யிறுப்பதாக வென்றும் இப்படி சந்திராதித்தவர் செல்வதாக இக் கல்லிலும் செம்பிலும் வெட்டுவித்து கடவதாக இவை மருதாந்த ஆற்றா ரான எரிவீரதளத்து மேல்பால் சேதிராய ஈச்வரமுடையார்க்கு கோயிலும் அந்தகாரமும் ...... தாகை..... ம்உள்ப்பட வேண்டுந் திரு முக்கால்வ ..... வெட்ட ..... ன் இன .... இ...... தா.... யும் இ

2 ட்ட இக்கோயிலுக்கு இச்சேதிராயன் இத்தேவர் ஆதிசண்டேச்வரர் நாமத்தால் இவர் கொண்ட காணியும் திருமடை விளாகம் ...... கம் ஏற்றி இதில் மனைஇறையும் தறிஇறையும் செக்கிறையும் உள்ளிட்ட எப்பேர்பட்டனவும் உள்பட பதினொன்றாவதுனெதி ராமாண்டி னெதிராம...டு முதல் தேவ

சேதிராயன் இத்தேவாதி சண்டேச்வர நாமத்தால் இ......
தேவ.......ககவ.....ல் இவ்வூர்கீழைப் புறமடத்து பற்று ஐங்கலவரி ...

3 தான் இறையிலியாகயிட்டாதாகவும் இத்தேவர்க்கு திருப்படி
மாற்றுள்ளிட்டுப் பற்றில் ஒன்பதின் கலத்துக்கு வரிசை நிலத்தில்
அண்ணல்வயக்கல்ப் பற்றிலும் உமைகங்கை வயக்கல் பற்றிலும்
நிலம்.......அந்தராயமும் வினி யோகமும் உகவையும் செல்லும்
அச்சும் காரியவாராச்சியும் வெட்டியும் புளிச்சோறு வரிசை
நிலத்தில்லே கொண்டு திருநந்தவன மாக்கின நிலம் இரண்டுமா
.......ழம் வினியோகமும் உகவையும் செல்லும் அச்சும்
காரியவராச்சியும் பொன்வரியும் மற்றும் எப்பேர்பட்டனவும்
உள்பட இவ்வாண்டு முதல் தேவதான மாகவும் இச்சேதிராயன்
இத்தேவ சண்டேச்வரர் நாமத்தால் இந்நாட்டு நிலம் பட்டானய
தேவ நாராயண சதிர்வேதி மங்கலமும் இச்செட்டி கேசவன் பக்கல்
இவ்வூர் கீழை எதுக்குளத்துப் பற்றில் ஐங்கல வரிசையும் நிலத்தில்
விலை கொல்டு திருநந்தவன பட்டியும் புள்ளிச்சோறும்
பொன்வரியும் மற்றும் எப்பேர் பட்டனவும் உள்ப்பட தேவதான
இறையிலியாக ...... இடுகவென்னும் இப்படி சந்திராதித்தவர்
செல்வதாக

4 ஆக்கின நிலம் இரண்டு மாக்காணியும் பொன்வரியும் மற்றும்
எப்பேர் பட்டனவும் உள்பட காரியவாராய்ச்சியும் வெட்டியும்
பொன்வரியும் மற்றும்

5 இந் செய்ய பெருமானை சேதிராயர் எழுத்து இப்படிக்கு இவை
[மேனின்றான்] நாடாண்டாரான வானவதிராயர் எழுத்து
இப்படிக்கு இவை மேனின்றான் கண்ணிறைஞ்ச பெருமாளான
விக்கிரம இ...டியக் வானவதிரையர் எழுத்து

9.3 இடம் : மண்டப மேற்குபுறச் சுவர் அடிப்பகுதியில்
உள்ள கல்வெட்டு

காலம் : 13ஆம் நூற்றாண்டு

1 ஸ்வஸ்ஸ்ரீதி ...... ருளி ...... 40 ம ...... யில் எழுந்தருளிவித்து ......
னான....... ஆற்றூர்னாட்டு ஆற்றூர் மேல்பால் சேதிராய
ஈச்வரமுடையார்....... காய மேலைத்தெரு.......தகச்.... தறஆஞ்.......

*2 ஸ் ஸந்தானத்துப் பெருமா படிப்புலியூர் உள்மடத்து ஆச்சாரியர் சிஷ்யரில் கிந்தகரை சம்பந்தர்க்கு...... குடிமேல் ...... முற்றிட்ட வேண்டுவன குறவ ஆற்றில் ஒன்பதின் கலம் இருதூணி பதக்கு வரிசை நிலத்தில் உன...யக்கலப் பற்றில் ...... கண்ணாற்றிலும் ஆக ஐந்து மாநிலம்*

*3 வினியோகமும் உகவையும் செல்லும் அச்சும் காரிய வாராச்சியும் வெட்டியும் புள்ளிச் சோறும் ...... மற்றும் எப்பேர்பட்டனவும் வட ...... பதினொன்றாவது னெதிராய்மாண்டின்னெதிராமாண்டு முதல்......மய்ன ...... ல்லியா ...... மயதாகயிடபெற வேணுமென்று ஐயன் ...... வராயன் ......*

*4 ஸ்ரீஇச் சேதிராயன் இச்சேதிராயன் யீச்வரமுடையார் கோயிலில் மேலை திருவாக்கில் அடுக்க......வாத்தி அஞ்சாத மடலத்திக்கும்...... யாயிவை.*

9.4 இடம் : மண்டப தெற்குபுறச் சுவர் அடிப்பகுதியில் உள்ள கல்வெட்டு

காலம் : 13ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ...... யெழு...... து...... ம...... இருக்குடி பெருமான் சேதிராயன் இ...... த்தானன் இதில்...யன்...ல் ஆற்றூர் நாட்டு எப்பேர்பட்டனவும் உள்பட இவ்வாண்டு முதல் தேவதான இறையிலியாகவும் இதை பெறவேணு மய்யன் மழுவராயன் நமக்கு சொன்னமையில் இச்சேதிராயன் இவன் பிதா பொத்தியான் சேதிராயன் கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்து கொள்வதாக இடுகவென......இவை தமி பல்லவராயன் எழுத்து இவை வாணாதிரானெழுத்து.*

*2 பேரால் இவை ...... வீரதளபுரத்து மேல்பால் எழுந்தருளிவித்த ...ச்வரமுடைய திருநந்தவனம் உள்ளிட்டு வேண்டு....ந்தி....முக்கால் வட்டகைக்கு இச்சேதிராயன் இத்தேவாதி சண்டேச்வர நாமத்தால் இவ்வூர்வியாப...... க்கல விலைகொண்டும் பத்துமாவும் திருமடைவளாகம் ......க்கும் ஏற்றி இதில் மனைஇறையுந் தறிஇறையும் செக்கிறையும்......இவை தொண்டை மானெழுத்து.*

# 10. படைவீட்டுக் கல்வெட்டு

சு.இராசவேலு, சென்னை
ப.தெ.பாலாஜி, சென்னை

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், போளூர் வட்டத்திலுள்ள படைவீட்டில் இக் கல்வெட்டு (ஒளிப்படம் 2) அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது*. சிற்றரசர்களாகிய சம்பு வராயர்களது தலைநகரமாக இவ்வூர் சிறந்து விளங்கியது. இங்குள்ள இராஜகம்பீரமலையின் மேலுள்ள கோட்டையின் நான்காவது கிழக்கு வாயிலின் இடப்பக்கப்பாறையில் உள்ள இக்கல்வெட்டு இராஜ கம்பீரசம்புவராயரின் 11ஆம் ஆட்சிக காலத்தைச் (கி.பி.1247) சார்ந்தது. இம் மலையின் மீது அமைந் துள்ள கோட்டைக் கட்டுமானப் பணிக்கு உதவிய தச்சனுக்கும், கருமானுக்கும் வரிச்சலுகை அளித்துள்ளதை இக்கல்வெட்டு கூறுகிறது.

1 சம்பு குலப்
2 பெருமாளான இர்ாச கெம்பீ
3 ரச் சம்புவராயனேன் பத்தா
4 வதுக்கு எதிராம் யாண்டு முதல் முரு
5 க மங்கலப் பற்றுத் தச்சனும் கருமான்னும்
6 இராஜ கம்பீர மலையிலே ஏறித் தேவை
7 செய்கையாலே கடமையிலே தச்சனு
8 க்கு வேலி இரண்டு காசும் கருமான்னுக்கு
9 வேலி இரண்டு காசும் இமலையுள்ள தனைஇயிலு
10 ம் யிழந்து குடுத்தேன்

* சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறைத் தலைவர் முனைவர் கே.வி. இராமன் தலைமையில் இக்கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

# 11. தென்பொன்பரப்பிக்கல்வெட்டுக்கள்

வெ.இரா. துரைசாமி, நாமகிரிப்பேட்டை

11.1 இடம் : தென்ஆர்க்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம், தென்பொன்பரப்பி (அம்மையகரம் அருகில்) ஸ்ரீசொர்ணபுரீச்சுவரர் கோயில் கருவறை மேற்குச் சுவர்.

காலம் : முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன், கி.பி.1230

செய்தி : பொன்பரப்பியாகிய இராசநாராயண நல்லூரில் உள்ள திருநீற்று வீரமாகத சோளீசுரமுடைய நாயனார்க்கு இவ்வூரில் நன்செய் நிலத்தில் முதல்தரத்தில் ஆயிரத்து ஐந்நூறு குழியும், கடைத்தரத்தில் ஆயிரம் குழியும் ஆக இரண்டாயிரத்து ஐந்நூறு குழியுடன், இவ்வூரில் அரசுக்கு வரும் அனைத்து வரிவகைகளும் அரசனால் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டன.

*1* *ஸ்வஸ்திஸ்ரீ அருளிச்செயல் மிலாடாகிய ஜனநாத வள*
*நாட்டு நரையூர்ளக்கூன ற்றத்து பொன்பரப்பி*
*யான இராசநாராயண நல்லூரில் உடையார்*
*திருநீற்று வீரமாகத*

*2* *சோளீசுரமுடைய நாயனார்க்கு இவ்வூர் நன்செய் நிலத்தில்*
*முதல்தரத்திலே தடிசேர ஆயிரத்து அஞ்ஞூற்று*
*குழியும் கடைத்தரத்திலே ஆயிரம் குழியும்*
*குழி இ*

*3* *ரண்டாயிரத்து அஞ்ஞூறும் பொன்வரி உள்ளிட்ட*
*அனைத்தாயங்களும் உட்பட இறையிலியாக*
*யாண்டு பதினாலாவது முதல் புரவரியிலும்*
*கழித்துக் கொடுத்தோம் இந்நிலத்து நா*

*4* *ன் கெல்லையிலும் சூலக்கல் தாவனம் பண்ணி கல்லி*
*லும் செம்பிலும் வெட்டிக்கொள்க இப்படிக்கு*
*இவை பாண்டிமண்டலத்து முத்தூற்றுக் கூற்*
*றத்து கப்பலூரான உலகளந்த*

*5* *சோழ நல்லூர் ஆதித்தன் கணபதி ஆழ்வான்*
*காடுவெட்டிஎழுத்து.உ. துல்யம் உ.*

11.2 இடம் : மேற்படி கோவில் கருவறை மேற்கு மற்றும் தெற்குச்சுவர்

காலம் : 13ஆம் நூற்றாண்டு

செய்தி : சந்திரசேகர நல்லூரில் உள்ள திருநீற்று வீரமாகத சோளீசுவரமுடைய நாயனார்க்கு, கருவிலிப் பூண்டி, காங்கயன் ஏந்தல், கோட்டப்பாடியான சிவபக்த நல்லூர் ஆகிய ஊர்களில் நிலங்களும் பல்வேறு வகை வரிகளும் மானியமாகக் கொடுக்கப்பட்டன.

1 ஸ்வஸ்ஸ்ரீ மதுராந்தக பிரமராயரும் புரவரியாரும்
செய்யக்ககடவபடி சந்திரசேகர நல்லூரு
டையார் திருநீற்று வீரமாகத சோளீச்வரமுடைய
நாயனார்க்கு கருவிலிபூண்டி

2 யும் காங்கயன் ஏந்தலும் கோட்டப்பாடியான சிவபக்த நல்லூரும்
நான்கெல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய்
நத்தப்புன்செய் கரைப்புன்செய்
உள்ளிட்ட நிலத்து முன்பிலாண்டுகள் நீங்

3 கும் தேவதானம் திருவிடையாட்டம் பள்ளிச்சந்த பட்ட
கள் இறையிலியும் நீக்கி நீக்கி நின்ற நத்த
வரியளும் ஏந்தல் பற்று கடமைகளும் பொன் வரி
காசாயம் காத்திகை பச்சை நல் எருது ந

4 ற்பசு வேலி எருது செட்டிகள் வாணிகர் மனை இறை
தறி இறை தோல்ஒட்டு குசம் நிலையாள்
வெட்டி எற்போற்பட்ட யனைத்தாயங்களும்
ஆள்அமஞ்சி தேவையும் உட்பட பதினெட்

5 டாவது முதல் சந்திராரத்தவரையும் இறையிலி
தேவதானமாக குடுத்தோம், இப்படிக்கு இவ்
வூர்களில் நான்கெல்லைகளிலும் சூல்தாபனம்
பண்ணிக் கொள்ளக் கடவுதாகவும் திருக்

6 கற்றளியிலே வெட்டிக் கொள்ளக் கடவுதாகவும்
இப்படிக்கு கணக்கிலும் நிறுத்திக் குடுத்
தோம் இப்படி செய்வதே உ இவை
வாணகோவரையன் எழுத்து உ. இப்படி
விழுப்பாதராயன் எழுத்து .உ.

11.3 இடம் : மேற்படி கோயில் கருவறை தெற்குச்சுவர்
காலம் : கிருஷ்ணதேவராயர், 1523

செய்தி : பொன்பரப்பி ஸ்ரீ திருநீற்று விரமாகத சோளீச்வர முடைய நாயனார்க்குக் கிருஷ்ண தேவராயர் பாலாத்த சீமை மகத மண்டலம் மிலாடாகிய ஜநநாத வளநாட்டு நரையூர்க் கூற்றத்துக் கல்லைக் குறுச்சிப் பற்று சீமை பொன்பரப்பி கிராமம் தேவதான மாகக் கொடுத்தமை.

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ மந் மஹாமண்டலேச்வரந் ஹரியராய விபாடந்*
*பாஷைக்குத் தப்புவராய கண்டந் மூவராய கண்*
*டந் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு*
*கொடாதான் பூர்வ தெஷிண பச்சிம உத்திர*
*சதுச் சமுத்திராதிபதி ஸ்ரீ வீரப்பிரதாப ஸ்ரீ*
*கிருஷ்ணதேவ மஹாராயர் பிறுத்விராஜ்யம்*
*பண்ணி அருளாநின்ற*

*2 சகாப்தம் **1445** இதன் மேற்செல்லாநின்ற சுபாநு*
*ஸம்வத்சரதத்து விருஷப நாயற்று பூறுவபக்ஷத்து*
*திருதியையும் ஸோமவாரமும் பெற்ற புநர்பூச*
*நக்ஷத்திரத்து நாள் பொன்பரப்பி உடையார் திரு*
*நீற்று வீரமாகத சோளீச்வரமுடைய நாயனாற்கு*
*ஆத்ரேய கோத்திரத்து சீவாயந சூத்திரத்து*

*3 காணிக்கும் அமரம் திம்மரபூசுர திம்மரஸர் தேவ*
*தாந பட்டயம் குடுத்தபடி நமக்கு ஸாமி கிருஷ்ண*
*தேவ மஹாராயர் பாலாத்த சீர்மையாந மகதை*
*மண்டலம் மலாடாகிய ஜநநாத வளநாட்டு*
*ஆவிநை தென்கரை நரையூர் கூற்றத்து கல்லைக்*
*குறுச்சி பற்று சீர்மையிலே பொநபரப்பி*
*கிறாமம் ஒன்*

*4 றும் ஸ்வாமி கிருஷ்ணதேவ மஹாராயற்கு தர்மமாக பொன்*
*பரப்பி உடையார் திருநீற்று வீரமாகத சோளீச்*
*சுரமுடைய நாயனாற்கு மஹா பூசைத் திருப்*
*பணி அங்கிரங்கவைபோகம் நடக்கும் படிக்கு*
*ஸர்வமான்யம் ஆக திருநாமத்துக் காணி தேவ*
*தாநம் ஆக தாரைவாத்துக் குடுத்தபடியாலே*

5 பொன்பரப்பி நான்கெல்லைக்குட்பட்ட நஞ்சை புஞ்சை
யிரைப்புஞ்சை கரைப்புஞ்சை இந்த நிலங்களை
நோக்கி வரும் கடமை காணிக்கை நெல்முதல்
பொன்முதல் காத்திகைபச்சை நல்லெருது நற்பசு
செட்டியள் வாணியர் மனைஇறை தறி இறை
ஏற்க

6 டமை பேற்கடமை ஆயம் தலையாரிக்கம் தமை
தச்சுமை தோல்லும் குசமும் வேட்டத்துறை
யும் நிலையாளமஞ்சியும் எப்பேற்பட்ட அனைத் தாயங்களும்
உட்பட சந்திராதித்துவரையும்
யிறையிலி தேவதானமாகக் குடுத்தபடியா

7 லே இவ்வூர் நான்கெல்லைகளிலும் திருச்சூல ஸ்தாவ
னமும் பண்ணிக்குடுத்த படியாலே கல்
வெட்டுவித்துக் கொடுத்தோம் உ இத்
தர்மத்தைப் பரிபாலனம் பண்ணி நடத்தின
வர்கள் கங்கைக்கரையிலே ஆயிரம் சிவ
லிங்க பிரதிஷ்டையும்

8 பண்ணி சிவாலயமும் கட்டி ஸஹஸ்ர கோதானமும்
பண்ணின பலம் பெறக் கடைவர்களாகவும்
உ. சுபமஸ்து.உ....... ஸ்ரீ மஹேச்வர ரக்ஷ

11.4 இடம் : மேற்படி கோயில் முருகன் சந்நிதி கருவறை தென்சுவர்

காலம் : 13 ஆம் நூற்றாண்டு

செய்தி : சந்திரசேகரநல்லூரில் உள்ள திருநீற்று வீர மாகத சோளீச்சுரமுடைய நாயனார் திருக்காமக் காமக் கோட்டம் உடைய அம்பாள் உலகுடைய நாச்சியார்க்குப் பொன்னிட்டாங்குறிச்சி என்ற ஊரில் நன்செய், புன்செய் மற்றும் அனைத்து வரிகளும் மானியமாகக் கொடுக்கப்பட்டன. மேலும் சிறுபுத்தூர் என்ற ஊரில் ஏரிநன்செய் நிலம் நானூறு குழியும் கொடுக்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ மதுராந்தக பிரமாதிராயரும் விலாடராயரும்
குருகுலராயரும் செய்யக்கடவ படி சந்திர
சேகர நல்லூர் உடையார் திருநீற்று வீரமாகத
சோளீசுரமுடைய நாயனார் திருக்காமக்
கோட்டம் உடை

2 ய உலகுடைய நாச்சியார்க்கு பொந்நிட்டாங்குறிச்சி
இவ்வூரில் நன்செய், புன்செய் பொந்வரி காசாயம்
காத்திகை பச்சை நல்லெருது நற்பசு வேலி எரு
தும் தச்சும் கொல்லும் குசமும் நிலையாளும்
வெட்டியும் தோல்ஓ

3 ட்டும் உள்ளிட்ட எப்பேற்பட்ட அனைத்தாயங்களும்
ஆள் அமஞ்சு தேவையும் உள்பட பதினெட்
டாவது முதல் சன்திராதித்தவரையும் இறையிலி
தேவதானமாகக் குடுத்தோம் சிறுபுத்தூரில்
பெரியேரியில் நஞ்சை நிலத்தில் அரை

4 க்காலும் கல்லிடைமாவிரையும் குழிநானூறும்
இவ்வாண்டு முதல் சன்திராதித்தவரையும்
இறையிலி தேவதானமாகக் குடுத்தோம். இப்படிக்கு
இவ்வூர்களில் நான்கெல்லைகளிலும் திருசூல
தாபனம் பண்ணிக்கொள்ள

5 க்கடவதாகவும் இவ்ஒலைப்படியே திருக்கற்றளியிலே
கல்லுவெட்டிக் கொள்ளக்கடவதாகவும்
சொன்னோம் இப்படி கணக்கிலும் நிறுத்திக்
குடுக்க இவை வாணகோவரையர் எழுத்து
இப்படி விழுப்பாதராயர் எழுத்து

11.5 இடம் : மேற்படி கோயில் அம்மன்கோயில் கருவறை வடக்குச் சுவர்

காலம் : 13 ஆம் நூற்றாண்டு

செய்தி : திருநீற்று வீரமாகதசோளீசுரமுடைய நாயனார் திருக்கோயிலில் புவனமுழுதுடையார் எழுந்தருளு வித்த அழகிய புண்ணிய சோளீசுரமுடைய நாயனார்க்கு இலந்தை ஏந்தல் என்ற ஊரை மானியமாகக் கொடுத்ததுடன் அவ்வூரினின்றும் அரசுக்கு வரும் பல்வேறு வரிகளையும் கொடுத்தமை. புவன முழுதுடையார் என்பது சோழப் பேரரசியின் பெயர்.

1 மதுராந்தக பிரமாதிராயரும் விலாடராயரும் குருகுலராயரும்
புரவரியாரும் செய்யக் கடவபடி சந்திரசேகர நல்லூருடையார்
திருநீற்று வீரமாகத சோளீசுர முடைய

2 நாயனார் கோயில் திருநிறை மாளிகையில் புவன முழுதுடையார்
எழுந்தருளுவித்த உடையார் அழகிய புண்ணிய
சோளீசுரமுடைய நாயனார்க்கு இலந்தை ஏந்தலும்
இவ் ஏந்தலுக்கு உடலான புன்செயும் பொந்வரி

3 காசாயம் காத்திகை பச்சை நல்லெருது நற்பசு வேலி எருதும்
தச்சும் கொல்லும் குசமும் நிலையாளும் வெட்டியும்
தோல்லொட்டும் எப்பேறபட்ட அனைத்தாயங்
களும் ஆளமஞ்சி தேவையும் உட்பட பதிந்
நெட்

4 டாவது முதல் சந்திராதித்தவரையும் இறையிலி தேவ
தானமாகக் குடுத்தோம். இப்படிக்கு இவ்வேந்
தவில் நான் கெல்லைக்குள்ளும் திருச்சூலதாபனம்
பண்ணிக் கொள்ளக்கடவதாகவும் இவ்வோலை
ப்படியே திருக்க

5 ற்றளியிலே கல்லுவெட்டிக் கொள்ளக்கடவதாகவும்
சொந்னோம் இப்படிக்கு கணக்கில் நிறுத்தி
குடுப்பதே .உ. இவைவாணகோவரையன்
னெழுத்து .உ. இவை விழுப்பாதராயென
ழுத்து உ.

# 12. தனிச்சியம் கல்வெட்டுக்கள்

நா. வைரவேல், மேலூர்

மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் கொட்டாம் பட்டியிலிருந்து மேற்கே சுமார் 7 கி.மீ. தொலைவில் தனிச்சியம் என்ற ஊரின் அருகிலுள்ள சதுரகிரி மலையின் அடிவாரத்தில் சிதைந்த பிள்ளையார் கோவில் மண்டபத்தின் சுவர்ப் பகுதியிலும் அருகில் சிதறிக்கிடக்கின்ற கற்களிலும் இக்கல்வெட்டுக்கள் உள்ளன. இரு கல்வெட்டுக்கள் முழுமையாகவும், இரு கல்வெட்டுக் கள் முழுமையற்றும் காணப்படுகின்றன. இக்கல்வெட்டுகளின் காலம் கிபி. 16ம் நூற்றாண்டாகும். ஒரு கல்வெட்டில் விஜய நகர மன்னர் அச்சுததேவராயர் (கி.பி. 1529-42) பெயர் குறிப்பிடப் படுகிறது.

முதற்கல்வெட்டு புறமலைநாட்டு வாரணவாசியான சேர நாராயணபுரத்துப் பொன்னமராவதி உதயபராக்கரமமுடையான் அடைக்கலம் காத்தார் ஆதனம் அழகியரான நாகன் என்பவன் தன்மமாக பிள்ளையாருக்கு ஒரு மண்டபம் கட்டினான் என்பதைத் தெரிவிக்கிறது. புறமலைநாட்டு சேரநாராயணபுரம் பிரான்மலைக் கல்வெட்டிலும் இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது. பிரான்மலைக் கல்வெட்டு கிபி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்நதது. இரண்டாம் கல்வெட்டு பொன்னமராவதி திருவைப்பூருடையான் திருவரமகுத்தபெருமாளும் இவ்வூர் உதய பராக்ரமுடையான் அடைக்கலங்காத்தார் ஆகிய இருவரும் பிள்ளையார்க்கு பூசைக்கு திருவிளக்குப்புறமாக திருமலை நாக நாயக்கனின் நாயக்கத் தனமான தனிச்சியம் கிராமத்தில் நிலத்தை விலைக்கு வாங்கி வரிகழித்து தானமாக வழங்கியதைக் குறிப்பிட்டு நிலத்தின் எல்லை களையும் குறிப்பிடுகிறது. தனிச்சியம் இக் கல்வெட்டில் தனிப்புயம் என குறிப்பிடப்பட்டுள்ளது.

12.1

1 இந்த ஆட்கொண்ட பிள்ளையார் திரு ம
2 ண்டபம் புறமலைநாட்டு வாரணவாசி
3 யான சேர நாராயணபுரத்துப் பொன்
4 னமராவதி உதைய பராக்ரமமுடையா

5 ன் அடைக்கலங்காத்தார் ஆதன[ம்]

6 அழகிய ரா[ன] நாகன் தன்மம்.

12.2

1 ச பரமேசுவரன் இராசாதி —

2 குமார் அச்சுதைய தேவ மகா —

3 ருளா நின்ற சகாத்தம் 14 —

4 னி மாதம் 16 உ பூறுவ பக்ஷத்து .....

5 ரத்து நாள் புறமலை நாட்டு வார

6 ணாவாசியான சேர நாராயண புர

7 த்துப்பொன்னமராபதி திருவைப்பூருடையான் திருவரமருத்த பெருமா

8 ளும் இவ்வூர் உதைய பராக்ரமமுடையான் அடைக்கலங்காத்தார் ஆ

9 தனான சோத்து வெறியோடையான் திருமலை நரசைய நாயக்கர் நா

10 யக்க தனமான தனிப்புயத்தில் அடைய பூக்காரனேந்தல் கிழ

11 க்கோடிய வாய்க்காலுக்கு தென்கிழக்கு கீழ் பாற்கெல்லை .......

12 க்கு வடக்கும் தென்பாற்கெல்லை வடகரை புஞ்சைக்கு ......

13 ..... கிழக்குமாக இசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்ட பூக்காரனேந்தல் .....

14 விலையாக இறையுங்கழித்துத் தனிப்புயத்திலாட்கொண்ட பிள்ளையார்க்கு பூசைத்

15 திருவிளக்குப்புறமாக [விலை] கொண்டுவிடுகையில் சந்திராதித்த நடக்க கடவ

16 இந்த தன்மத்துக்குக் குந்தகம் நினைத்தவன் கெங்கை கரையிலும் வாரணவாசியிலும்

17 பசுவைக்கொன்ற பாவத்திலும் பிராமணனைக் கொன்ற பாவத்திலும் போகக் [கடவ] ......

12.3

1 வேட்டை கண்டருளிய இராசாதிராசன் .....

2 ர தம்பிரான் கீழ்புயவல தன்மராய ........

3 ராயர் பிறுதுவியிராச்சியம் பண்ணி ......

4 10உ மேல்செல்லா நின்ற ஜய வருஷம் பங்[குனி] ....

5 தெசியும் புணர்பூசமும் பெற்ற சனி.

# 13. பரமக்குடி வட்டாரக் கல்வெட்டுக்கள்

ஆ. பாலச்சந்திரன், திருத்தங்கல்

13.1 இடம் : காடரந்தகுடி பள்ளியின் பின்புறம் உள்ள 7 அடி உயரக்கல். நாக சிற்பத்தின் கீழ் கல்வெட்டு உள்ளது.

காலம் : கிபி. 1800

*1 ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகனச்*
*2 சகாத்தம் 1702 இதன் மேல்*
*3 செல்லா நின்ற கலியு*
*4 கம் 4881 இதன்மேல்ச்*
*5 செல்லா நின்ற ராசாதிராசன்*
*6 வணங்காமுடி செங்காவல்*
*7 துட்ட நிகழுக இட்ட பரிபாலன்*
*8 இரணிய கெற்ப யாதிபதியான*
*9 குமாரமுத்து விசைய ரெகு[னாத]தேவ*
*10 [மகா] திருமலைச் சேதுபதி*
*11 ராமசுவாமித் தேவரவர்க*
*12 ள் பிறிதிவி ராச்சிய பரிபால*
*13 னம் பண்ணி யருளா நின்ற*
*14 சாறுவரிவருஷம் காற்த்திகை மீ*
*15 26 உ குருவாரமும் பூறுவப*
*16 ட்சமும் ஏகாதெசியும் அசுவதிந*
*17 ட்செத்திரமும் சித்தநாம யோ*
*18 [ககரணமும் பெற்ற]*
*19 சுபதினத்தில் நயினா*
*20 ர் சுவாமிக்கு பூசை க*
*21 ட்டளைக்கு [இரண] உதககதாரா*
*22 பூறுமாக[தா]*
*23 னம் பண்ணிக் குடுத்த*
*24 தன்மம் காடரந்தக்குடி ஏந்*
*25 தல்க் காடுள்படி யின்னாங்*
*26 கெல்லைக்குள்ப்பட்ட ய*
*27 ட்ட போக தேச சுவாமிய*
*28 ங்களும் தானம் பண்*
*29 ணிக் குடுத்தோம் இந்த தன்*

30 மத்தை பரிபாலனம் ப
31 ண்ணினவர்கள் கோடி சிவ
32 லிங்க பிறதிஷ்டை ப
33 ண்ணின பலன் அ
34 டைவார்கள் இந்த தந்
35 மத்துக்கு வரிசால் வாசக3 ரமம்
36 திருப்பணி வேலைக்கு இந்த கிரா
37 மத்தில் உகந்தானேந்தல்லில்
38 வா ..... இந்த தந்மத்துக்கு
39 யாதாமொருவன் விக்நம்
40 பண்ணினவன் கெங்கை க
41 ரையிலே காராம் பசுவைக்
42 கொன்ற பாவத்திலே போ
43 வானாகவும் இந்த தந்ம சாத
44 னம் எழுதினவன் நமசிவா
45 யம் ஆசாரி குமாரன் முத்துக்
46 கறுப்பன் கை எழு
47 த்து உ நயினார் துணை

13.2. இடம் : முதலூர்க்கு தென்மேற்கே கண்மாய்க்குள் தனிக்கல்லில உள்ள கல்வெட்டு

காலம் : கி.பி. 1637

1 சகாத்தம் 1
2 559 மே
3 ல் செல்லாநி
4 ன்ற இசுரவருஷம்
5 ஆனி மீ 31 உ
6 செவ்விருக்க
7 நாட்டில் முத
8 லூருக் குழு
9 மும் கலிங்கு
10 ம் மடை ரண்
11 டும் உடைய
12 நாயன் தழவா
13 யான சேதுப
14 தி காத்த தே
15 வர் உபையம்

# 14 வேதாளை கூரைப்பள்ளிக் கல்வெட்டு

எஸ்.எம். கமால், இராமநாதபுரம்

சேதுபதி நாட்டின் மிகச்சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தவர் கீழக்கரை பெரிய தம்பி மரைக்காயர் என்ற பெரு வணிகரது குமாரர் சேகு அப்துல்காதிர் மரைக்காயர் ஆவர். இவரது இளவல் சேகு இபுறாகிம் மரைக்காயரும் வணிகராவர். பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகளில் சிறந்திருந்த கிழக்குக் கடற்கரை யோர வணிக நகரமாகிய வேதாளையில் இருந்தவர்.

இந்த வணிகரது குடும்பத்தினர் திருப்பணியாக விளங்கும் வேதாளை ஜும்மா பள்ளி வாசலை அடுத்த மைய வாடியில் (இடுகாடு) இந்த வணிகரது அடக்க இடம் மட்டும் கல் கட்டு அமைப்பாக அமைந்துள்ளது. காலத்தின் அழிவைத் தாங்கி அழிந்தும் அழியாமலும் உள்ள இந்த மண்டபம் 12 அடிநீளம் 10 அடி அகலம் கொண்டு செவ்வக அமைப்பில் முழுவதும் கல்லால் அமைக்கப்பட்டுள்ளது. முன் பகுதியில் அழகிய மண்டபமும் அதனையடுத்து சேகு இபுறாகிம் மரைக்காயரது பூத உடலைத் தாங்கியுள்ள சிறு அறையும் அமைந்துள்ளது.

இஸ்லாமியரது வழக்கப்படி இந்த அடக்க இடத்தில் இறந்தவரது தலைப் பகுதியில் (வடக்கு) ஒரு கல்லும், கால் பகுதியில் (தெற்கு) ஒரு கல்லுமாக அழகிய வேலைப் பாடுகளுடன் கூடிய இரண்டு கற்கள் நாட்டப்பட்டுள்ளன. இந்தக்கற்களின் மகுடமாக திருவாசி போல அமைக்கப்பட்டு இரட்டை குடை உருவங்கள் காணப்படுகின்றன. தரை மட்டத்திற்குக் கீழே இரண்டு அடி ஆழத்தில் மணல் மூடியுள்ள அந்தக் கற்களில் வடக்குக் கல்லில் அரபி மொழித் தொடர்களும், தெற்குக் கல்லில் தமிழ்க் கல்வெட்டும் இருப்பது அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது.

இடம் : கால்பகுதியில் நடப்பட்டுள்ள நடு கல்லின் வெளிப்புறத்தில் 10 வரிகளும் உள்புறத்தில் 14 வரிகளும் உள்ளன.

காலம் : கி.பி. 1687

1 கொல்லம் 863 ஆண்டு
2 பிரபவ வருஷம் வைய்காசி 2 தேதி
3 செல்லக்குட்டி மரைக்காயர்
4 நத்துக்கணக்கப்பிள்ளை
5 மழ மரைக்காயர்
6 மாமு நயினா மரைக்காயர்
7 பெரிய தம்பி மரைக்காயர்
8 சேகு இபுராகிம் மரைக்காயர்
9 வெள்ளிக்கிழமை இரவு
10 மரித்தார்.
11 இந்த சன்னதியாவது திருவடி
12 சீமை தேசாதியத்துக்கு மணிய
13 மாக நின்று நசுருக்கள்* ஏழு
14 கரை துறைக் கோவிலும்
15 கட்டு இபுச்சுக் கீர்த்தியும்
16 மிக விருதும் பெத்த பெரிய தம்பி
17 மரைக்காயர் குமாரரான சேகு
18 இபுராகிம் அவர்களுக்கு
19 அல்லாதத் தாலாவுடைய
20 திருமத்தும் திருக்காட்சியும்
21 பிளைபொறுக்குதலும்
22 இரகுமத்தும் இரசுல் சல்லல்லாகு
23 அலைகிவசல்லமுடைய தாவத்து
24 முண்டாவதாகவும் ஆமீன்

---

* நசுருக்கள் = கிறித்தவர்கள்

# 15. சிவகங்கைச் செப்பேடு

வெ. வேதாசலம், மதுரை
நா. சுலைமான், மதுரை

மறவர் நாட்டில் சிவகங்கைச் சீமையின் இரண்டாவது அரசராக ஆட்சிபுரிந்தவர் முத்துவடுகனாதப் பெரிய உடையாத் தேவர் ஆவார். இவர் சுடவர்ணப் பெரியஉடையாத்தேவரின் மகனாவார். முத்துவடுகநாதர் தனது தந்தையின் ஆட்சிக்காலத்தில் கி.பி. 1742-ல் திருப்புவனத்திலிருந்த பிராமணர் திருமலை அவதானியார் மகன் வேங்கடேச அவதானியார்க்கு அம்பலத்தாடி என்ற கிராமத்தினைப் பூமிதானமாக அளித் துள்ளார். இதனைத் தெரிவிக்கும் செப்பேடு இப்போது மதுரை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. பூமிதானமாக அளிக்கப் பட்ட கிராமம் திருப்புவனத்திலிருந்து மானாமதுரை செல்லும் வழியிலுள்ள லாடனேந்தல் என்ற கிராமத்திற்கு அருகில் அமைந் துள்ளது. இச் செப்பேடு மதுரை கூடலழகர் பெருமாள் கோயில் பகுதியில் வாழும் வேங்கடேச அவதானியார் வழிவந்தோர் குடும்பத்தினைச் சார்ந்த திரு. ஜி.இராமசாமி (ஓய்வு பெற்ற கைத்தறித் துறை இயக்குநர்) அவர்களிடமிருந்து பெறப்பட்டது.

செப்பேட்டின் தொடக்கப்பகுதி சிவகுமாரமுத்து இரகுநாதசேதுபதியின் ஆட்சிக்காலத்தில் சக ஆண்டு 1664இல் எழுதப்பெற்றதைத் தெரிவிக்கிறது. அடுத்த பகுதி சிவகங்கை மன்னரின் பெருமையையும் வழியினையும் எடுத்துக்கூறி முத்துவடுகநாதர் பூமிதானத்தினைக் கூறுகிறது. இறுதிப்பகுதி தானமளித்த கிராமத்தின் நான்கு எல்லைகளை எடுத்துக் கூறுகிறது. இச் செப்பேட்டினை எழுதிய ஆசாரி கறுப்பனாசாரி ஆவார்.

1 சுவஷ்த்திறி மன்மகாமண்டலேசுபறன் அறியராய தளவிபாடன் பாசைக்குத்தப்புவரா கண்

2 டன் கண்ட னாடு கொண்டு கொண்ட னாடு குடாதான் பாண்டிய மண்டலத் தாபனாசாரியன் சோ

3 ளமண்டலப் பிறதிஷ்ட்டாபனாசாரியன் தொண்டமண்டலப் சண்டப்பிரசண்டன் ஈளமும்

4 கொங்கும் யாழ்ப்பாண ராயன் பட்டணமும் கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசா

5 திராசன் ராசபரமேசுபரன் ராசமாத்தாண்டன் ராசகுலதிலகன் அரசுராவணராம

6 ன் அந்தண்பிரகண்டன் தாலிக்கிவேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் வடகரைப்புலி

7 சேதுகாவலன் சேதுமூலாரெச்சாதுரந்தன் ராமனாதசுவாமி காரியதுரன்தெர

8 ன் தேவநகராதிபன் தனுக்கோடிகாவலன் தொண்டியந்துரைக் காவலன் ஆத்து

9 ப்பாச்சி கடலில் பாச்சி கரந்தனளதிபன் பொதிகமாமலையான் வைகையா

10 ருடையான் முல்லைமாலிகையான் இரவிகுலசேகரன் செங்காவிக்குடையன் செ

11 ங்காவிச் சிவிகையான் அனுமக்கொடி கருடக்கொடி புலிக்கொடி சிங்கக்கோ

12 டி உடையான் பட்டமானங்காத்தான் பரதேசிகாவலன் செம்பி வளனாடன் பஞ்சகிரி

13 இளளியான் பனுக்குவார்கண்டன் மும்முதயரசன் யரனமும் முரசதிர முத்திலான சேம

14 த்தலை விளங்கும் இருதாளினான் அசுபதி நரபதி கெசபதி இரணியகெற்பயாசி

15 ரெகுநாத சேதுபதியவர்கள் பிற்திவிராச்சிய பரிபாலினம் பண்ணி அருளானின்ற சாலி

16 யவாகன சகாற்தத்து 1664 இதின் மேல்ச் செல்லாநின்ற துந்துபி வருஷம் காற்த்தி

17 கை மீ 1உ சோமவாரமும் காற்த்திகை நச்செத்திரமும் பவுறணிமியும் சுபயோக சுபகற

18 ணமும் பெற்ற சொறாமாபராக புண்ணியகாலத்தில் பாண்டியதேசத்தில் பொதியமா

19 மலையான் வைய்கையாருடையான் புனப்புறளையனாடன் கறந்த நகறாதிபன் முல்லை மா

20 விகையான் பஞ்சகெதி இவுளியான் மும்முதயானையான் அனுமக்கொடி கருடக்கொடி

21 புலிக்கொடி கட்டியபுறவ வலமும் முற்சதிர முத்திலானதி கெங்கும் ஆணை செழுத்திய

22 சிங்கன் மேனாட்டுப் புலி தாவிக்கிவேலி தளங்சிங்க இளஞ்சிங்கம் ஆத்துப்பாச்சி

23 கடலில்பாச்சி தொண்டியன் துரைக்காவலன் இரவிகுலசேகரன் வாசுபேயாகன்

24 அரசுநிலையிட்டச் சுவர்னப் பெரியஉடையாத்தேவரவர்கள்ஸ்ரீ புத்திரன் அரசுநிலையி

25 ட்ட முத்துவடுகனாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் வச்சகோத்திரத்தில் அ

26 வித்தம்பதுவித்திரத்தில் யெசுச்சகாத்தியாபகரான திருப்பூவனத்திலிருக்கும்ஸ்ரீ யப

27 பதி வெங்குடகிரி சிறுகொண்டல் திருமலை அவதானியார் குமாரன் வெங்குடேசு

28 ற அவதானியாருக்கு பூதானப்பட்டயம் பண்ணிக்குடுத்தபடி பூதானபட்டயமாவது பாண்டி

29 யதேசத்தில் கிறுதமலாம வதி தீரத்தில் திருபூவன

30 ச்சீ[ர்] மையில் அம்பலத்தாடி கிராமத்துக்கு யெல்கையாவது கீள்பாற்க் கெல்கை

31 மாங்குடி ஓரிச்செறங்கன்மடை தெற்க்கோடிய வாய்காலுக்கும் கூட்டக் க

32 ல்லூரணி கீள்கரைக்கும் மளங்கங்கால் பெரிய உடைப்புக்கும் மேற்கு தென்பா

33 ங்கெல்கை ராங்கியன் காலுக்கும் வடக்கு மேல்பாங்கெல்கை முத்தாங்குளம்

34 கானத்துக்கு கிளக்கு வடபாங்கெல்லை மாங்குடி காலுக்கும் மண்டிக்கண்மாய் கரை

35 க்கும் தெற்கு இப்படி இசைந்த பெருனாங் கெல்கைக்கு உள்ளிட்ட நஞ்சை புஞ்சை

36 மாவடை மறவடைத் திட்டுதிடல் கீள் நோக்கியகிணர் மேல் நோக்கிய பலன் அரு

37 குதாளி ஆவாரை கொளுஞ்சி முதல் மீன்படுபள்ளம் தேன்படு பொதும்பு சிலதரு

38 பாசாணநிதி நிச்சேபமென்று சொல்லப்பட்ட அஷ்ட்டபோக தேசச்வாமியங்க

39 ளும் தானாதி வினிமயவியக்கிறையங்களுக்கும் யோக்கியமாக சகர்ண்ணிய

40 யோதகர தாராபூறுவமாகப் பட்டயம் குடுத்து அம்பலத்தாடி கிறாமம் பூதானம் பண்

41 ணிக் குடுத்தபடியினாலே ஆச்சந்திர ஆற்க்கம் புத்திரன் பவுத்திரபாறம்பரியாயி

42 ஆண்டுகொண்டு சுகமே இருக்கவும் இந்தபடிக்கி இந்த பூதான சாதனம் மெளுதினே

43 ன் கறுப்பனாசாரி கையெழுத்து உ

# 16. இராமநாதபுரம் செப்பேடு

எஸ்.எம்.கமால், இராமநாதபுரம்

இராமநாதபுரம் சீமையை ஆண்ட சேது மன்னர்களில் சிறந்த ஆட்சியாளர்களில் ஒருவர் முத்து விஜயரகுநாத சேதுபதி என்ற திருவுடையாத் தேவர். கி.பி. 1710 முதல் 1728 வரை மறவர் சீமையின் முடி மன்னராக மட்டும் அல்லாது சிறந்த சிவநீதிச் செல்வராகத் திருப்பணிச் செம்மலாக, தமிழ்ப் புரவலராக, கலைக்குரிசிலாகத் திகழ்ந்தவர். தமது முன்னவர்களைப் போன்று இவரும் சமரச உள்ளத்தினராக வாழ்ந்ததற்குச் சான்றாக அமைந்துள்ள அவரது செப்பேடு ஒன்று அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டது.

இராமநாதபுரம் நகர் ஸ்ரீ கோதண்டராம சுவாமி பெருமாள் ஆலயத்தில் சுவாமிக்கு அபிஷேக நெய்வேத்திய கட்டளைக்கு அளித்துள்ள அந்தப் பட்டயத்தின் நகல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. கிபி. 1710ல் மறவர் சீமை சமுதாயத்தின் அங்கமாக விளங்கிய நானாவகை சாதிகளையும் அவர்களில் பரம வைணவராக நாமம் தரித்திருந்த பேர்களையும் இந்தச் செப்பேடு குறிப்பிடுவதுடன் மன்னரது இந்தக் கட்டளைக்கு உதவிய மன்னரது உறவினர், அலுவலர் ஆகியவர்களையும் இனம் காட்டும் அரிய ஆவணமாக இருக்கிறது.

இராமநாதபுரம் சமஸ்தானத்தின் பராமரிப்பில் உள்ள இந்தக் கோயிலின் கருவூலத்தில் இந்தச் செப்பேடு பாதுகாக்கப்பட்டு வருகிறது.

முதல் பக்கம்

1 ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாத்தம் 1632 யிதன் மேல்
செல்லா நின்ற விக்கு

2 றுதி நாமசம்வச்சரமும் உத்தராயணமும் ஏமந்தரிதுவும் மகா
மாசமும் ஆதிவாரமும் உத்

3 திராட நட்சத்திரமும் சுபயோக சுகிர்தமும் அம்மாவாசியும்
சுபயோக சுபகரணமும் பெத்த மகா உதை

4 யத்தில் புண்ணிய காலத்தில் தேவை நகராதிபன் சேது மூல ரட்ஷா துரந்தரன் இராமநாத

5 சுவாமி காரிய துரந்தரன் சிவபூசா துரந்தரன் பரராச சேகரன் ரவிகுல சேகரன் ஸ்வஸ்தி

6 ஸ்ரீ மகா மண்டலேசுரந் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் ஈழ

7 மும் யாழ்ப்பாணமும் கெசவேட்டை கண்டருளிய ராசாதி ராச பரமேசுரன் ராசமார்தாண்

8 ட மகாராச மகா கம்பீரன் புவனேக வீரன் வீர கஞ்சுகன் அரச ராவணராமன் அடியார் வே

9 ளைக்காரன் கொட்டம் அடக்கி வையாளி நாராயணன் வீரவெண்பா மாலை தளஞ்சிங்க

10 ம் பரராச மன்னர் சிங்கம் ஆற்றுப் பாய்ச்சி கடலில் பாய்ச்சி மதப்புலி அடைக்கலங் காத்தான் தா

11 விக்கு வேலி சத்துருவாதிகள் மிண்டன் பட்ட மானங்காத்தான் துஷ்டராயிர கண்டன் அந்தம்பர கண்

12 டன் சாடிக்காரர்கள் மிண்டன் சாமித் துரோகியள் மிண்டன் பனுக்குவார் கண்

13 டன் பஞ்சவண்ண ராய ராகுத்தன் மேவலர்

14 கள் கோளரி மேவலர்கள் வணங்கு

15 மிருதாளினான் காவிக் குடையான்

16 கருணா கடாட்சன் சொரிமுத்து வன்னியன்

17 சத்திய பாஷா அரிச்சந்திரந் கொடைக்கு கர்ணன் பரத நாடகப் பிரவிணன் இவுளி பாவடி மிதி

18 த்தேறுவார் கண்டன் தளம் கண்டு தத்தளிப்பார் மிண்டன் பரதள விபாடன் அனுமகேதன

19 ன் சகல குணாபி ராமன் சங்கீத சாயிட்சிய வித்யா வினோதன் வீரைவள நாடன் வேதியர் காவல

20 ன் காமமிளி கந்தர்ப்பன் கலை தெரியும் விற்பனன் குன்றினுயர் மேருவில் குன்றாவளை

21 பொரித்தவன் திலகனுதல் மடவார்கள் மடலெழுத வருசுமுகள் நிஷ்கிரக வீர தண்ண

22 டை சேமத்தலை விளங்கு மிருதாளிநான் தொண்டியந் துறைக்காவலன் துரக ரேபந்தன் வை

23 கை வளநாடன் வன்னியராட்டந் தவிழ்த்தான் மதுரையார் ஆபத் சகேயன் வீரலட்சும்மி கா

24 ந்தன் விசையலட்சுமி சம்பன்னன் சகல சாம்பிராட்சிய லட்சுமி நிவாசன் துகவூர் கூற்

25 றத்து காத்தூரான குலோத்துங்க சோழநல்லூர் கீழ் பால்
விரையாத கண்டனில் இ

26 ருக்கும் சேதுபதி வங்கிஷாதிபனான ஸ்ரீ ஹிரணிய கெர்ப்பயாசி
ரவிகுல சேகர ரகுநாத சேது

27 பதி காத்த தேவரவர்கள் இராமநாதபுரம் முகவை கோதண்டராம
சுவாமி அபிஷே நெய்

28 வேத்தியக் கட்டளைக்கு தர்ம சாசனப் பட்டயம் குடுத்தபடி தர்ம
சாசனமாவது நம்மு

29 டைய ராச்சியத்திலே இருக்கிற க்ஷத்திரிய வைசிய சூத்திரர்
முதலான ராசாக்கள் வெலமா

## இரண்டாம் பக்கம்

30 ர் கவரையள் மல்லக செட்டியன் துளுவ ராசபுத்திராள்
கோமுட்டியள் பட்டு நூல்

31 க்கார செட்டியள் தொட்டியர் சலுப்பர் வலசை இடையர்
சேணியர் சிவியார் போ

32 யிண்டமார் முதலான நானா வகைச் சாதியிலே திருநாமம் தரித்த
பேருகளுக்கெல்லாம் கு

33 டிக்கு ஒரு பணமும் கோபால கட்டளை இடையர் பெண்
கொண்டு குடியாக இருக்

34 கிறவனுக்கு குடிக்கு ஒரு படி நெய்யும் வருஷந்தோறும் குடுத்து
வரச் சொல்லிக் கட்டளை

35 யிட்டபடியினாலே அரன்மனைக் கட்டளை இயமணீசுவரம்
நெல் 10 கலம் சின்னையா சீமை சி

36 க்கள் நெல் 30 கலம் சின்னைத் தேவர் சீமை மானாமதுரை நெல்
20 கலம் அடுக்க ...... இளையான்கு

37 டி நெல் கலம் அகிலாண்ட ஈசுபரிபுரம் நெல் 5 கலம்
கண்ணனூர் நெல் 5 கலம் அஞ்சு கோட்டை

38 நெல் 5 கலம் உளையூர் நெல் 2 கலம் தேவர் நெல் 30 கலம்
பவானு சங்கரராமராச நெல் 20

39 கலம் மாப்பிள்ளைத் தேவர் நெல் 5 கலம் கட்டைத் தேவர் நெல்
10 கலம் நாலு கோட்டை உடையா

40 த் தேவர் நெல் 20 கலம் முத்து ரகுநாத தேவர் நெல் 5 கலம்
ரகுநாத சேர்வைக்காரன் நெல் 10

41 கலம் செல்லத் தேவர் நெல் 4 கலம் முத்து சேருவைக்காரன்
நெல் 3 கலம் முத்தப்ப சேருவைக்கார

42 ன் நெல் 3 கலம் கிட்டினப்ப சேருவைக்காரன் நெல் 3 கலம்
தாண்டவந் சேருவைக்காரன் நெல்

43 5 கலம் கருப்பணன் சேர்வைக்காரன் நெல் 2 கலம்
தெய்வகன்னி நெல் 2 கலம் ராமு சேருவைக்கார

44 ன் நெல் 3 கலம் சோமநாதன் சேருவைக்காரன் நெல் 2 கலம்
அதியாரி பிச்சா சேருவைக்காரந் நெல்

45 2 கலம் அடப்பம் திருவுடையார் நெல் 1 கலம் ஊளியம்
ரெகுநாத சேருவைக்காரன் நெல் கலம் 1

46 திருவுப்பிள்ளை நெல் 3 கலம் ஆவுடையப்பன் நெல் கலம் 1
ஆக நெல் 30 கலம் தெய்வச் சிலையய்யன்

47 நெல் கலம் 1 உலகப்ப மணியக்காரன் நெல் கலம் 5 இந்தப்படி
தர்மசாசனப் பட்டயம் கட்டளை

48 யிட்டபடியினாலே சந்திரவர்க்கம் வரை பாரம்பரிய
குடுத்துவரக் கடவாராகவும்

49 தர்மத்தை பரிபாலனம் பண்ணினவர்கள் கோடி சிவலிங்க
பிரதிட்டையும் கோடி விஷ்ணு பிரதிஷ்டையும் பண்ணின
சுகியதத்தை அடைவாராகவும் இந்த

50 தர்மத்திற்கு அகிதம் பண்ணினவர்கள் காசி சேதுவிலே காராம்
பசுவையும் பிரா

51 மணரையும் மாதா பிதாவையும் வதை பண்ணின தோஷத்திலே
போகக்க

52 ட வராகவும் இந்தப்படிக்கு தர்ம சாசனப் பட்டயம் குடுத்தோம்
கோதண்டராம

53 சுவாமிக்கு ஸ்ரீ ஹிரணிய கர்ப்பயாசி சேதுபதி காத்த ரெகுநாதத்
தேவ

54 ................................ இந்தப்

55 படிக்கு தர்ம சாசனப்பட்டயமும் எளுதினேந் ஆனந்த நாத
நாளங்கராயந் புத்திரன்

56 சின்னதம்பி நாளங்க ராயன் எழுத்து

# 17. மகாசாத்தா ஓலைப்பட்டயம்

அ.சந்திரபோஸ், கொத்தமங்கலம்

சிவகங்கை மன்னர் பெரிய உடையாத் தேவர் அவர்கள் 4.5.1742 அன்று சிறுவாச்சி அய்யனார் கோயிலுக்குப் பூமிதானம் பண்ணிக் கொடுத்த செய்தியை இந்த ஓலைப்பட்டயம் விளக்கு கிறது*. மூல ஓலை நடுவில் முறிந்துள்ளது. இதனால் இது சென்ற நூற்றாண்டில் (19ஆம் நூற்றாண்டில்) பிரதி எடுக்கப் பட்டுள்ளது. மூல ஓலையும் பிரதி ஓலையும் தேவகோட்டை வட்டம், சிறுவாச்சியில் உள்ள ஸ்ரீ முத்துநாயகி அம்மன் கோயிலில் பூசை செய்துவரும் திரு.ஆ.மு. முந்தானைக் குருக்கள் மகன் திரு. முத்துச்சாமி குருக்கள் என்பவரிடம் உள்ளன. முத்தூற்றுக் கூற்றம் பற்றிய ஆய்வுக்கும், சிவகங்கை மன்னர் வரலாற்றுச் சிறப்பு பற்றிய ஆய்வுக்கும் இவ்வோலை உறுதுணையாக இருக்கும். இந்த இரண்டு ஓலை களிலும் ஒரு சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

முதல் பக்கம்

*1. சுபஸ்ரீமன் மகாமண்டேசுரன் அரியராயிரத் தளவிபாடன் பாசைக்கி தப்புவராயிரகண்டன் மூவராயிரகண்டன் கண்டனாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான்*

*2 பாண்டி மண்டல திஷாபனாச்சாரியன் சோழமண்டல பிரதிசாபனாசாரியன் தொண்ட மண்டல பிரதிகாபனாசாரியன் ஈழமும் கொங்கும் யாட்பாணமும் கெசவேட்டை கொண்டருளிய ரா*

*3 சன் ராசபறமேசுறன் ராசமாற்தாண்டன் ராசகம்பீரன் துஷ்டரில் துஷ்டன் துஷ்ட நிக்கிரகன் சிஷ்ட பரிபாலனன் அஷ்டதிக்கு விசையன் மலை கலங்கினாலும் மனங்கலங்காத*

*4 கண்டன் தாலிக்கு வேலி சத்திராதியன் மிண்டன் இரவிகுலசேகரன் சொரிமுத்து வன்னியன் வலியச்சருவி வளியில் கால்நீட்டி ஆற்றில் பாச்சி கடலில் பாய்ச்சி*

*5 மதப்புலி அடக்கலங்காத்தான் தொண்டியந் துறைக்காவலன் மனுக்கோடி சேகரன் தனுக்கோடி காவலன் தேவை நகராதிபன் செம்பி வளநாடன் தி...*

* இவ் ஓலைப்பட்டயத்தைத் தேடவும், படிக்கவும உதவிய தஞ்சை எஸ்.இராமச் சந்திரன், மேலப்பனையூர் கரு. இராசேந்திரன் ஆகியோருக்கு நன்றி.

6 பன் சேதுமூலரட்சாதுறந்தரன் பரிக்கி நகுலன் சொல்லுக்கு
அரிச்சந்திரன் பொருமைக்கி தன்மர் புகலுக்கு ராமர் வில்லுக்கு
விசையன் இவுழி பாவடி மிதித்தேறுவார் கண்

7 டன் அஷ்ட லெட்சுமி பிரசன்னன் சாமி காரியா துறந்தரன்
சேமத்தலை விருந்து குடையான் ராமராயர் கிஷ்டனராயர்
வீரவசந்தராயர் மல்லிகுசந்தராயர் பிருத்வி

8 ராச்சியம் பண்ணியருளாநின்ற சாலியவாகன சகார்த்தம் 1663ன்
மேல் செல்லானின்ற துந்துமி வருஷம் வைகாசி மீ 5 உ
சுக்கிரவாரமும் அஷ்த்த நச்சத்திரமும் சுப

9 யோக சுபகால கூடிய சுபதினத்தில் குளந்தை நகராதிபந் ஸ்ரீ மன்
அரசு நிலையிட்ட பெரிய உடையாத் தேவரவர்கள் தளகர்த்தம்
வன்னி நகராதிபந் ரா சின்னப்பன் சேறுவை

இரண்டாம் பக்கம்

10 முத்து வீரப்பன் சேருவைகாரரவர்கள் முத்துநாட்டில் மகாசாஷ்தா
பெரியனயினாருக்கு பூமிதான சாதனம் பன்னிக்குடுத்தபடி
பூமிதான சாதனமாவது நீர் பா

11 ய்ந்து நெல் விளையும் நெடுமானியேந்தலில் தம்மனைகுடி
மடைப்போக்கு பெரும்படி 4 மாவுக்கு விரையடி பதிங்கலம் யிந்த
விரையடிப் பதிங்கலத்துக்கு கிள்பாற்கெல்லை

12 பச்சேரி வாசல் மண்டகம் சொக்கனாத மண்டகத்துக்கு மேற்கு
தென்பாற் கெல்லையாவது குளத்துக்குள் செய்வாக்காலுக்கும்
குமிளன் குண்டு வடகடைக்கு வடக்கே மே......

13 நெடுமானிக் கண்மாய் கறை பெரிய ஆலுக்கும் அய்யனார்
கோவிலுக்கும் கிழக்கு வடபாற்க்கெல்லையாவது காச்சாகுடி
வாக்காலுக்கு தெற்கு இப்படி பெருநான் கெல்லைக்குட்பட்ட

14 மாவடை மறவடை நஞ்சை புஞ்சை திட்டு திடல் சகலமும்
சருவமானியமாக தானசாதனம் பன்னிக் குடுத்தபடியினாலே
இதுவே சாதனமாக சந்திராதித்தற் பிரவேசம் உள்ள வரைக்கும்

15 பாலசந்திற விற்த்தியாய் ஆண்டுகொள்ள கடவாராகவும் இந்த
தர்மத்தை பரிபாலினம் பண்ணினபேற் கோடி சிவலிங்க
பிரதிஷ்டையும் கோடி விட்டுணு பிரதிஷ்ட்டையும் கோடி கன்

16 னிகாதானமும் பண்ணிந சுசிற்தத்தை அடையக் கடவராகவும்
இந்த தற்மத்துக்கு விகாதம் பண்ணின பேற் கெங்கைக்கரையிலே

கோகத்தி பிறாமனாகத்தி சிசுகத்தி பண்ணின தோஷத்திலே போவாராகவும்

17 இப்படிக்கி இந்த சாதன மெலுதினேன் முத்துநாடு நாட்டுக் கணக்கு வேலாயுதப் பெருமாள்பிள்ளை மகன் முத்துவீரப்பன் கையெலுத்து அய்யனார் பெரியனயினார் துணை காளீஷ்பரி துணை ரா சின்ன

18 ப்பன் சேறுவை

# 18. தலைப்பலி

ப. தெ. பாலாஜி, சென்னை

செங்கை அண்ணா மாவட்டத்தில் பல இடங்களில் வீரர்கள் தங்கள் தலையை அறுத்துக் கொள்வது போன்று முழு உருவில் 2 முதல் 3 அடி வரை உயரமுள்ள கற்சிலைகள் இக் கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டன. இத்தலைப் பலியிடல் பழங்காலம் முதற்கொண்டு அண்மை நூற்றாண்டுவரை வழக்கில் இருந்துள்ளது.

புகார் நகரில் நடந்த இந்திரவிழாவினை விவரிக்கும் சிலப்பதிகாரம்[1] தங்களது வேந்தன் எப்போதும் வெற்றி கொள்ள வேண்டி, போர்க்களத்திலே வெற்றிவாகை சூடிய வீரர்கள், அந்நகரத்தை காத்துவரும் காவல் பூதத்தின் முன் உள்ள பலிபீடிகையின் மீது தங்கள் தலைகளைக் கொய்து வைத்தனர் என்று கூறுகிறது. இருப்பினும், கொற்றவை வெற்றித் தேவியாகக் கருதப் பட்டதால் போர்க் காலங்களில், வீரர்கள் தங்களுக்கு வெற்றி பெற்றுத் தருமாறு, பெரும்பாலும் கொற்றவைக்கு தலையைக் கொடுத்தனர்.[2] போரில் வெற்றி பெற்ற பிறகும் இப்பலி இடப்பட்டது. போரிலே அடைந்த வெற்றிக்கு நன்றிக் கடனாற்ற எயினர்கள் தங்கள் தலையை அறுத்து, அங்கிருந்து பொங்கி எழும் குருதியை விலையாக ஏற்றுக்கொள்ளுமாறு கொற்றவையை வேண்டினர்.[3]

பலியிட முனைந்த மறவர்கள் தங்கள் குலக் குமரி ஒருத்தியைக் கொற்றவையாகப் பாவித்தனர்.[4] அக்குமரியை அழகு படுத்திய பின் கலைமானின் முதுகிலே ஏற்றிவைத்து வண்ணக் குழம்பு, சுண்ணப்பொடி, சந்தனம், சோறு, எள்ளுருண்டை, கொழுப்புச் சாதம், பூ, மணப்பொருட்கள் முதலியனவற்றைப் படைத்து வணங்கினர். பலி இடும் சமயம் பறை, ஊதுகுழல் ஆகியவை ஒலித்தன. வீரர்கள் முதலில் பலி பீடிகையையும், பின் கொற்றவையையும் தொட்டு வணங்கியபின் தலையைப் பலியாக இட்டனர்.[5]

1. சிலப்பதிகாரம், இந்திர விழவூர் எடுத்த காதை, வரிகள் 81-88
2. சிலப்பதிகாரம், வேட்டுவவரி, வரிகள் 7-8.
3. சிலப்பதிகாரம், வேட்டுவவரி, வரிகள் 16-17.
4. சிலப்பதிகாரம், வேட்டுவவரி, வரிகள் 21-43.
5. சிலப்பதிகாரம், வேட்டுவவரி, வரி 45.

இப்பலி பிற்காலத்திலும் வழக்கத்தில் இருந்து வந்துள்ளது. பல இடங்களில் காணப்படும் துர்க்காதேவி முன் ஒரு பக்தர் தன் தலையை அறுப்பதைச் சித்தரிக்கும் பல்லவர்காலச் சிற்பங்கள் மாமல்லபுரம் (வராக குகை), சிங்கவரம், திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் குகைக்கோயில்களில் காணப்படுகின்றன. சோழர் களது காலத்திலும் இப்பழக்கம் வழக்கில் இருந்துள்ளதை புஞ்சை, புள்ளமங்கை மற்றும் மயிலாடுதுறை ஆகிய இடங்களிலுள்ள கோயிற் சிற்பங்களால் அறியலாம்.

11ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த முதலாம் குலோத் துங்கனது வீரத்தை விவரிக்கும் கலிங்கத்துப்பரணி[6] பலி எவ்வாறு இட்டனர் என்பதைக் கூறும்போது வீரர்கள் குடுமியோடு கூடிய தலையை கழுத்தின் அடியில் அறுத்து பலிபீடத்தின் மீது வைக்க, யோகினிப் பெண்கள் (காளிக்கு ஏவல் செய்யும் பெண்கள்) அத்தலைகளை இடக்கையிலும், வாளை வலக்கையிலும் ஏந்தி தேவியின் முன் சமர்ப்பித்தனர் என்று கூறுகிறது. இதே நூல், தலை மட்டும் அல்லாது உடலில் உள்ள உறுப்புகளையும் தேவிக்கு சமர்ப்பித்ததைக் கூறுகிறது.[7] இதை நவகண்டம் என்றும் அழைப்பர் (உடம்பின் ஒன்பது பாகங்களை வெட்டி இறுதியில் தலையைக் காணிக்கையாக்குதல்).

மேற்கூறிய இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகள் மன்னன் நலம் பெறவும், போரில் வெற்றி பெறவும் தலைப்பலி இட்டதைக் கூறுகின்றன. எனவே, எடுத்த செயல் வெற்றியாக முடியவேண்டும் என்பதே இப்பலியிடலின் முக்கியக் குறிக் கோளாகக் கொள்ளலாம்.

பல்லவர்களது காலத்தில் தான் முதன்முதல் இப்பலியிடலைச் சித்திரிக்கும் சிற்பங்கள் காணப்படுகின்றன. தொடர்ந்து சில சிற்பச்சான்றுகள் அரிதாகக் கிடைக்கின்றன.

பலிக்காகச் சின்னங்கள் அமைத்தல் 15-16ஆம் நூற்றாண்டு களில் பெருவழக்கமாகியதாகத் தெரிகிறது. திருவேற்காடு, மணிமங்கலம், குன்றத்தூர், நாசரத்பேட்டை, கோலூர், பெரும்புதூர், திருவொற்றியூர் ஆகிய இடங்களில் இவ்வகை

6. கலிங்கத்துப்பரணி, கோயில் பாடியது, வரி 111, 112, 116.

7. கலிங்கத்துப்பரணி, கோயில் பாடியது, வரி 109.

சிற்பங்கள் காணப்படுகின்றன. இவையாவும் பல்லவர்களது பாணி (துர்க்கையோடு சித்திரித்தல்) யிலிருந்து விலகி, 2 அல்லது 3 அடி உயரமுள்ள தனிச்சிற்பமாக, வாள் ஏந்திய வீரர் ஒருவர் தன் தலையை அறுத்துக்கொள்வது போன்று சித்தரிக்கின்றன (ஒளிப்படம் 3 - 4).

இவைகளை கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

1 நின்ற கோலத்திலுள்ள வீரனின் இடக்கை தன் தலைமுடியைப் பிடித்துக் கொண்டிருத்தல்; வலக்கையிலுள்ள வாள் கழுத்தின் ஊடே பாய்ந்து இருத்தல் (மணிமங்கலம்).

2 நின்ற கோலத்திலுள்ள வீரனது இடக்கையில் ஏந்தியுள்ள வாள் கழுத்தின் ஊடே பாய்ந்து இருத்தல்; வலக்கை கீழ்நோக்கிய ஒரு வாளைப் பிடித்திருக்கும் (மணிமங்கலம், குன்றத்தூர், திருவேற்காடு).

3 நின்ற கோலத்திலுள்ள வீரன் நீண்டவாளின் இருமுனைகளை இருகையினால் பிடித்து கழுத்தைச் சீவுவது போன்று இருத்தல் (திருவேற்காடு).

4 இடக்கையில் அறுத்த தலையின் குடுமியைப் பிடித்திருத்தல், வலக்கை உயர்த்தி வாள் ஏந்தி இருந்தல், வலக்கால் முன்நோக்கியும், இடக்கால் பின்னோக்கியும் இருத்தல் (கோவூர், நாசரத்பேட்டை, பெரும்புதூர்).

இவையாவும் பெரும்பாலும் துர்க்கை கோயிலின் முன் காணப்படுகின்றன. இக் கற்சிலைகளில் கல்வெட்டுக்கள் இல்லை என்றாலும் இவற்றின் அமைப்பு மற்றும் அமைந்திருக்கும் இடம் இச்சிலைகள் வீரர்கள் பலி இட்டதன் நினைவாக நிறுவப்பட்ட சின்னங்கள் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

மேற்கண்ட வகைகளில் நான்காவது வகை அதன் சிற்ப அமைதியைக் கொண்டு மற்றவைகளைக் காட்டிலும், சிறிது பிற்காலத்தன (17-18 ஆம் நூற்றாண்டு) எனலாம். ஏனென்றால் இவை அளவில் சிறியவையாகவும் (1 முதல் 1 1/2 அடி உயரம்) தெளிவற்ற புடைப்புச் சிற்பங்களாகவும் காணப்படுகின்றன. மேலும் இச்சின்னங்களில் சித்தரிக்கப்பட்டுள்ள வீரனின் அமைப்பில் மாறுதல் ஏற்பட்டுள்ளது. அதாவது இடதுகை அறுபட்ட தலையை அதன் குடுமியைக் கொண்டு பிடித் திருக்கிறது. வலதுகை மேல் நோக்கிய வாள் ஏந்தி உள்ளது. இவ்வுருவ அமைப்பு, கலிங்கத்துப்பரணியில் கூறப்படும் யோகினிப் பெண்கள் பலி இடப்பட்ட தலைகளை இடக் கையிலும், வாளை வலக்கையிலும் ஏந்தி காளியிடம் சமர்ப்பித்த செயலை நினைவுபடுத்துவது போல அமைந்துள்ளது.

# 19. அவிநாசிக் கல்வெட்டில் அரிய செய்திகள்

மா. கணேசன், கோயம்புத்தூர்

கோவை மாவட்டம் அவிநாசியில் பெருங்கருணாலயச் செல்வியார் கோயில் மகாமண்டபச் சுவரில் கோவிராசகேசரி ஸ்ரீவீரபாண்டியனின் 8ஆம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட ஒரு கல்வெட்டு உள்ளது. அவிநாசி ஆளுடைய நாயனார்க்குத் தேவதானமாக வழங்கப்பெற்ற சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர் பற்றியும், இவ்வூர்க் குடிகளான வெள்ளான் ஊராருக்கும் பூலுவ ஊராருக்கும் இத்தேவதானத்தில் உள்ள கடமை பற்றியும் சில செய்திகள் கூறப்பட்டுள்ளன.

இவ்வூர் தேவதானமாக வழங்கப் பெற்ற போதிலும் இவ்விரு ஊரார்க்கும் காணியாக விளங்கியதாகக் காணப் படுகின்றது. இவ்விரு ஊரார்களும் 'ஏழரை எண்பட்ட குடிகள்' என்று கூறியிருப்பது புதுமையான செய்தி.

கொங்கு இருபத்து நான்கு நாடுகளில் வடபரிசார நாடு என்பது பேரூர் நாட்டைச் சார்ந்த நாடாகும். வடபரிசார நாட்டில் வெள்ளா நாடு பூலுவ நாடு என்பன இவ்விரு குடிகளின் நாட்டுச் சபைகளாகும். இவ்விரு குடிகட்கும் அவ்வவ்வூர்களில் ஊர்ச் சபைகளும் இருந்தன. அவ்வூர்ச் சபைகளுக்குப் பல கடமை களிருந்தன. நாட்டுச் சபைகள் இவ்வூர்ச் சபைகளின் நடவடிக்கை களை மேற்பார்வையிட்டன. இவ்வாறு மேற்பார்வையிட்டதன் விளைவாக ஏழரை எண்பட்ட இக்குடிகள் மீது மேற் கொண்ட நடவடிக்கைகளை அவிநாசிக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.

கல்வெட்டுச் செய்தி

"கோவிராசகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீவீரபாண்டிய தேவர்க்கு 8 ஆம் ஆண்டு மாசித் திங்களில்
வடபரிசார நாட்டு வெள்ளா நாட்டாரும் பூலுவநாட்டாரும்
சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர் வெள்ளானூர் பூலுவர் ஊர்
'ஏழரை எண்பட்ட குடி'களுக்குப் பிடிபாடு (ஆணை ஓலை)
கொடுத்த பரிசாவது, இந்நாட்டில் அவிநாசி ஆளுடையார்
தேவதானமாய் இவர்கள் காணியான செம்பியன் கிழானடிநல்லூர்
'ஏழரை எண்பட்ட குடி' இருக்கிற குடிகளிலே வெள்ளான்

குடியிலே இரண்டு குடியும் பூலுவக்குடியிலே இரண்டு குடியும் ஆக நாலுகுடி எட்டாவதின் எதிராமண்டு முதல் நீக்கிக் குடுப்போமாகவும். நீக்கிக் குடுத்த குடி நாலுக்கும் 'வளர் குடி எழு குடி' என்று சொல்லக் கடவோமல்லவாகவும், இப்படிக்கு மக்கள் மக்கள் சந்திராதித்தவரை செல்வதாகவும்... இப்படிக்குச் சம்மதித்துப் பிடிபாடு குடுத்தோம் வடபரிசார நாட்டு வெள்ளா நாட்டோமும் பூலுவ நாட்டோமும்".

இவ்வோலையில் பன்னிரண்டு வெள்ளாளரும் ஒரு பூலுவரும் கையொப்பம் இட்டனர். இவர்களில் சிலர் எழுதப் படிக்கத் தெரியாமையினால் 'சைகை செய்து மாட்டெறிந்தேன்' என்று கூறியுள்ளனர்.

இவ்வோலையில் சேவூர் வெள்ளான் ஊராரும் பூலுவ ஊராரும் 'ஏழரை எண்பட்ட குடி' என்று குறிப்பிடப் பட்டிருப்பதன் பொருள் விளங்கவில்லை. நீக்கப்பட்ட குடி நாலும் 'எழுகுடி' 'வளர்குடி' என்று இனிமேல் கூறப்பட மாட்டாது என்பதும், அவ்வாறாகவே உள்ளது. 'ஏழரை எண்பட்ட குடி' 'எழுகுடி ' என்று மாற்றிக்கல்லில் வெட்டப் பட்டுள்ளதோ என்ற ஐயம் எழுகின்றது.

நீக்கப்பட்ட நான்கு குடிகளும் எழுகுடி, வளர்குடி எனக் கூறப்பெறமாட்டாத நிலையில் தகுதி இழந்தவர்களாக இப்பிடி பாட்டில் கூறப்பட்டுள்ளனர். மேலும் இந்நான்கு குடிகளும் எதிலிருந்து நீக்கப்பட்டனர்? என்ற குறிப்போ, ஏன் நீக்கப் பட்டார்கள்? என்பதற்கான காரணங்களோ கூறப்பெறவில்லை. ஆயினும் கல்வெட்டில் செம்பியன் கிழானடிநல்லூர் இவர்கள் காணியாக இருந்தது என்ற குறிப்பை நோக்கும்போது காணி உரிமையிலிருந்து இவர்கள் நீக்கப்பட்டிருக்கக்கூடும் எனக் கருத முடிகின்றது. காணியாளர்களாக உள்ளவர்கள் சமூகத்தில் பெருந்தனக்காரர்களான முதல் மரியாதை பெறக்கூடிய குடிகளாக விளங்குவதோடு பெருநிலக்கிழார்களாகவும் விளங் கினர். இத்தகைய உயர் நிலையிலிருந்து குடி இறக்கம் செய்யப் பட்டவர்களாக இக்குடிகள் காணப்படுகின்றனர்.

இக்குடிகள் நீக்கப்பட்டதற்கான காரணம் இக்கல் வெட்டில் காணப்பெறவில்லை. அதனைக் கல்லில் குறிப்பது தகுதிக்குறைவாக, மரியாதைக் குறைவாகக் கருதப் பட்டிருக்

கக்கூடும். இச்சூழ்நிலையில் இதே அரசனின் இதே ஆட்சி யாண்டில் பங்குனித் திங்களில் வெட்டப்பட்டுள்ள வேறொரு கல்வெட்டுச் சிறிது விளக்கம் தருகின்றது. அக்கல்வெட்டில் கூறப்பட்ட செய்தி பின்வருமாறு அமைந் துள்ளது. இரண்டாம் கல்வெட்டுச் செய்தி முதலில் "தண்டீச்வரன் ஓலை ....." என்ற வெண்பாவில் தொடங்கி 'ஆதிசண்டேச்வரன் ஆதேசம்' எனக் குறிப்பிடுகிறது.

> "வடபரிசார நாட்டில் சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர் ஊரும் ஊராளிகளுக்கும் நாயனார் அவிநாசியாளு டையார் தேவதானமாய்த் தங்கள் காணியான செம்பியன் கிழானடிநல்லூர் வீரபாண்டியதேவற்கு யாண்டு எட்டாவது பங்குனிமாதம் முதல் குடியேற்றுவதாகவும் ஏற்றுமிடத்து இதன் எதிராமாண்டு(9) இறை....டும் உண்பார்களாகவும், இதன் எதிராமாண்டு (10) முதல் கார்நெல் கலம் செலுத்துவதுடன் மேலிறை, கீழிறை முதலாகப் பலவரிகளையும் ஆண்டுதோறும் இறுப்பதாக" என்று எழுதப்பட்டுள்ளது.

இங்கு 8 ஆம் ஆண்டு முதல் குடியேற்றுமாறும் 9ஆம் ஆண்டு முதல் இறை...டும் உண்பார்களாகவும் எனக்குறிப்பதோடு 10ஆம் ஆண்டு முதல் நெல்லும் பலவகை வரிகளும் செலுத்தும்படியும் கூறப்பட்டுள்ளது. இவ்விடத்தில் எழுத்துச் சிதைந்துள்ளதால் பொருள் தெளிவாகவில்லை. நீக்கப்பட்டதற் கான காரணம் இங்கும் 'ஊரும் ஊராளிகளும்' என்பதும், 'தேவதானம் இவர்கள் காணியாக உள்ளது' என்பதும் முந்தைய கல்வெட்டில் குறித்த குடிகளையும் அவர்கள் காணி உரிமையையும் குறிப்பதாகக் கருதலாம். அவர்கள் குடியேற்றுவது, கார்நெல் அளப்பது 24 வகையான வரிகளைச் செலுத்துவது ஆகிய கடமைகட்கு உரியவர்களாகின்றனர். காணியாளர்கள் இக்கடமை களிலிருந்து தப்பக்கூடாது என்பது வெள்ளாநாட்டார், பூலுவ நாட்டார் கருத்துப்போலும். ஏழரை எண்பட்ட குடியிலிருந்து நீக்கப்பட்ட நான்கு குடிகளும் இக்கடமைகளிலிருந்து தப்பி யிருக்கக்கூடும். எனவே குடிநீக்கம் செய்யப்பட்டிருக்கலாம். வரி செலுத்தாதவர்களை ஒரு சமூகம் செய்ய வேண்டிய கடமை களிலிருந்து பிழைத்தவர்களாகக் கருதிக் குடி நீக்கம் செய்தனர் போலும்.

# 20. வரலாற்றுப் பார்வையில் பனையூர், குளமங்கலம்

கரு.இராசேந்திரன், மேலப்பனையூர்

புதுக்கோட்டைக்குத் தென்மேற்கில் சுமார் 23 கி.மீ தூரத்தில் பனையூர், குளமங்கலம் ஆகிய ஊர்கள் அமைந்துள்ளன. வரலாற்றில் மத்திய காலத்தில் இவ்வூர்களின் சிறப்பிற்குரிய காரணங்களான அரசியல், சமுதாயப் பின்னணியின் தன்மை களை ஆராய்வதே இக்கட்டுரை.

கதவன்குடி கண்மாய்க்கு மேற்கில் பனையூரும், கிழக்கில் குளமங்கலமும் இன்றைக்கு தனித்தனி வருவாய்க் கிராமங்களாக உள்ளன. இவை கோனாட்டின் தென்பகுதியான தென் கோனாட்டில் ஒல்லையூர்க் கூற்றத்திலுள்ள கூடலூர் நாட்டைச் சேர்ந்த ஊர்களாகும். கூடலூர் நாடு பூலாங்குறிச்சிக் கல்வெட்டிலே இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பனையூர், குளமங்கலம் பகுதிகளில் காணப்படும் பெருங்கற்படைக்கால மக்களின் பண்பாட்டுச் சின்னங்கள் இப்பகுதியில் அக்காலம் முதல் மக்கள் வாழ்ந்து வருவதைக் காட்டுவதாக உள்ளன. இவ்விரு ஊர்களும் அம்பலம் என்ற நடுவர் மன்றத்தை மையமாகக் கொண்டு கிழக்கு மேற்காக மூன்று வீதிகளும், தெற்கு வடக்காக மூன்று வீதிகளும் வடகிழக்கில் கோவிலும் ஊரணியும் ஒரே அமைப்பாக அமைக்கப்பட்டுள்ள பாங்கு அக்காலத்திலேயே இவ்வூர்கள் திட்டமிட்டு அமைக்கப் பட்ட மாதிரிக் கிராமங்கள் என்பதைப் புலப்படுத்துகின்றன. இன்றைக்கு உள்ள பனையூர் தோன்றுவதற்கு முன்பு பனையூருக்கு வடக்கிலுள்ள தெற்கு வயல், பனையல் வயல் என்னுமிடத்தில் பழைய ஊர் இருந்ததாகவும் அது மண்மாரி பொழிந்து அழிந்ததன் காரணமாக இன்றைய பனையூர் தோன்றியதாகவும் கூறப் படுகிறது. “சீர் சேந்தமங்கலம் நத்தம் வடக்கு ஏந்தல்” என்ற குறிப்புகள் காணப்படுவதும் பனையூர் கிராமத்திற்குட்பட்ட தெற்கு வயல், பனையல் வயல் பகுதிகளில் பூமியினடியில் 2 அடி ஆழத்திற்கு கீழ் பானை ஓடுகள் கிடைப்பதும் இப்பகுதியில் பழைய ஊர் இருந்ததும் அது சீர் சேந்த மங்கலம் என்று அழைக்கப் பட்டதும் தெரிய வருகிறது.

பனையூர் குளமங்களத்திலுள்ள கல்வெட்டுக்கள் பலவும் இவ்விரண்டு கிராமங்களையும் ஒரு சேர பனையூர் குளமங்கலம் என்றே குறிக்கின்றது. புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள குடுமியான்மலை மீதுள்ள சுப்பிரமணியர் கோவில் கல்வெட்டு, வயலோகம் விசுவநாத சுவாமி கோவில் கல்வெட்டு, கீரனூர் உத்தம சோழீச்சுரமுடையார் கோயில் கல்வெட்டு ஆகிய வைகளிலும் பனையூர் குளமங்கலம் என்ற தொடரே காணப் படுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக பனையூர் சிவன் கோவி லிலுள்ள கல்வெட்டொன்று மேற்படி கோவிலின் இறைவனையும், இறைவியையும் குறிக்குமிடத்து "பனையூர் குளமங்கலம் உடையார் அறிவீசுரமுடைய நாயனார் அகிலமீன்ற நாச்சியாரும் இந்நாச் சியார் கோயிலும்", என்ற குறிப்பைத் தருகின்றது. கி.பி. 15ஆம் நூற்றாண்டளவில் கானாடு கோனாடு கார்காத்த வேளாளர்கள் கையில் இருந்தது. மேற்படி கார்காத்த வேளாளர்களால் பனையூர் குளமங்கலம் மறவர்களுக்கு நிலக்கொடையின் பொருட்டு கொடுக்கப்பட்டதும் கட்டுரை ஆசிரியரிடம் உள்ளதுமான பனையூர் செப்பேடுகளில் "பனையூர் குளமங்கலம் ஊரா அமைந்த ஊரவர் அனைவருள்ளிட்டாரும் கூடி கரைப்பிரியல் பட்டயம் வகையாவது.... பனையூரில் மனைக் காணியாச்சி அம்பலம் நடுவீதிக்கு மேற்கு ரெண்டாம் வீதி 100 அடி அகலம் தெற்கு வடக்கு கோட்டைக் கரை கண்ட மட்டுக்கும் நிப்பது குளமங்கலமும் யிந்தப்படி நிற்பது" என்று கூறுகிறது. குளமங்கலம் மறவர்களுக்கு பனையூரில் நிலமும் மனைக் காணியும் பனையூர் மறவர்களுக்கு குளமங்கலத்தில் நிலமும் மனைக் காணியும் விட்டுக் கொடுக்கப்பட்டது. சமீபகாலம் வரை பனையூர் குளமங்கலம் மறவர்கள் தங்களுக்குள் எழுதிக் கொள்ளும் ஓலை என்ற ஊர் மடல்கள், உடன்படிக்கைகளில் கூட பனையூர் குளமங்கலம் ஊரார் உறவின் முறையார் என்று எழுதிக் கொண்டதுக் இரு ஊர்கள் ஒருசேர இருந்தமையைக் காட்டுகின்றன.

பனையூர் குளமங்கலம் இரண்டு ஊரும் கோட்டைகளைத் தன்னகத்தே கொண்டிருந்த ஊர்களாகும். குளமங்கலம் கிராமத்தை ஒட்டி குளமங்கலத்திற்குக் கிழக்கிலும், தெற்கிலும் கோட்டை வாசல்கள் என்ற பெயரில் பெரிய தூண்கள் இன்றைக்கும் உள்ளன. பனையூரிலும் குளமங்கலத்திலும் கோட்டைவாசல் கருப்பர், மேலவாசல் அய்யனார், மேலவாசல்

பிள்ளையார், தெற்குவாசல் கருப்பர் என்று கோட்டையின் காவல் தெய்வங்கள் அழைக்கப்படுவதும் மேலே கூறப்பட்ட செப்பேடுகளில் தெற்கு கோட்டைக் கரை வடக்குக் கோட்டைக் கரை என வரும் தொடரும் இவ்விரு ஊரிலும் கோட்டைகள் இருந்ததற்கு ஆதாரங்களாகும்.

புதுக்கோட்டை மாவட்டம் திருவிளாங்குடி கோவில் கல்வெட்டு வரலாற்றின் மத்திய காலத்தில் இப் பகுதியில் வழங்கிய காசுகளைப் பற்றிக் கூறும்போது பனையூர் பராந்தக சருப்பேதி மங்கலம் காசு என்ற ஒரு காசினை அறிமுகப் படுத்துகிறது. அக்காசின் மூலம் பனையூர் பராந்தக சதுர்வேதிமங்கலம் என்று அழைக்கப்பட்டது எனக் கருதலாம்.

பனையூர் குளமங்கலம் காராளரது கிராமங்களாகும். காராளர் தங்களது உதவிக்காகவும் பாதுகாப்பிற்காகவும் தெற்கே இராமநாதபுரம் பகுதி மங்கலநாட்டு மறவர்களைக் கூட்டி வந்து கானாடு கோனாட்டு பகுதிகளில் குடியமர்த்திய காலை பனையூர் குளமங்கலத்திற்கு 242 மறவர் குடும்பபங்கள் அழைத்து வரப்பட்டு காராளர்களால் குடியமர்த்தப்பட்டனர். காராளர்களுக்குப் பின் மறவர்கள் சீரோங்கிய செயல் முறையால் இவ்விரண்டு ஊரும் மேம்பாடடையச் செய்தனர் எனலாம். இந்த நவீன காலத்தில் கூட நடுவர் மன்றத்திலிருந்து ஊர்க்காரியங்கள், கோயில் திருவிழாக்கள் நடத்துவது, கோவில்களை நிர்வகித்தல், வழக்குகளை ஆராய்ந்து நீதி வழங்கல், நீர்ப்பாசனப் பணிகளை முறைப்படுத்துதல் போன்ற செயல்களில் திறம்படச் செயல்பட்டனர் எனலாம்.

பனையூர் சிவன் கோவிலிலுள்ள அர்த்த மண்டபத்தின் கிழக்குச் சுவரில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தினதாக கருதக்கூடிய கல்வெட்டு காணப்படுவதால் இக்கோவில் கி.பி.12 அல்லது 13ஆம் நூற்றாண்டளவிலாவது அதற்கு முன்பாகவாவது கட்டப்பட்டிருக்க வேண்டும். இங்குள்ள கல்வெட்டுக்களைக் கொண்டு இக்கோயில் பல கால கட்டங்களில் கட்டப்பட்டிருப்பதை அறியலாம். இக்கோவிலில் உள்ள ஸ்ரீ அகிலாண்டீசுவரி அம்மன் கோவிலின் மேற்குச் சுவரில் உள்ள 15 ஆம் நூற்றாண்டிற்குரிய கல்வெட்டு ஒன்று பனையூர் குளமங் கலத்தில் வியாபாரிகள் வாழ்ந்தனர் எனக் காட்டுகிறது.

"கூடலூர்நாட்டு பனையூர் குளமங்கலம் உடையார் அறிவீசுர முடைய நாயனார்அகிலமீன்ற நாச்சியாரும் இந்நாச்சியார் கோயில் திருநிலைக்காலும் ஒரு பாக்கல்லும் நீங்கலாக கோயில் முழுதும் நாச்சியாரும், தென்கோனாட்டு ஒல்லையூர்க் கூற்றத்து சுந்தர சோழபுரத்து பனையூர் அறிவுடைப் பெருந்தெருவிலும் குள மங்கலம் அச்சிரகண்டான் பெருந்தெருவிலும் உள்ள நகரத்தார் தன்மம்"

மேற்படி சிவன்கோவிலிலுள்ள மற்றொரு கல்வெட்டு கி.பி. 1417ஆம் ஆண்டிற்குரியது. விஜயநகர மன்னர் வீர விருப்பண உடையார் காலத்தது. "பொன்னமராபதினாட்டு வடபற்று கூடலூர் நாட்டு பனையூர் குளமங்கலத்து கோனாட்டு நாச்சியார் திருநான்கு நம்முடைய ஊரில் இடையன் பொன்னகோன், எழும்பன் நம்முடைய திருநாளுக்கு வண்டியில் கிடாய்க்குட்டி ஏற்றி வந்து சந்திகள் தோரும் கிடாய்க் குட்டிகள் வெட்டினது கொண்டு இவனுக்கு" என்று இறைவழிபாட்டின் குறிப்பு காணப் படுகிறது. பனையூர் அம்பலத்திலுள்ள கல்வெட்டொன்றில்

வல்ல நாடு நாட்டவர் பொன்னமராவதி நாட்டு பனையூர் குளமங்கலம் ஆச்ரயம்

என்று குறிக்கப்பட்டுள்ளது. கிரனூர் உத்தம சோழீசுரமுடையார் கோயில் கல்வெட்டு "செவ்வலூர் குளிபிரை வினைவெட்டி தருகையில் ஆசிரியம் பனையூர் குளமங்கலம்" எனக் குறிக்கின்றது.

பனையூர் கிராமத்தைச் சேர்ந்த தற்போது பொன்னனூர் என்று அழைக்கப்படும் பெருநல்லூரில் உள்ள கல்வெட்டு ஒன்றில்

ஸ்வஸ்தி ஸ்ரீ குலசேசகர தேவற்கு யாண்டு 4 வது கானநாட்டுப் பெருநல்லூர் பொன்னமராவதி நாட்டு வடபற்று பனைஊர் குள மங்கலத்து ஊரவர் ஆசிரியம்

எனக் கூறுகிறது.

இங்கே பனையூரிலும் பிறவிடங்களிலும் உள்ள பல கல்வெட்டுக்கள் பனையூர் குளமங்கலம் ஆசிரியம் எனக் குறிப்பிடுகிறது. ஆசிரியம் என்பது அஞ்சினான் புகலிடம் எனக் குடுமியான்மலைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது. ஆசிரியம்

என்பது பாடிகாவல் முறை என சு.இராசகோபால் அவர்கள் கருதுகிறார். ஆசிரியம் கல்வெட்டு அஞ்சினான் புகலிடம் கல்வெட்டு அனைத்தும் தோரணவாயில், பூரணகும்பம் குத்துவிளக்குகள் காணப்படுவதால் இவை அனைத்தும் ஒரே செய்தியைத் தெரிவிப்பவை எனக் கருதலாம்.

பனையூர் குளமங்கலத்தவர் வல்லநாடு, கீரனூர் மற்றும் கோனாட்டின் சில பகுதிகளில் பாடிகாவல் செய்தனர். பாடிகாவல் செய்வதற்குத் தனித்திறமையும் ஆண்மையும் வேண்டும். இதன் காரணமாக இவர்கள் நாட்டரசு நிலைக்கு உயர்த்தப்பட்டனர்.

# 21. திருத்தங்கல் பகுதி நுண்கற்கருவிகள்

ஆர்.பாலச்சந்திரன், திருத்தங்கல்

தமிழகத்தில் நுண்கருவிக்காலம் கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முந்தையதாகத் தொல்லியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். தமிழ்நாட்டில் தூத்துக்குடி சாயர்புரம் திருச்செந்தூரைச் சேர்ந்த தேரிகளிலும் இவைகள் கிடைக்கின்றன. திருமங்கலம் வட்டத்தில் தே.கல்லுப்பட்டி, திடியன் ஆகிய ஊர் மலை அடிவாரங்களிலும், போடிநாயக்கனூர் அருகில் கோடங்கிபட்டி, தத்தனோடை ஆகிய இடங்களிலும் கடைக்கற்கால நுண்கருவிகள் காணப்படுகின்றன. தற்போது மதுரை மாவட்டத்தில் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

திருத்தங்கல்

காமராசர் மாவட்டத்தில், மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து அர்ச்சுனா, காயற்குடி போன்ற ஆறுகள் தோன்றி வைப்பாற்றில் இணைந்து பின் கடலில் கலக்கின்றன. இந்நதிகள் மனிதஇன ஆரம்ப நாட்களுடன் தொடர்புடையனவாக விளங்கியதற்குத் தற்போது சான்றுகள் கிடைத்துள்ளன.

காமராசர் மாவட்டத்தில் சாத்தூர் வட்டத்தில் அர்ச்சுனா ஆற்றிலிருந்து 5 கி.மீ. தொலைவில் திருத்தங்கல் அமைந்துள்ளது. திருத்தங்கலைச் சுற்றியுள்ள பகுதிகளான திருத்தங்கல்(தெற்கு), திருத்தங்கல் (செங்குளம்), அர்ச்சுனா ஆற்றின் தென்கரையில் பூரணசந்திராபுரம், வடகரையில் கட்டப்புளி, ஆலமரத்துப்பட்டி (இலந்தைக்குளம்), வைப்பாற்றின் கரையில் வெம்பக்கோட்டை (கோட்டைமேடு) காயற்குடி ஆற்றின் கரையில் சுப்பிரமணியபுரம் ஆகிய பகுதிகளில் தொல் பழங்கால மனிதர்களின் வாழ்விடங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இப்பகுதிகளில் கடைக்கற்கால மனிதர்களின் கருவிகளான நுண்கருவிகள் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன.

கருவிகள் (ஒளிப்படம் 5)

பிளேடுகள் (Blade), சுரண்டிகள் (Scrappers), முனைகள் (Points) மற்றும் இக் கருவிகள் தயாரிக்கும் மூலக்கற்கள் (Core),

அவற்றிலிருந்து எடுக்கும் சில்லுகள் (Flake) கள மேற்பரப்பு ஆய்வில் கிடைத்துள்ளன. இவைகள் குவார்ட்ஸ் (Quartz), ஜாஸ்பர் (Jasper), கால்ஸிடனி (Chalcedony), அகேட் (Agate), செர்ட் (Chert) மற்றும் ஓபல் (Opal) ஆகிய கற்களைக் கொண்டு செய்யப் பட்டுள்ளன.

கற்காலத்தின் கடைசிப் பகுதியில் நேர்த்தியான கற்கருவிகளைச் செய்யும் இம்முறைக்கு லெவலாய்சியன் தொழில் நுட்பம் (Levalloisian Technique) எனப் பெயரிடப் பட்டுள்ளது. மேற்சொன்ன எல்லாக் கருவிகளின் விளிம்புகளும் நன்றாக கூர்மையாகச் செய்யப்பட்டுள்ளன.

கருவிகளின் பயன்கள்

இக்கருவிகள் மிகச்சிறிய உருவங்களைப் பெற்றிருப்பதால் ஒவ்வொன்றையும் தனியே பயன்படுத்தாமல் ஒன்றுக்கு மேற்பட்ட கருவிகளை இணைத்துக் கூட்டுக் கருவிகளாகப் பயன்படுத்தினர். இக்கருவிகள் மரப்பிடிகளிலோ எலும்புப் பிடிகளிலோ பதித்துப் பசை கொண்டு ஒட்டி நீண்ட கத்தியாகவும் அறுக்கப் பயன்படும் அரிவாள்களாகவும், ரம்பங்களாகவும் பயன்படுத்தினர். முனைகள் (Points) என்றழைக்கப்படும் கருவிகளை மரப்பிடியில் ஏற்றினால் மிக்க கூர்மையான அம்பு நுனிகளாகப் பயன் படுத்தலாம். சில பெரிய கருவிகள் சுரண்டுவதற்கும் அறுப்பதற்கும் உகந்தவை.

கருவிகள் கிடைக்கும் இடங்களின் தன்மைகள்

திருத்தங்கல் (தெற்கு) என்னுமிடத்தை ஊடறுத்து ரயில்பாதை செல்கிறது. அதன் பக்கங்களில் உள்ள நிலங்களின் மேற்பரப்பில் அதிக அளவு கருவிகள் சேகரிக்கப்பட்டன. வேறு தொல்பொருட்கள் கிடைக்கவில்லை. மண்பாண்ட ஓடுகள் செப்பமில்லாதவை கிடைத்துள்ளன. அர்ச்சுனா ஆற்றங்கரை பூரண சந்திராபுரம் என்னும் தொல் வாழ்விடத்தில் அதிக அளவு கருவிகள் கிடைத்தன. இதில் ஓரளவு பாசிமணிகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள் கிடைத்தன.

கூட்டப்புளி, வெம்பக்கோட்டை (வைப்பாற்றங்கரை) முதலிய இடங்களில் பெருங்கற்காலப் பொருட்களும் அதிக அளவு கிடைக்கின்றன. இங்கு சுமாரான அளவு நுண்கருவிகள்

கிடைத்தன. எனவே திருத்தங்கல் (தெற்கு) என்னும் வாழ்விடம் முதன் முதலாக நுண்கருவிக்கால மக்கள் வாழ்ந்த இடமாக இருக்கலாம்.

வாழ்க்கை நிலை

இக்கால மக்கள் முன்பு இருந்த மக்களைப் போலவே வேட்டையாடும் வாழ்க்கை நிலையிலேயே இருந்துள்ளனர். அதே சமயத்தில் அவர்கள் இயற்கையாகக் கிடைக்கும் தானியங்களை அறுத்துப் பயன்படுத்தினார்கள் என உய்த்து உணரமுடியும். சிறு கருவிகளைக் கூட்டாக இணைத்து அரிவாள்களாகப் பயன்படுத்தியுள்ளனர். இந்த அரிவாள்களைத் தானியங்களை அறுப்பதற்கே அதிகமாகப் பயன்படுத்தியிருக்க முடியும். எனவே மனிதன் வேட்டை நிலையிலிருந்து அடுத்தபடியாக வேளாண்மை வாழ்க்கைக்குச் செல்வதற்கு ஆயத்தம் அடைந்தான் எனக் கூறலாம்.

# 22. குறியீடும் பிராமி எழுத்தும்

கா.ராஜன், தஞ்சாவூர்

இந்தியாவில் பானையில் உள்ள குறியீடுகளின் ஆய்வினை 1881இல் ப்ரான்பில்[1] (Branfil) தொடங்கி வைத்தார். அன்று முதல் இ.எச்.ஹண்டே, ஜி.யஜ்தானி, பி.கே.தாபர், பி.பி.லால் போன்ற மானிடவியல் வல்லுநர்கள், தொல்லியல் மற்றும் கல்வெட்டியல் ஆய்வாளர்கள் சிந்து சமவெளி நாகரிகம் தொட்டு பெருங்கற்படைப் பண்பாடு வரை ஈமச் சின்னங்களிலும், வாழ்விடங்களிலும் கிட்டிய குறியீடுகளைப் பகுத்தும் பிரித்தும் சான்றுகளை ஒப்பு நோக்கியும் ஆய்வினை மேற்கொண்டனர்.

பி.பி. லால் 60 விழுக்காட்டிற்கு மேற்பட்ட சிந்து சமவெளி குறியீடுகள் பெருங்கற்படைச் சின்ன குறியீடுகளுடன் ஒத்திருப் பதைக் குறிப்பிட்டுள்ளார்[2]. அண்மையில் ப.சண்முகம் உறையூர் அகழாய்வில் கிட்டிய குறியீடுகளை ஆய்வு செய்து பிராமி எழுத்துக்கும், இக்குறியீடுகளுக்கும் இடையே ஏதொரு தொடர்பும் இல்லை என்ற கருத்தைத் தெரிவித்துள்ளார். இக்குறியீடுகளைப் பிராமி எழுத்திற்கு முந்தைய, சமகாலத்திய, பிந்தைய குறியீடுகள் என வகைப்படுத்திப் பிராமி எழுத்துக் காலத்திற்கு முன் தோன்றி, பிராமியுடன் சேர்ந்திருந்து, பிராமி எழுத்திற்குப் பின்னும் வழக்கில் இருந்தமையால் இக்குறியீடுகளினின்று பிராமி எழுத்து வரிவடிவம் தோன்றி இருக்க வாய்ப்பில்லை என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார்[3]. மேற்கூறிய கருத்து மிகவும் ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

தற்போதைய சான்றுகளைக் கொண்டு இக்குறியீடுகளின்று பிராமி தோன்றுவதற்கு வாய்ப்பில்லை என்ற கருத்தை ஏற்றுக்கொண்டாலும் இவற்றின் முக்கியத்துவத்தை உணராது இருக்க முடியாது. இவை பிராமி வரிவடிவம் தோன்றுவதற்கு முன்பிருந்தே மக்களின் எண்ணங்களை ஒலி வடிவமாகவோ,

1. Branfil, B.R., "On the Sevanadurga rude stone cemetery, Central Maisur", *Indian Antiquary*, Vol. X, 1881 pp.1-12.
2. Lal, B.B., "From the Megalithic to the Harappa: Tracing Back the Graffifi on the Pottery", *Ancient India,* No.16, pp.4-24.

கருத்து வடிவமாகவோ வெளிப்படுத்தக்கூடிய கருவியாகப் பயன்பட்டிருக்கவேண்டும். இவை ஓடுகளில் பயன்படுத்தப்பட்ட இடமும், நிலையும் பிராமி வடிவத்துடன் ஒத்திருப்பதால் பிராமி எழுத்துக்குரிய முக்கியத்துவத்தை இக்குறியீடுகளும் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றன எனலாம்.

மேற்கூறிய ஆய்வு அனைத்தும் ஒரு முடிவுக்கு வராமைக்குக் காரணம் பண்பாடுகளினிடையே காணப்படும் தொடர்பற்ற நிலை, குறியீடுகளின் எண்ணிக்கை, அவைகள் கிடைத்த இடம், கிட்டிய நிலை உணராமை மேலும் புள்ளியியல் அளவிலான ஆய்வு செய்தற்குரிய போதிய சான்றுகள் இல்லாமை இவ்வாய்வினை மென்மேலும் தொடர முடியாமல் போயிற்று. அண்மைக் காலத்தில் கிடைத்துள்ள சில புதிய தடயங்கள் இவ்வாய்வை ஊக்குவிக்கும் வகையில் உள்ளன.

வல்லம் அகழ்வாய்வில் பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் எண்ணிக்கை அளவில் குறைந்துள்ளது. என்பது ஒரு சிறப்பம்சமாகும்[4].

கொடுமணல் அகழ்வாய்வில் பெருங்கற்படைச் சின்னங்களிலிருந்தும், ஊரிருக்கைப் பகுதியிலிருந்தும் கிட்டிய குறியீடுகள் சில ஐயப்பாடுகளைக் களைவதற்கு உதவி புரிகின்றன. கொடுமணலில் அனைத்துக் குறியீடுகளும், பிராமி எழுத்தும் பானைகள் சுட்ட பின்பே எழுதப்பட்டவை. பெரும்பாலும் வெளிப்புறத்தில் தோள் பகுதியில் (Shoulder portion) அல்லது விளிம்பிற்குக் கீழ் அல்லது கழுத்துப் பகுதிக்கு கீழ் இவை எழுதப்பட்டன. அரிதாகப் பானையின் உள்புறத்தின் அடியிலோ அல்லது வெளிப்புறத்தின் அடியிலோ எழுதப்பட்டன. இங்ஙனம் எழுதப்பட்டவை பெரும்பாலும் தட்டுகள் (Plates) ஆகும். கிடைத்த குறியீடுகள் மற்றும் பிராமி எழுத்துப் பொறித்த பானை

---

3. Shanmugam, P., "Graffiti and Tamil Brahmi", *Origin Evolution,and Reform of the Tamil Script"*, Madras 1983, pp. 31-36.
4. Subbarayalu, Y., "Vallam Excavations", *Tamil Civilization* , Vol. 2, No.4, 1984, p.30.

ஓடுகளில் 90 சதவிகிதம் கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள். இவை பெரும்பாலும் குவளைகள் (bowls) ஆகும்.

அண்மைக்கால ஆய்வுகள் கீழ்க்கண்ட நான்கு கருதுகோள்களை வைத்துள்ளன.

1. பானை செய்வோரின் குறியீடு (Potter's Mark)
2. பானை உரிமையாளரின் குறியீடு (Owner's Mark)
3. குலக் குறியீடு (Clan's Mark)
4. மலைவாழ் மக்களின் குறியீடு (Tribal Mark)

பானை செய்வோரின் குறியீடு

சில அகழாய்வுகளில் ஒரே ஊரில் நூற்றுக்கும் மேற்பட்ட குறியீடுகள் கிட்டியுள்ளன. இவை பானை செய்வோரின் குறியீடாக இருந்தால் ஒரு குறிப்பிட்ட ஊர் இருக்கைப் பகுதியில் ஒரே காலகட்டத்தில் அத்துணைப் பானைசெய்வோர் இருப்பதற்கு வாய்ப்பில்லை. மேலும் இவை அனைத்தும் பானை சுட்டபின் கீறப்பட்டவையாகும். பானை செய்வோராக இருப்பின் சுடுவதற்கு முன்பே எளிதாகக் கீறியிருக்கலாம். மேலும் இவையும் பிராமி எழுத்துப் பொறித்த ஓடுகளுடன் ஒத்த நிலையில் உள்ளவையால் இவை பானை செய்வோரின் குறியீடுகளாக இருக்க வாய்ப்பில்லை.

பானை உரிமையாளரின் குறியீடு

பானை உரிமையாளரின் குறியீடாக இருப்பின் ஒரு உரிமையாளருக்கு ஒரு குறியீடு தொடர்தான் இருக்க முடியும். மேலும் ஒரேகுறியீடு பல்வேறிடங்களில் சமகாலத்தில் கிட்டுகின்றன. இவை தவிர ஒரு குறியீட்டுத் தொடரில் உள்ள குறியீடுகள் வெவ்வேறு நிலைபெற்று விளங்குவதைக் காணும்போது இவ்விளக்கம் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. உதாரணமாக சாணூரில்[5] கிட்டிய கீழ்க்கண்ட குறியீட்டைக் காணலாம்.

5. Banerjee, N.R., "Sanur 1950 and 1952: A Megalithic site in Chingleput", *Ancient India*, No.15, 1959, pp.30-34

பொதுவாகப் பெருங்கற்படைச் சின்னங்களில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களின் எலும்புக்கூடுகள் அல்லது அதன் எஞ்சிய பகுதிகள் காணப்படுகின்றன. ஆனால் குறிப்பிட்ட கற்படைச் சின்னத்தில் ஒரு குறிப்பிட்ட குறியீடு கிட்டியுள்ளதை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளுதல் ஏற்புடையதாக இருக்கும். இவை பானை உரிமையாளரின் குறியீடு என எடுத்துக்கொண்டால் ஒன்றுக்கு மேற்பட்ட மனித எலும்புக் கூடுகளைக் கொண்ட ஓர் ஈமச்சின்னத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட குறியீடு கிட்ட வேண்டும். ஆனால் ஒரு குறியீடு மட்டுமே கிடைக்கின்றது. உதாரணமாக, கொடுமணலில் கீழ்க்கண்டவாறு கிட்டியுள்ளது.

பெருங்கற்படை 2



பெருங்கற்படை 3



மேற்கூறிய குறியீடுகள் படையல் பொருள்களாக வைக்கப் பட்ட நூற்றுக் கும் மேற்பட்ட பானைகளில் உள்ளன. ஊரிருக்கைப் பகுதிகளினின்று கொணர்ந்து இட்ட ஓடுகளில் இக்குறியீடுகள் காணப்பட வில்லை. எனவே ஒருவர் அல்லது

அதற்கு மேற்பட்டோர் மறைவிற்குப் பின் நினைவுச் சின்னங்களாக உருவாக்கப்பட்ட ஈமச் சின்னங்களில் படையல் பொருள்களாக வைப்பதற்குத் தருவிக்கப்பட்ட அல்லது செய்யப்பட்ட இப்பானைகளின் மீது ஓரே சமயத்தில் இக்குறியீடு கள் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

குலக்குறியீடு

மேற்கூறியவற்றை நோக்கும்பொழுது இவை குடும்பங்களின் குறியீடுகளாக வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் ஒரு குடும்பம் என்பதைவிட ஒரு கூட்டத்தின் குறியீடாக எடுத்துக்கொண்டால் ஏற்புடையதாக இருக்கும். ஏனெனில் ஓரேவகையான குறியீடு வெவ்வேறு சின்னங்களில் கிட்டுகின்றது. ஒரு குறுகிய காலகட்டத்தில் ஒரு குடும்பம் அத்துணை ஈமச் சின்னங்களை எழுப்புவதற்கு வாய்ப்பு மிகக் குறைவு எனலாம். உதாரணமாகக் கொடுமணல் அகழாய்வில் கீழ்க்கண்ட குறியீடுகள் வெவ்வேறு ஈமச் சின்னங்களில் கிடைப்பதைக் காணலாம்.

பெருங்கற்டை 2



பெருங்கற்படை 3, 7, 8, 10



பெருங்கற்படை 5, 9



பெருங்கற்படை 9



மேற்கூறியவற்றைக் காணும்பொழுது சின்னங்கள் 3, 7, 8, 10 ஒரே குலம் அல்லது கூட்டத்தைச் சார்ந்தவையாக இருக்கும். அதே போன்று சின்னங்கள் 5, 9உம் உள்ளன. சின்னம் எண் 9 இல் இரண்டு வகைக் குறியீடுகள் கிட்டியுள்ளன. இக்கற்பதுக்கையின் அடியில் இரண்டு எலும்புக் கூடுகளும் கிட்டின. ஒருகால் இவர்கள்

இருவேறு கூட்டத்தைச் சார்ந்தவராக இருக்கலாம். ரெய்கிர் (Reigir) என்ற இடத்திலும் ஒரே வகையான குறியீடு ஈமச் சின்னத்தில் 25க்கும் மேற்பட்ட படையல் பொருள்களில் கிட்டியுள்ளது[6]. எனவே ஒரு கூட்டத்தைச் சார்ந்தோர் ஒரே வகைக் குறியீடு கொண்டிருந்தனர் எனலாம். இன்னும் பல்வேறு இடங்களில் ஈமச் சின்னங்களை அகழ்ந்தால் இந்நிலை மேலும் தெளிவுபெறும்.

மேற்கூறியவற்றிலிருந்து அவை கிட்டும் இடங்களில் பொதுவான நிலையை நோக்கும்பொழுது இவை மலைவாழ் மக்களின் குறியீடாக இருக்க வாய்ப்பில்லை எனலாம்.

மேற்கூறிய குறியீடுகள் ஈமச் சின்னங்களில் காணப்படுவது தனித்தன்மையாகும். இவையன்றி ஊரிருக்கைப் பகுதிகளில் கிட்டிய குறியீடுகளே மிகவும் சிறப்பு வாய்ந்ததும் ஆய்வுக்குரியதும் ஆகும்.

கொடுமணல் அகழாய்வில் ஊரிருக்கைப் பகுதியில் கிட்டிய குறியீடுகள் அவைகளின் தன்மை கொண்டு கீழே முறைப்படுத்தப்பட்டுள்ளன.



6. Hunt. E.H. "Hyderabad Cairns, *Journal of the Hyderabad Archaeological Society,* 1916, pp. 180-224; "Hyderabad Carin burials and their significance", *Journal of Royal Anthropogical Institute of Great Britain and Ireland*, Vol. LIV, 1924, pp. 140-156.

மேற்கண்ட குறியீடுகள் ஓர் அடிப்படைக் குறியீட்டினைக் கொண்டு வளர்ச்சியுறுவதைக் காணலாம். அவற்றில் கடைசி இரண்டு குறியீடுகள் ஈமச்சின்னத்தைச் சார்ந்தவை.





மேலே உள்ள முதல் குறியீடு மற்றக் குறியீடுகளுடன் சேர்ந்து வருவதைக் காணலாம். குறிப்பாக இக்குறியீடு மற்றக் குறியீட்டுடன் சேரும்போது அவற்றில் இறுதியில் மட்டுமே வருவதைக் காணலாம்.



மேலே உள்ள முதல் குறியீடு சிறு மாற்றம் அல்லது வளர்ச்சி பெற்று வருவதைக் காணலாம்.



இதில் சிறப்பம்சமாக முதல் குறியீடு 'கோவே' என்ற பிராமி எழுத்துப் பொறிப்புடன் சேர்ந்து இறுதியில் வருவதைக்

காணலாம். இக் 'கோவே' என்ற சொல் ஒரு தலைவனை அல்லது அரசனைக் குறிப்பதாக எடுத்துக்கொண்டால் இக்குறியீடு இங்கு முக்கியத்துவம் பெறுகிறது. ஏனெனில் மேலே கூறியது போல் இக்குறியீடு பெருங்கற்படைச் சின்னங்கள் 3, 7, 8 மற்றும் 10 இல் வழங்கி வந்துள்ளன. இச்சின்னங்களில் மிகவும் இன்றியமையாத தொல் பொருள்கள் கிட்டின. சின்னம் 7இல் அரிய கல்மணிகள் பதித்த புலி பொம்மையும் 'விஸாகி' என்ற பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடும் மற்றும் தங்கம், செம்பு அணிகளும் கிட்டின. இவையிரண்டும் நடுகல்லுடன் கூடிய பதுக்கை வகையைச் சார்ந்தவை. சின்னம் 8 இதுவரை தென்னிந்தியாவில் கிடைத்த சின்னங்களில் மிகப் பெரியதும், நேர்த்தியானதும் ஆகும். சின்னம் 10 இல் தங்கமணிகளும் ஆயிரத்துக்கும் அதிகமான சூதுபவளப் பாசிகளும் கிட்டின.

மேலே குறிப்பிட்ட பல தொல்பொருள்களின் சிறப்பை வைத்தும் சின்னங்களின் கட்டிடக் கலையின் அமைப்பை வைத்தும் இவ் ஈமச்சின்னங்கள் பெருமகனுக்கு அல்லது தலைவனுக்கு எழுப்பப்பட்டிருக்க வேண்டும் என்று அறியமுடிகிறது. எனவே இக் குறியீடு மிகச் சிறப்புப் பெறுகின்றது. இதைப்போன்று வேறொரு குறியீடு 'கோன்' என்ற பிராமி எழுத்துப் பொறிப்புடன் கிட்டியுள்ளது. ஆயினும் இக்குறியீடு இதுவரை அகழ்ந்த ஈமச் சின்னங்களில் கிட்டவில்லை.

இதில் காணப்படும் குறியீடுகள் அனைத்தும் பிராமி எழுத்துடன் தொடர்பு கொண்டவை. குறிப்பாக இவை சொல்லின் இறுதியில் வருவதைக் காணும்போது இக்குறியீட்டிற்கென சிறப்பானதொரு இடத்தை இவர்கள் அளித்திருப்பது புலப்படும்.

கொடுமணல் 

கொங்கர் புளியங்குளம் 

அழகர் மலை 

குறியீட்டுத் தொடரில் (ஒளிப்படம் 7) இரண்டாவது குறியீடு நீங்கலாகக் கொங்கர் புளியங்குளம் பிராமிக் கல்வெட்டில் வாக்கியத்தின் இறுதியில் வருகின்றது. இது பொன்னின் அளவைக் குறிப்பதாக சு.ராஜகோபால் மற்றும் மயிலை சீனி.வேங்கடசாமி ஆகியோர் கருதுகின்றனர். முதல் குறியீடு அழகர்மலை பிராமிக் கல்வெட்டுக் களிலும் சிறிது மாற்றம் அல்லது வளர்ச்சி பெற்று விளங்குவதைக் காணலாம்.



இக்குறியீட்டுத் தொடர் கொடு மணலில் கிட்டிய வெள்ளி முத்திரை நாணயம் ஒன்றில் காணப் படுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.



இதில் உள்ளவை கொடுமண லில் கிட்டும் பல்வேறு குறியீடுகளின் தொகுப்பு ஆகும்.

அண்மையில் இலங்கையில் யாழ்ப் பாணத் தீபகற்பத்தில் அணைக்கோட்டை என்ற இடத்தில் பெருங்கற்படைச் சின்னம் ஒன்றை அகழ்ந்தபோது கிட்டிய வெண்கல முத்திரையில் மூன்று குறியீடுகளைக் கொண்ட தொடர் மேல் வரிசையிலும் கீழ்வரிசையில் 'கோவேத' என்ற பிராமி எழுத்தும் காணப்படுதல் இவ்வாய்வில் ஒரு திருப்புமுனை எனலாம்.[7]



இந்திரபாலா[8] கே.வி. ரமேஷ்[9] ஆகியோர் இது அரசனைக் குறிப்பதாகக் கூறுகின்றனர். இந்திரபாலா மேலே காணப்படுகின்ற குறியீடுகள் கீழ்வரியில் காணப்படும் பிராமியுடன் ஒத்த ஒலிவடிவமோ அல்லது கருத்து வடிவமோ பெற்றுத் திகழ்வதாகக் கருதுகிறார்.

எனவே கல்வெட்டுக்களிலும் அகழ்வுகளில் கிட்டும் பானை ஓடுகளிலும் காணப்படும் குறியீடுகள் போதுமானதாக இல்லாதபோதிலும் இனிமேல் மேற்கொள்ளப்படும் அகழ்வுகளில் இதற்கு முக்கியத்துவம் அளித்து அதில் கிட்டும் தனிக்குறியீ குறியீட்டுத் தொடர், அதன் அமைப்பு, வளர்ச்சி ஆகியவற்றை பகுத்தும், பிரித்தும், நிலைகளைத் துல்லியமாக எழு... ஆய்வினை மேற்கொள்வது இன்றியமையாதது.

7. Ragupathy, P., *Early Settlement in Jaffna, An Archaeological Survey*, Madras, 1987, pp.115-126
8. *Ibid.*, pp.200-202
9. *Ibid.*, p.204

# 23. குறியீட்டு மோதிரம்

ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர்

சங்ககாலச் சேரர்களின் தலைநகராகிய கரூரில், அமராவதி ஆற்றுப்படுகையில் அண்மையில் ஒரு வட்டமான செப்பு மோதிரம் கிடைத்துள்ளது. மோதிரத்தின் எடை 4.7 கிராம், குறுக்களவு 23 மி.மீ, அகலம் 7 மி.மீ., இந்த மோதிரம் பட்டையான செப்புத்தகட்டை வளைத்து, முனைப்பக்கம் ஒன்றோடு ஒன்று சேராமல், இடைவெளிவிட்டுச் செய்யப்பட்டுள்ளது. இதன் வெளிப்பக்கத்தைச் சுற்றிலும், எட்டுக் குறியீடுகள் பொறிக்கப் பட்டுள்ளன (ஒளிப்படம் 6).தமிழகத்தில் கிடைத்துள்ள மோதிரங் களில் இதுவே மிகப் பழமையானதாகும். தமிழகத்தில் குறியீடுகள் உள்ள மோதிரம் இதுவரை கிடைக்கவில்லை. இந்த மோதிரத்தில் உள்ள சில குறியீடுகள் பெருங்கற்படைகாலக் குறியீடுகளுடன் ஒத்துள்ளன.

மேலும் யாப்பருங்கல உரையில்

*காணப்பட்ட உருவம் எல்லாம்*
*மாணக் காட்டும் அவகைமைநாடி*
*வழுவில் ஓவியன் கைவினைபோல*
*எழுதப்படுவது உருவெழுத்தாகும்.*

என வரும் செய்யுளும், தொல்குடியினர் உருவெழுத்து ஆண்ட நினைவைப் போற்றுகிறது. பழந்தமிழர்களின் சித்திர எழுத்து மாறி அடையாள எழுத்தாக ஏற்பட்டபிறகே, அதிலிருந்து பிராமி (பண்டைத்தமிழ் எழுத்து) என்னும் எழுத்து ஏற்பட்டது என்பது ஒரு கருத்தாக உள்ளது.

தமிழில் எழுத்துகள் இருந்தன என்பதற்கும், அவையே கருத்தெழுத்தாகவும், அசையெழுத்தாகவும், இன்றைய வரியெழுத் தாகவும் வளர்ந்தன என்பதற்கு இலக்கணச் சான்றுகளும், கல்வெட்டுச் சான்றுகளும் கிடைத்துள்ளன. சித்திரங்களாக வரையப்பட்ட உருவ வடிவங்களே பிற்காலத்தில் எழுத்து வடிவங்களாக மாறியுள்ளன.

இந்த மோதிரத்தில் உள்ள குறியீடுகள் இந்த மோதிரத்தைப் பயன்படுத்திய உடைமையாளரின் பெயராக இருக்கலாம். தமிழகத்தில் இதுவரை பெருங்கற்படைக்காலப் பானை ஓடுகளிலும், பாறை ஓவியங்களிலும், குகைக் கல்வெட்டுக்களிலும், சில பண்டைய நாணயங்களிலும் குறியீடுகள் கிடைத்துள்ளன. பானை ஓடுகளில் உள்ள குறியீடுகள் குயவர் இடும் குறிகளாகக் கருதினர். அவையும் சொற்குறியீடுகளே என்றும கருதப்படுகிறது.

இப்பொழுது கிடைத்துள்ள மோதிரத்தில் உள்ள உருவப் பொறிப்புக்கள் சொற்குறியீடுகளா அல்லது பிராமிக்கு முன் எழுதப்பட்ட எழுத்துக்களா என்று மேலும் ஆய்வு செய்தல் வேண்டும். மோதிரத்தில் உள்ள குறியீடுகள் எழுத்துக்களாக இருந்தால், பிராமி எழுத்துக்குமுன் தமிழகத்தில் இந்த வகையான குறியீடுகளையே எழுத்துக்களாகப் பயன்படுத்தி உள்ளனர் என்று கருதலாம்.

இந்த மோதிரம் உருளை முத்திரையாகவும் பயன்பட்டிருக்கலாம். இத்தகைய உருளை முத்திரைகள் பெரும்பாலும் பண்டைய பாபிலோனியாவில்தான் கிடைத்துள்ளன. சிந்துவெளி நாகரிகத்தில் இத்தகைய உருளை முத்திரைகள் அருகியே காணப்படுகின்றன.



# 24. மகேந்திரவர்மனின் ஓர் அரிய காசு

ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர்

முற்காலப் பல்லவர்களின் தலைநகராகிய காஞ்சிபுரத்தில் சில வெள்ளிக் காசுகள் எனது நாணய சேகரிப்பில் உள்ளன. இதில் ஒரு வெள்ளிக்காசு முதலாம் மகேந்திரவர்மனுடையது. இந்தக் காசின் (ஒளிப்படம் 8-9) முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் காளை, காளையின்மேல் பல்லவர் காலத்துத் தமிழில் 'பகாபிடு' என்று கி.பி. 7ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ளது. பின்பக்கத்தில் சக்கரம் பூக்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. காசின் எடை 3 கிராம்.

செங்கை எம்.ஜி.ஆர். மாவட்ட வல்லம் குடைவரையில் உள்ள தமிழ்க் கல்வெட்டு பகாப்பிடுகு லளிதாங்குரன் என்று முதலாம் மகேந்திரவர்மனின் இரு விருதுப் பெயர்களைத் தருகிறது. குடைவரையில் உள்ள தமிழ் எழுத்துக்களும், இக் காசில் உள்ள தமிழ் எழுத்துக்களும் ஒன்றுபோல் உள்ளன. ஆகவே இந்தக்காசு முதலாம் மகேந்திரவர்மனின (கிபி.600-630) விருதுப் பெயருடன் வெளியிடப்பட்ட தமிழ்க் காசாகும். தமிழகத்தில் கிடைத்த பல்லவர் காசுகள் எல்லாம் பல்லவ கிரந்த எழுத்திலேயே கிடைத்துள்ளன. ஆனால் இந்தக் காசு தமிழில் கிடைத்திருப்பது தமிழக நாணய வரலாற்றில் அரிய கண்டுபிடிப்பாகும்.



# 25. ஔரங்கசீப் நாணயம்

ஜி. திருமூர்த்தி, சென்னை

மூன்று ஆண்டுகளுக்கு முன்பு செங்கல்பட்டு எம்.ஜி.ஆர். மாவட்டம், மதுராந்தகம் வட்டம் தொழுப்பேடு அருகே உள்ள அரப்பேடு என்னும் கிராமத்தில் களஆய்வு மேற்கொண்டபோது இடைக்கால வரலாற்றைச் சேர்ந்த ஊரிருக்கை மண்மேடு கண்டுபிடிக்கப்பட்டது. இங்கு சுமார் 10 செ.மீ. ஆழத்தில் ஒரு செப்பு நாணயம் கண்டுபிடிக்கப்பட்டது.[1] சோழர் காலத்தில் தனியூராக விளங்கிய மதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்துப் பிடாகைகளில் ஒன்றான இந்தப் பகுதி பதினேழாவது நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்ட முகலாயப் படையெடுப்பின் பாதிப்புக்கு உள்ளானது. கிபி. 1693ஆம் ஆண்டு திருச்சிராப் பள்ளிவரை வெற்றிகரமாகச் சென்று திரும்பிய ஔரங்கசீப்பின் படைத் தளபதி ஜீல்பிகார்கான் அடுத்த ஆண்டிலேயே ஆற்காடு நவாப் என்னும் ஆட்சியை ஏற்படுத்தினார். இருந்தபோதிலும் ஆற்காடு நவாப் ஆட்சி பற்றிய வரலாற்றில் இந்தப் பகுதி பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை.

இத்தகைய சூழ்நிலையில் அண்மையில் காஞ்சிபுரத்திலே கண்டுபிடிக்கப்பட்ட ஔரங்கசீப்பின் இரண்டு கல்வெட்டுக் களும், இந்தக் கட்டுரை ஆசிரியரால் இந்தப் பகுதியில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள முகலாய காலத்திய பளபளப்பான பானை ஓடுகள் (Glazed Ware) முதலியன இந்தப் பகுதிகளில் நிலவிய ஔரங்கசீப் ஆட்சியினை உறுதிப்படுத்தும் சான்றுகளாக உள்ளன. இந்த நாணயக் கண்டுபிடிப்பு மேலும் ஒரு சான்றாக விளங்குகிறது.

இந்த நாணயம் 2.2 செ.மீ விட்டம் 0.3 செ.மீ கனம் சுமார் 10 கிராம் எடையுள்ளதாக இருக்கின்றது (ஒளிப்படம் 10-11). முன் பக்கத்தில் பாரசீக மொழியில் ஔரங்கசீப் பாதுஷா என்று

1. இந்த நாணயத்தினைப் பற்றி அரிய குறிப்புகளைத் தந்து உதவிய இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் நாக்பூர் உருது மற்றும் பாரசீகக் கல்வெட்டு ஆராய்ச்சிப் பிரிவிற்கும், இந்தக் கட்டுரையினை அளித்திட அனுமதி வழங்கிய இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறையின் சென்னை வட்டக் கண்காணிப்பு அலுவலர் அவர்களுக்கும் நன்றி.

# 26. மாந்தரஞ்சேரல் மெய்க்கீர்த்தி

செ.இராசு, தஞ்சாவூர்

கொங்குநாட்டுப் பெரும்புலவர் வே.ரா.தெய்வசிகாமணிக் கவுண்டரிடம் ஓலைச் சுவடியாகவும், துடியலூர் டி.எம்.காளியப்பா அவர்களிடம் காகிதப் படியாகவும் இம் மாந்தரஞ்சேரல மெய்க்கீர்த்தி கிடைத்தது. அழகிய கலிவெண் பாவில் இயற்றப்பட்டு கலியோசையும், செப்பலோசையும் தழுவி மெய்க்கீர்த்தி மிடுக்காகச் செல்கிறது.

ஏறக்குறைய 10,11 ஆம் நூற்றாண்டில் கொங்குச்சோழர் காலத்தில் சோழநாட்டு வேளாளளர்கள் கொங்குநாட்டில் குடியேறியபொழுது இம்மெய்க்கீர்த்தி எழுதப்பட்டிருக்கலாம். அப்போது சோழரும் சேரரும் நட்பினராய் இருந்தமை தெரிகிறது.

பிற்காலத்தில் ஏடு பெயர்த்து எழுதுவார் தம் காலத்தில் வழங்கியவண்ணம் சில இடங்களில் மாற்றம் செய்துள்ளனர். இராசராசபுரம்-ராராபுரம்-தாராபுரம் என வழங்கியது. இதன் சிறுபகுதி திருப்பூர் க.பழனிசாமிப் புலவரின் கொங்குச் செல்வியில் வெளியிடப்பெற்றுள்ளது. முழுப்பகுதியும் இப்பொழுது இங்கு வெளியிடப் பெறுகிறது.

கொங்கு நாட்டுக் குடியேற்றத்தை விளக்கும் ஓர் ஆவணமாக இதனைக் கொள்ளலாம்.

சேர மன்னர்களில் உதியர் கிளையைச் சேர்ந்த மாந்தரஞ் சேரல் கொங்கு நாட்டையும் ஆட்சி புரிகின்றான். சேரலமாநகர், காகம், தாராபுரம், விளங்கில், மூலனூர் என்னும் ஊர்களில் பாண்டியர் சார்பில் குடியேறிய மாவலியர், பூவலியர், காவலியர், வேடர், வேட்டுவர் என்னும் ஐந்து சாதி வேட்டுவ குலப் பெருமக்கள் அமைச்சர்களாகச் சேரரின் கீழ் கொங்குநாட்டில் நல்லாட்சி புரிந்து வந்தனர்.

ஒரு சமயம் சோழர் வழி வந்த எழினி, கோவல், திதியன், மையூரன், பொருநன் போன்ற வேளாண்குடியினர் சேரரின் அமைச்சர்களாகக் கொங்கு நாட்டில் வேட்டுவர்களுக்குப் பதிலாக அமர்ந்தனர். சேரனுடன் மகட்கொடையும் நேர்ந்தனர்.

அரேபிய எழுத்துக்களில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் காஜி 1116 (கி.பி.1706) என்றும் உள்ளது. பின்பக்கத்தில் ஜீலு, ஜார்ப் போன்ற சொற்கள் உள்ளன. நாணயத்தின் விளிம்புகள் துண்டிக்கப்பட்டுள்ளதால் நாணயம் அச்சான இடத்தை உணர்த்தும் குறிகள் முதலானவை அறிந்துகொள்ள முடியவில்லை.

இதுவரை இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட ஔரங்கசீப் செப்பு நாணங்கள் மிகவும் குறைவே.[2] அந்த வகையில் இந்த நாணயம் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

2. CHAS.J.RODGERS, *COINS OF THE MOGHUL EMPERORS OF INDIA*, INDOLOGICAL BOOK HOUSE, NEW DELHI, 1972.
இப் புத்தகத்தில் ஔரங்கசீப்பின் செப்பு நாணயங்கள் மொத்தம் ஒன்பது மட்டுமே காணப்படுகின்றன.

அவர்கட்கு வளவர், கிள்ளி, நள்ளி, ஏனாதிப் பட்டமளித்து மோதிரமும் சேரன் அளித்தான்.

தங்கள் பதவிகளைப் பறித்துச் சேரன் வேளாளர்களைக் கொங்கு நாட்டின் ஆட்சியாளர்களாக நியமித்ததை ஆட்சேபித்து வேட்டுவர்கள் பாண்டியனிடம் முறையிடுகின்றனர். பாண்டியன் வேட்டுவருடன் வந்து சேரனுடன் போரிடுகின்றான். வேளாளர் ஆதரவுடன் சேரன் வெற்றிபெறுகின்றான்.

வெற்றியில் மகிழ்ந்த சேரன் கொங்கு நாட்டில் தன் பெயரால் மாந்தை நகர் ஏற்படுத்தி சாத்தன் ஐயனைப் பிரதிட்டை செய்கின்றான்.

இன்றும் கொங்கு நாட்டில் மாந்தபுரி (மாந்தை) என்னும் ஊர் விளங்குகிறது. அங்கு புகழ்வாய்ந்த நாட்டராயன் கோயிலும் உள்ளது. மாந்தீசுவரர் என்ற சிவன் கோயிலும் உள்ளது.

உதியனது நல்மரபில் பதியெனவே வந்தமர்ந்து
ஆய்ந்துணர்வு கொளுபுனிட மாந்தரஞ் சேரல்மன்னன்
சேரலமா நகர்என்னுட திகழ்வஞ்சி மாநகரும்
காகம்எனும் நற்பதியும் கனதாரா புரநகரும்
விளங்கிலஎனுட பதியதுவும் மிகுமூல ஊரதுவும்
பாரதனின பலதலைமைப் பண்புடைய நகர்போக்கி
பாண்டியர்தம் புத்திரராய்ப் பகர்கொங்கர் ஐவரொடும்
வேண்டியசீர் வேளிர்களும் விறல்கொழுநற் புகழ்பாட
கொலுவமர்ந்து குடிபுரந்து கொற்றமது புரிநாளில்
திங்களையும் மெய்க்கீர்த்தி திகழ்சோழர் தம்குடியில்
மைக்கருமை மையூரும் மருவுநிரு அய்யோத்திப்
பட்டினமும் வேங்கடமும் பாங்கமரும் துவரையதும்
சக்கரமோட் டியவரசு தனிபுரியும் சக்கரவர்
சக்கரவர்த் திகள்எனவே தாரரசு புரிநிலமை
மையூரும் பிறதலமும் மாதவநீ ராடிவரும்
செய்யூரு மாதவத்தர் செப்புநலம் கேட்டயிவன்
அங்கவரில் வாழ்வுபெறும் அழகியசீர்த் துவரையில்வாழ்
செம்பியனைப் பொன்னாணியும் திகழ்சோழ எழினியையும்
வம்பியல்செந் தாரணியும் மாண்பனிருங் கோவலையும்

| | | | |
|---|---|---|---|
| திதியனொடு | மையூரன் | திகழ்பொருநன் | என்பவனை |
| நட்பரசு | ஆக்கியவர் | நலமிகுசீர் | நற்குடியில் |
| தன்சேய்மாந் | தரஞ்சேரல் | தனக்குமகட் | கொடைநேர்ந்து |
| சேரலமா | நகரதனில் | திகழ்காகப் | பதியதனில் |
| பாரளவும் | கீர்த்திபுனை | பகர்த்திருச்செங் | கோடதனில் |
| மன்னுபல | பதிகளுக்கும் | மகன்றனைநல் | லரசாக்கி |
| துன்னுபல | வளங்களொடு | சுபமாக | விளக்கதனில் |
| வந்துதன | தரசியலை | வகையாக | நடத்திடுநாள் |
| விந்தைபெறு | இவன்தோள்மேல் | விந்தையுமே | கூடினளால் |
| நட்பரசர் | தனக்குமவன் | நலபுலமை | தருவதற்கே |
| பெட்புடைய | மனமதனில் | பெருவிருப்பும் | மிகக்கொண்டு |
| இருங்கோவைச் | சசகபுரி | யிருத்திவரும் | எழினியையும் |
| திதியனையே | பேரெனும்ஓர் | பொற்புடைய | பதிதந்து |
| வருகுறையொன் | றில்லாது | மணியரசு | செலுத்திடுநாள் |
| வந்தமரும் | வேளிரெலாம் | வகைபடவே | சொல்தரும் |
| இந்தநிலம் | தமதாக்கி | எழில்வளனை | இயற்றியதால் |
| மந்திரிமார் | தம்முடனே | வருசேனை | தனைநடத்தும் |
| தந்திரமும் | மிகச்செய்து | தருவளவர் | எனும்பதமும் |
| கிள்ளியொடு | நள்ளிமுதல் | கேடில்கா | விதிப்பதமும் |
| விள்ளருஞ்சீர் | ஏனாதி | மிகுபதமும் | மோதிரமும் |
| தந்துஇனும் | பலகாணி | தகுசிறப்புச் | செய்துநலம் |
| மைந்துபெற | அவர்களுடன் | மகிழ்ந்தரசு | புரிந்திடுநாள் |
| நிலந்தருசீர்ப் | பெருங்கீர்த்தி | நிலமைபெறு | பாண்டியனின் |
| குலம்பெருக | வந்துதித்த | கோவேந்தர் | ஐம்பிரிவர் |
| பூவலியர் | மாவலியர் | பொற்புமிகும் | காவிலியர் |
| சேவகமே | மிகுவேடர் | செம்மைமிகு | வேட்டுவர்கள் |
| பன்றிமலை | மண்டிலத்துப் | பாகொழுகு | மருநாட்டில் |
| வென்றிதரு | விலாடபுரி | மேவியமர்ந் | தரசுபுரி |
| காவிலியர் | கொங்கர்எனும் | கமழ்தாரர் | இவனுடைய |
| மந்திரியர் | சேனைதனை | வகைபெறவே | நடத்துநர் |
| இந்தநிலை | தமக்கெதிரா | எங்கிருந்தோ | வந்தவர்கள் |
| மந்திரராய்ச் | சேரல்மனம் | மகிழ்தருசீர்ப் | பண்பினராய் |
| சம்பந்த | ராய்உலவிப் | தமக்குரிய | பூமிதனில் |
| பிம்பமிரும் | காணியராய்ப் | பெருகிவளர் | நிலைகண்டு |

ஆத்திரமும் கோபமதும் அருமனத்து மிகத்தாங்கி
தங்களது தலைவரெனத் தருசீர்த்தி மாவலியன்
பங்குபெறும் காவலவப் பண்புடைய கொத்துமுடிப்
பாண்டியன்தன் பால்அணுகிப் பாராளும் பதமுடைய
ஈண்டுபுகழ் தம்பதத்தை இன்றுவரு வோர்க்களித்த
சேரலனைச் செருவகத்துச் சென்றுதொலைத் திடுவம்எனக்
கோபித்துக் கூறஅதைக் கொத்துமுடி யோன்கேட்டு
ஆவித்து நாக்கடித்து அருமீசை துடிதுடிப்ப
வடக்கமரும் சேரலனை மன்னனெனக் கொண்டதுநம்
அடக்கரிய வன்மைதனக் கருமாசு தந்தெமை

போர்க்கெழுந்து ஆங்கவனைப் புறங்காண்டும் நம்மவர்கள்
தார்குதிரை யானையெலாம் சமர்க்கோலம் செய்ம்மின்என
போக்கினன்ஓர் தூதுவனைப் புறங்காணும் ஆசையதால்
குடமலையும் வடமலையும் குணமலையும் பிறவாய
தரமலைகள் ஆளும்நலந் தருசேரல் முன்வந்து
அத்தூதன் மொழிகின்றான் ஆன்றமைந்த மிகுகேள்வி
கொத்துமுடி யோன்நின்பால் குணமமைய விடவந்த
தூதனிவன் வந்தென்னச் சொலுமுறையு முண்டென்ன
மாந்தரனும் கோபித்து வருவயணம் கூறென்ன
கல்தோன்றி மண்தோன்றாக் காலமுத லாநாங்கள்
மல்வலயத் தோள்கொண்டு மாவலியர் எனவிருந்து
காவலராய்க் கொங்கர்களாய் கமழரசு புரிநாட்டில்
தாவளஞ்சேர் மன்னனுந்தான் தனியரசாச் செய்ததனால்
கொங்கனென எந்நாமம் கொடுத்துமெமை மகிழ்வித்து
எங்களது புயவலியால் எண்டிசையும் வென்றளித்து
மந்திரராய்ச் சேனைதனை வகைபெறவே நடத்திடுசீர்த்
தந்திரராய் இருந்தஎமை தான்மதியா திதுநாளில்
வடக்கிருந்து வந்தவரை மதித்தவரை மந்திரியாய்
தடக்கிரிசூழ் உலகமதில் தனிக்காணி தந்தளித்தல்
எங்கள்குலத் தவர்தமக்கு இழிவாகும் ஆதலினால்
பொங்குமதைப் போக்கவரு போர்க்கெதிராய்ப் போர்புரிய
கொங்கரெனும் பேரெமரைக் கொன்றுபினர்த் தரிக்கவெனும்
கொத்துமுடி யோன்வார்த்தை குவலயபூ பதிசெவியில்
மெத்துதிற லுடன்விழ வெகுண்டமரில் பார்ப்பன்என

தூதுவரைப் போக்கிவரும் தூறர்எனும் மந்திரரை
ஏதுவுடன் மிகப்பார்த்து எழுந்தவரோ டமர்புரிய
தனக்குபகா ரம்புரிய தலையளிசெய் யுறுவரையும்
மனக்கினிய முறைமையதில் மகிழ்விக்கு மாறியம்பி
ஏறைமலை யருகாக இருக்குமொரு செங்களத்தில்
திங்கள்மர பினில்வந்த சீர்மைமிகு பாண்டியர்கள்
பொங்கிவரு புத்திரரை போற்றிவரு கொத்துமுடிக்
கொங்கனுடன் மலையரசு குணம்நிறையப் புரிநிறைந்து
கொங்கனெதிர் அமர்புரியக் கொண்டவன்நற் படைநாட்கோள்
சேரலன்தன் படையெடுப்பும் செம்மையுள அவன்சேனை
ஆரவார முடன்வந்த அதனைமன மதுகொண்டு
யாகபுரி யொடுபிறவும் அரசுபுரி கொத்து முடி
வேகமிகு மன்னவனும் விடுத்தனன்தென் மதுரைசேர்
அரசுபுரி பாண்டியனும் அனுப்பினன்நற் படைவேண்டி
விரசுபுரி திருக்கோலம் விளங்குதிறல் மாமதுரை
மன்னவனும் இதுகேட்டு மனம்பெருகச் சினம்கொண்டு
தென்னவனென் றிவ்வுலகில் திகழ்சீர்மை கொண்டிலகும்
நம்மதுபுத் திரவர்க்கம் நாடாளும் தென்நாட்டில்
செம்மையுடன் சேரலனைச் சேரவமைத் திட்டதுவும்
அன்றிநம தாங்குடியின் அணிமலரைத் தந்ததுவும்
கொங்கன்என நமது பெயர் கொடுத்ததுவும் சீர்மைபெற
இங்குஅவன் தனைப்போற்றி இருந்ததுவும் தப்பாமல்
அத்தவரைப் போர்முறையில் அகற்றிவரும் செயல்புரிய
இத்தரையில் படைகொடுநாம் எழுதலே நலம்என்று
மாமதுரைப் பாண்டியனும் மாண்புமிகும் தென்நாட்டு
சேமமிகும் கொத்துமுடிச் செழியன்எனும் மன்னனுடன்
கொங்கர்எனும் பெயர்கொண்டு குலவும்நல வேட்டுவரை
அங்கமரும் வேடர்தமை ஆதரித்துத் தான்கூட்டி
பெருஞ்சேனை கடல்போல பேரார ஆர்ப்பரித்து
அருஞ்சீர்த்திச் சேரலனை அடுத்ததனால் அவர்களுடன்
வந்தெதிர்த்த சேனைகளை வல்லமைகொண் டேதாக்கி
பைந்துணர்சேர் பனந்தாரன் பக்கமுள மற்றவரும்
பலநாட்கள் போர்புரிந்து பலபடியாய் மிகவென்று
நலமனைய வெற்றிகொடு நாயகராய் வந்தெதிர்ந்த

பாண்டியனை விலாடபுரிப் பார்த்திபனை யாகபுரி
ஆண்டுவரும் காவலனை யாவரையும் அணிபோரில்
படத்துரத்தி மிகவெட்டி பண்புயரும் மற்றவரை
இடத்துயரும் பொதினிவரை ஏகவமர் தனில்ஓட்டி
புரிந்துசெயக் கொடிநாட்டி புவனியெலாம் தமக்காக்கி
தெரிந்துமெத் திறம்விளைத்த திறல்வேளிர் தமைப்புகழ்ந்து

மைந்துடனே வாகையது மாண்புபெற வேபுனைந்து
உதவிவரும் வேள்பலர்க்கும் ஊர்க்காணி பரிந்தளித்து
பதமிகுந்த அரசாட்சி பார்மகிழ நிலைநிறுத்தி
தன்னரசு மிகப்புரியத் தகுவாரை ஆராய்ந்து
தென்னவர்கள் ஊர்கள்தொறும் திறல்வேளிர் தமைநிறுவி
வடமலையும் தென்மலையும் வாகுபெரு பலஇடமும்
குடகடலும் குணகடலும் குலவிடுநற் பூமியெலாம்
தன்னரசை நிலைநிறுத்தித் தகுந்தநடு நிலம்ஆய்ந்து
தென்னவர்தம் பூமியினுள் திகழ்நலமாம் ஓரிடத்தில்
மாந்தையெனத் தன்நாமம் மருவவொரு நகர்அமைத்து
பாந்தமுடன் ஐயன்எனும் பகர்சாத்தன் தனிஎடுத்து
நாட்டரயன் எனநாமம் நவின்றுதொழு தவன்குறைதீர்
மோட்டுநலத் தொருபூதம் முழுநலத்தால் எழுவித்து
மந்திரநன் முறைமையினில் வருதெய்வத் திறம்பேண
எந்திரசா தனம்முதல் இயற்றுவித்து நாட்டினர்க்கு
ஒரு குறையும் இல்லாது உறுதுயரம் நில்லாது
மாரிவளங் குறையாது மனுநீதி தவறாது
தன்னுயிர்போல் மன்னுயிரைத் தலையளிசெய் தேயாண்டு
சேயான மாந்தரனும் திறமையொடு புவிபுரத்தல்
ஆயான நலம்பலவும் அமையவிளக் குதல்கண்டும்
அன்னவனுக் குறுதுணையாய் அறுவர்துணை நலம்கண்டும்
பூரித்துத் தன்னுளம்போல் புயம்வரைப் புகழ்குடி
ஆர்ந்து நலங்கண்டு அவனியெலாம் புகழ்பரப்பி
இறைவனது திருவடியை இதயமதில் மிகக்கொண்டு
பல்லூழி வாழ்கவென்றான் பார்த்திபனும் கோமகனும்
நீடூழி வாழ்கவென நித்தமுமை வாழ்த்துவமே!

# 27. உடையாளூர்: முதல் இராஜராஜ சோழன் அமரனான இடம்

என். சேதுராமன், கும்பகோணம்.

முதல் இராஜராஜ சோழன் கி.பி. 985 முதல் 1014 வரை அரசு புரிந்தான். 1010இல் தஞ்சைப் பெரு உடையார் கோயிலைக் கட்டி முடித்தான். சிவபாதசேகரன் (சிவனது திருவடியைத் தலையில் தரித்தவன்) என்ற சிவதீக்ஷாநாமம் பெற்றான். தஞ்சைக் கோயிலைப் பராமரிக்கப் பாசுபத சைவ குருமார்களை நியமித்தான். இவர்களில் சிலர் வடநாட்டிலிருந்து வந்தவர்கள். இராஜராஜனுக்குப் பாசுபத சைவத்தில் அதிகமான பற்று இருந்ததைக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். இராஜராஜன் கி.பி.1014 இல் காலமானான். அவன் மகன் இராஜேந்திர சோழன் சக்கரவர்த்தி ஆனான். இவனும் பாசுபத சைவ குருமார்களைப் பெரிதும் ஆதரித்தவன். இந்தப்பின்னணியில் உடையாளூர் கைலாசநாதர் கோயிலிலிருந்து கிடைக்கும் கல்வெட்டுக்களைப் பார்ப்போம்[1].

தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்குத் தெற்கே ஆறு கிலோமீட்டர் தூரத்தில் உடையாளூர் கிராமம் உள்ளது. இது ஒரு காலத்தில் சோழ மன்னர்களின் தலைநகரான பழையாறு நகரின் ஒரு பகுதியாகும். சிவன் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் இவ்வூர் அருமொழிதேவ வளநாட்டு திருநறையூர் நாட்டு ஸ்ரீசிவபாதசேகரமங்கலம் என்று அழைக்கப்படுகிறது. இறைவனின் பெயர் ஸ்ரீசிவபாதசேகர ஈசுவரமுடையார் என்பதாகும். அம்மன் கோயிலில் பிற்காலத்து நிறைவு பெறாத ஒரு துண்டுக் கல்வெட்டில் எப்போதும் இனியாள் என்ற பெயர் வருகிறது. ஒருவேளை இது இறைவியின் பெயராக இருக்கலாம். இன்றைய பெயர் சங்கர பார்வதி அம்மன். வளநாடு, ஊர், இறைவன் ஆகிய பெயர்கள் இராஜராஜனது சிறப்புப் பெயரில் உள்ளன. இக்கோயிலில் உள்ள மிகப்பழைய கல்வெட்டு இராஜராஜனின் மகன் இராஜேந்திர சோழனுக்குரியது. கிணற்றின் உள்ளே உள்ள கற்பலகையில் ஸ்வஸ்திஸ்ரீ இராஜேந்திர சோழன் என்ற பெயரைக் காணலாம்.

1. *ARE.*, 303, 315 of 1927

எனவே இவ்வூரையும் கோயிலையும் இராஜேந்திரன் தனது தந்தையின் நினைவாக எடுப்பித்தான் எனக் கொள்ளலாம். கோயிலின் கர்ப்பக் கிரகத்தில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. கல்வெட்டுக்கள் சிதைந்து உள்ளன. அவைகளில் சில இராஜேந்திர சோழனுக்கு உரியவையாகவும் இருக்கலாம். முழுமையான கல்வெட்டுக்களில் மிகப்பழமையானது முதற்குலோத்துங்கனுக் குரியது மற்றவை பிற்காலச் சோழ பாண்டியர்களுக்கு உரியவை. கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிவந்தங்களைக் கூறுகின்றன.

முதல் குலோத்துங்கனின் கல்வெட்டில்[2] (கிபி.1119) இறைவனின் பெயர் ஸ்ரீசிவபாதசேகர மங்கலத்து ஸ்ரீகைலாயம் உடையார் ஸ்ரீசிவபாதசேகர ஈச்வரமுடைய மகாதேவர் என்று உள்ளது. இக்கல்வெட்டு மகேச்வரப் பெரும்தரிசனத்தார் அளித்த நிவந்தத்தைக் கூறுகிறது. மாகேச்வரப்பெரும் தரிசனத்தார் என்பது பாசுபதர்; இவர்களின் உட்பிரிவுகளான மகாவிரதிகள் காபாலிகர், பைரவர் ஆகிய சைவர்களைக் குறிக்கும். இவ்வூர் தேவதானம் என்று சொல்லப்பட்டுள்ளது. குலோத்துங்க சோழனுக்குப் பின் அரசாண்ட சோழ மன்னர்களின் கல்வெட்டுக் களில் ஸ்ரீசிவபாதசேகரமங்கலத்து ஸ்ரீமாகேச்வர ஸ்தானம் குறிப் பிடப்பட்டுள்ளது. கோயில் உள்ள ஊரை தேவதானம் என்று அழைப்பர். பாசுபதர்கள் உள்ள ஊர் ஸ்ரீமாகேச்வரஸ்தானம் என்று அழைக்கப்படும். எனவே இவ்வூரில் பாசுபதர்கள் இருந்துள்ளனர் என்பதை அறிகிறோம். இவ்வூரின் வடமேற்கில் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் பட்டீச்சுரம் கிராமம் உள்ளது. இது சோழர்களின் பழைய தலைநகரான பழையாறை ஆகும். இவ்வூரில் உள்ள இராமநாதன் கோயில் இராஜேந்திர சோழனால் கி.பி.1019இல் எடுக்கப்பட்டது. அவனது அரசியாருள் ஒருத்தியான பஞ்சவன் மாதேவியார் இறந்தவுடன் அவளின் பூதஉடல் மீது இச்சிவன் கோயிலைக்கட்டினான். இது ஒரு சமாதிக்கோயில். பள்ளிப்படைப் பஞ்சவன் மாதேவி ஈச்வரம் என்று அழைக்கப்படுகிறது. இராஜேந்திரன் தனது பிறந்த நக்ஷத்திரமான திருவாதிரை நாட்களிலும் இறந்துபோன தனது மனைவியின் நக்ஷத்திரமான ரேவதி நாட்களிலும் வழிபாடுகள் செய்ய நிவந்தங்கள் கொடுத்தான். இக்கோயிலை மகாவிரதிகள் என்னும்

2. *ARE.*, 303, 315 of 1927.

பாசுபதர்கள் நிர்வகித்தனர். இவர்களுக்கென்று தனிமடம் இருந்துள்ளது. அதனை லகுலீச பண்டிதர் என்பவர் நிர்வகித்தார்.[3] பொதுவாக ஒரு அரசனோ அல்லது அரசியோ இறந்து போனால் பூதஉடல் மீது சிவன் கோயில் கட்டுவார்கள். இதற்குப் பள்ளிப்படைக் கோயில் என்று பெயர். பள்ளிப் படைக் கோயில்களை அதாவது சுடுகாடு அல்லது இடுகாட்டுக் கோயில்களைப் (சமாதிக்கோயில்களை) பாசுபதர்கள் நிர்வகித் தனர் என்பதைக் கல்வெட்டுகளால் அறிகிறோம்.

உடையாளூர் மாகேச்வரப் பெரும் தரிசனத்தாராகிய பாசுபதர்களின் இருப்பிடமான ஸ்ரீமாகேச்வர ஸ்தானமாகும். அருகில் பட்டீசுரத்தில் சமாதிக் கோயிலைப் பராமரிக்கும் மகாவிரதிகள் என்னும் பாசுபதர்கள் இருந்துள்ளார்கள் என்பதைப் பார்த்தோம். பாசுபத வேடத்தானாகிய சிவபெருமான் உறைவிடம் சுடுகாடும் இடுகாடும் ஆகும் என்று திருவீழிமிழலைப் பதிகத்தில் அப்பர் பெருமான் கூறுகிறார். (சவம் தாங்கும் மயானத்தைச் சாம்பல் என்பு தலையோடு மயிர்கயிறு தரித்தான் தன்னை பவம் தாங்கும் பாசுபத வேடத்தானை...... தேவாரம் *6-50-2*).

தொகுத்து நோக்கினால் உடையாளூரிலும் ஒரு சமாதிக்கோயில் அதாவது பள்ளிப்படைக் கோயில் இருந்து இருக்குமோ என்று தோன்றுகிறது. இதனை உறுதிப்படுத்தும் வகையில் இவ்வூர் பால்குளத்து அம்மன் கோயிலில் இருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டு அரிய செய்திகளைத் தருகிறது. இக்கல்வெட்டு முதல் குலோத்துங்கனுக்கு உரியது. இதன் காலம் கி.பி. 1112. இக்கல்வெட்டை மத்திய அரசின் கல்வெட்டு ஆய்வுத் துறையினர் 1927ல் படியெடுத்து சாசன எண் 315 ஆக வெளியிட்டுள்ளனர். 1927ல் இக்கல்வெட்டுடன் கூடிய தூண் விஷ்ணுகோயிலில் இருந்தது. பிற்காலத்துத் திருப்பணியில் பால் குளத்து அம்மன் கோயிலுக்குச் சென்றுவிட்டது. தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறையினரும் சில ஆண்டுகளுக்கு முன் படியெடுத்தனர். கல்வெட்டின் முழுவாசகம் வெளியிடப் படாததால் இதன் அருமை தெரியாமல் போயிற்று. கல்வெட்டின் பாடம் வருமாறு (ஒளிப்படம் 12):

3. ARE., 271 of 1927, ARE., 1926-27, p. 77

ஸ்வஸ்திஸ்ரீ சகலபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகு
லோத்துங்க சோழ தேவற்கு யாண்டு நாற்ப
த்திரண்டாவது - ஸ்ரீசிவபாதசேகரமங்கலத்து
எழுந்தருளிநின்ற ஸ்ரீ ராஜராஜ தேவராந
சிவபாத சேகரதேவர் திருமாளிகை முன்பில்
பெரிய திருமண்டபம் —ஜீ
ர்ந்நித்தமையில் இம்மண்டபம் எடுப்பித்
தான் பிடவூர் வேளான் வேளா
[ன்] அரிகேசவனான கச்சிராஜற்காக இவ்வூர்
[நா]யகம் செய்துநின்ற ஜயசிங்ககுலகா
[ல] வளநாட்டு குளமங்கல நாட்டு சா
[த்த] மங்கலத்து சாத்த மங்கலமுடை
[யா]ன் நம்பிடாரன் நாடறிபுகழன் இ
..டன் விரதங்கொண்டு செய்தார் இ
[வ்வூ]ர் பிடாரகளில் ராஜேந்த்ரசோழனு
[டை]ய நாயகநான ஈசாநசிவரும் தேவ
.. யமாந அறங்காட்டிப்பிச்சரும் ||

ஸ்ரீ சிவபாதசேகர மங்கலத்தில் (உடையாளூரில்) எழுந்தருளி நின்ற ஸ்ரீ ராஜராஜ தேவரான ஸ்ரீ சிவபாதசேகரருக்குத் திருமாளிகை இருந்தது. (ஸ்ரீ என்று மூன்று தடவை வருவதைக் கவனிக்கவும்). இதன் முன் இருந்த பெரிய திருமண்டபம் ஜீரணித்துவிட்டது. இதனைப் பிடவூர் வேளான் அரிகேசவனான கச்சிராஜன் சார்பாக ஜெயசிங்க குலகால வளநாட்டு குளமங்கல வளநாட்டு குளமங்கல நாட்டு சாத்தமங்கலத்துப் புகழறிநாடன் என்னும் பிடாரன் (தேவாரம் ஓதுபவர்) திருப்பணி செய்து வைத்தான்.

ஸ்ரீ சிவபாத சேகரரான ஸ்ரீ இராஜராஜ தேவர் கி.பி. 1014 இல் இறந்து போனார். 98 ஆண்டுகளுக்குப் பிறகு அவர் ஸ்ரீ சிவபாத சேகரமங்கலத்தில் (உடையாளூரில்) எழுந்து அருளுகிறார். இது எப்படி முடியும்? ஆம் முடியும். இராஜராஜனின் நினைவாக ஒரு கோயில் கட்டி இருக்கிறார்கள். அவனது அமரத்வத்தைக் குறிக்கும் வகையில் இராஜராஜனின் உருவச் சிலையை வைத்து வழிபட்டு இருக்கிறார்கள். இவ்வூரில் இராஜராஜன் இறந்திருக்க வேண்டும். அவன் பூதஉடல் மீது கட்டப்பட்ட சிவன் கோயிலின் திருமாளிகையில் இராஜராஜனது திருஉருவச்சிலையை வைத்து வழிபட்டு இருக்கலாம்.[4] இம்மாதிரியான சிவலிங்கம், திருஉருவச்

சிலை வழிபாட்டை சந்திரகுப்த விக்கிரமாதித்தனின் கல்வெட்டும் கூறுகிறது (கி.பி. 400)[5]. அங்கும் பாசுபதர்களே வழிபாடு செய்துள்ளனர். உடையாளூர் கைலாசநாதர் கோயிலில் உள்ள சுந்தரபாண்டியனின் கல்வெட்டு (கி 1283) இவ்வூரில் இருந்த அபிமுக்தம் மடத்தைக் குறிப்பிடுகிறது. இதனை வித்யாசிவ பண்டிதர் என்னும் பாசுபத சைவர் நிர்வகித்தார்.[6] அபுமுக்தம் என்பது காசியைக் குறிக்கும் (வாரணாசி). அவ்வூரும் சுடுகாடு க்ஷேத்திரம் என்பது நோக்கத்தக்கது.

அப்படியானால் உடையாளூரில் இராஜராஜனின் சமாதிக் கோயில் எங்கே உள்ளது? தெரியாது. காலவெள்ளத்தில் அக்கோயில் மறைந்திருக்க வேண்டும். அக்கோயிலின் கல்வெட்டுத் தூணைத்தான் பால்குளத்து அம்மன் கோயிலில் காண்கிறோம். இவ்வூரில் உள்ள விஷ்ணு கோயில் பிற்காலத்தியது. இதில் உள்ள கல்வெட்டுக்கள் சோழர் காலத்தவை. சிவன் கோயிலைப் பற்றிப் பேசுகின்றன. பாசுபத சைவ குருமார்களின் பெயர்களும் வருகின்றன. எனவே இக்கல்வெட்டுப் பகுதிகள் இராஜராஜனின் சமாதிக் கோயில் அழிந்து போனபிறகு விஷ்ணு கோயில் கட்டுவதற்கு உபயோகப்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறியலாம்.

இராஜராஜனை உடையார் ஸ்ரீ இராஜராஜதேவர் என்று கல்வெட்டுக்கள் அறிமுகப் படுத்துகின்றன. உடையாரின் ஊர் உடையாளூர் என்று ஆகிவிட்டதோ? இவ்வூரின் வடக்கே ஒட்டத்தோப்பு என்ற புஞ்சை வயலில் சாய்ந்த நிலையில் மிகப் பெரிய சிவலிங்கத்தின் தலைப்பகுதி பாணத்துடன் தெரிகிறது. இது சுமார் பத்து அடி ஆழம் வரை புதைந்துள்ளதாகக் கூறுகிறார்கள். சுற்றிச் செங்கல் சுவர்கள் புதைந்து உள்ளதாகவும் கூறுகிறார்கள். அச்சுவர்களில் இருந்து எடுக்கப்பட்ட சில கற்கள் பக்கத்தில் உள்ள குழாய் அடியில் உள்ளன. இவை 11ஆம் நூற்றாண்டு சோழர் காலச் செங்கல் போன்று உள்ளன. ஒருவேளை இவ்விடத்தில் தான் இராஜராஜனின் சமாதிக் கோயில் இருந்ததோ? தொல்பொருள் துறையினர் அகழ் ஆய்வு செய்தால் புதிய செய்திகள் கிடைக்கலாம்.

---

4. N. Sethuraman, "Presidential Address" *Studies in Indian Place Names*, Vol. 8, 1986
5. *EI.*, XI-I, *Corpus Inscriptionum*, Vol. III, P.134,135
6. *ARE.*, 311 of 1927.

# 28. தஞ்சாவூர் பள்ளிவாசல் கல்வெட்டு

எ. சுப்பராயலு தஞ்சாவூர்

இடம் : தஞ்சாவூர் ரயில் நிலையத்துக்கு வடக்கில் உள்ள சொம்சுபெரு பள்ளிவாசலுக்குப் பக்கத்தில் நிற்கும் பலகைக் கல்லில் நான்கு புறமும் (ஒளிப்படம் 13).

காலம் : செவ்வப்ப நாயக்கர், கிபி.1550

| | | | |
|---|---|---|---|
| 1 | சாதா | 32 | சொன் |
| 2 | ருணை | 33 | ன படி |
| 3 | வருஷம் | 34 | யினாலே |
| 4 | மார்கழி | 35 | னாயக்க |
| 5 | மீ14 உ | 36 | ர் அய்ய |
| 6 | தஞ்சா | 37 | ன் அவ |
| 7 | வூரில் இ | 38 | ர்கள் உ |
| 8 | ருக்கும் | 39 | த்தார |
| 9 | சமுகப்பீ | 40 | படிக்கு |
| 10 | ருபள்ளி ப | 41 | சம்மதி |
| 11 | க்கிருகளுக் | 42 | த்து |
| 12 | கு நிலம் விட | 43 | சிலம்பா ம |
| 13 | வேணுமெ | 44 | ண்ணையார் |
| 14 | ன்று செ | 45 | வேல்மண்ணை |
| 15 | வ்வப்ப | 46 | யார் கோபால் |
| 16 | னாயக்கர் | 47 | மண்ணையார் |
| 17 | நாஞ்சி | 48 | .. மண்ணை |
| 18 | க்கோட் | 49 | யார் தம்பா ம |
| 19 | டையி | 50 | ண்ணையார் |
| 20 | ல் இருக் | 51 | இந்த அஞ்சுமண் |
| 21 | கும் மண் | 52 | ணையாரும் சம்ம |
| 22 | ணையா | 53 | தித்து எங்கள் எல் |
| 23 | ர்களை | 54 | லையிலெ ஏழு வேலி |
| 24 | அழைப் | 55 | நிலம் விட்டதுக் |
| 25 | பிச்சு உ | 56 | கு எல்லை கரும |
| 26 | ங்கள் எ | 57 | ஙகுளம் உள்பட |
| 27 | ல்லையி | 58 | க்ருமங்குளத்து |
| 28 | லே ஏழு | 59 | க்கு வடக்கு ;ண்ட |
| 29 | வேலி நி | 60 | கோட்டை .... |
| 30 | லம் விடு | | |
| 31 | என்று | | |

61 க்கு கிழக்கும் ..
62 க்கரைக்கி தெற்கு
63 அழகிய குளத்து
64 வாரிக்கு மேற்
65 க்கு இந்த நாங்
66 கெல்லைக்குள்
67 பட்ட நிலத்தை
68 சந்திராதித்தவ
69 ரைக்கும் ஆ
70 ண்டனுபவி
71 ச்சு கொள்ள
72 கடவோரக
73 வும் இந்தபடி
74 க்கு னாயக்கர்
75 அய்யன் அவ
76 ர்களும் மண்
77 ணையார்க
78 ளும் சம்ம
79 தித்து விட்
80 டது இதுக்கு
81 யாதாமொ
82 ருவர் தூத்தி
83 ராரிலெ
84 பிராம
85 ணரி
86 லெ விக்
87 கினம்
88 பண்ணி
89 னார்க
90 ஆனால்
91 காசி ரா
92 மேசு
93 ரத்தி
94 லெ குரால்
95 பசுவை
96 கொன்ற
97 தோசத்
98 திலெ போ
99 வார்
100 துலுக்கரி
101 லெ யாதா
102 மொருவ
103 ர் விக்கின
104 ம் பண்ணி
105 னார்களானா
106 ல் மக்கத்து
107 பள்ளியி
108 லெ பெத்த தா
109 யெ தனா செ
110 ய்த பாவத்
111 திலெ போ
112 வார்
113 யிதுக்கு
114 வெட்டி
115 யான
116 கல்லு
117 படி

குறிப்பு : தஞ்சாவூர் நாயக்க மன்னரான செவ்வப்ப நாயக்கரின் ஆணையின் பேரில் தஞ்சாவூர் சமுசுப்பீருப் பள்ளி என்ற பள்ளிவாசலைச் சேர்ந்த பக்கிரிகளுக்கு நாஞ்சிக்கோட்டையில் ஏழு வேலி நிலம்கொடையாக அளிக்கப்பட்டது. இறுதியில் ஓம்படைக்கிளவியில் குறிப்பிடப்படும் மக்கத்துப் பள்ளி மெக்காவில் உள்ளபுனிதப் பள்ளி வாசலாகும். " தாயெ தனா செய்த " என்பது தாயின் தூய்மையைக் கெடுத்த என்று பொருள்படும். "தனா" என்ற சொல் "தன்னஸ் " (dannas) என்ற அரபுச் செல்லின் தமிழ் வடிவமாகும்.

இக் கல்வெட்டு 1903 ஆம் ஆண்டிலேயே டி.எஸ்.குப்புசாமி சாஸ்திரி தமிழில் எழுதிய தஞ்சாவூர் நாயக்கர் வரலாறு என்ற நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது. என்ற செய்தியை 1927இல் வெளியான ஈராசு பாதிரியாரின் விஜயநகரத்தின் ஆரவீடு அரச வமிசம் என்ற நூலில் சுட்டப்பட்டுள்ளது. ஈராசு பாதிரியார் பள்ளியின் பெயரை சமுசுருப் பள்ளி என்று குறிப்பிட்டுள்ளார். இக் கல் வெட்டு இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் இரு முறை பதிவாகியுள்ளது. (இ.க.ஆ. 1924, எண் 425; 1983-84, எண் 294). (இ.க.ஆ. 1924, எண் 425; 1963-64, எண். 294)

# 29. மஞ்சள் நீர் வாசகமுறி

நா. வள்ளி, காரைக்குடி

இல்லறத்தைச் சிறக்கச் செய்யும் மக்கட்பேறு இல்லாதவர்கள் இன்னொருவர் பெற்ற பிள்ளையை எடுத்து வளர்ப்பது என்பது சமுதாயத்தில் தொன்றுதொட்டுக் காணப் படுகின்ற வழக்கம்தான். தேவகி பெற்ற கண்ணனை, யசோதை தன் மகனாகச் சிறப்புடன் வளர்ப்பதைக் கண்ட ஆய்ச்சியர்கள் "தத்துக் கொண்டாள் கொலோ தான் பெற்றாள் கொலோ?" என்று வியப்பதாகப் பெரியாழ்வார் பாடியுள்ளார்.

பிள்ளையை எடுத்து வளர்த்தலைத் தத்து எடுத்தல் என்பர். அப்பிள்ளைக்குத் தத்துப் பிள்ளை அல்லது தத்துப் புத்திரன் என்று பெயர். இவ்வழக்கம் நாட்டுக்கோட்டை நகரத்தார்களிடையே அதிகமாகக் காணப்படுகின்றது. அவர்கள் இதைச் சுவீகாரம் செய்தல் அல்லது பிள்ளை கூட்டுதல் என்று குறிப்பிடுகின்றனர். பிள்ளை கூட்டும் சடங்கைத் தங்கள் குலமுறைப்படியும் சட்டப்படியும் செய்கின்றனர்.

பெரும்பாலும் திருமணப் பருவத்திலுள்ள ஆண்பிள்ளையைத் தான் தங்கள் வாரிசாகக் கூட்டுகின்றனர். பெண்பிள்ளைகளைச் சுவீகாரம் செய்யும் வழக்கம் இல்லை. ஒருவருக்குப் பெண் குழந்தைகள் இருந்தாலும் தங்கள் குடும்பப் பெயர் விளங்க வேண்டும் என்பதற்காக ஆண் பிள்ளையைச் சுவீகாரம் செய்து கொள்ளுகின்றனர். பிள்ளை கூட்டிக் கொள்ளும் போது தங்கள் குடும்பப் பெயரை அவனுக்கு இட்டுச் சட்டப்படி பதிவு செய்கின்றனர்.

நகரத்தார்களிடையே ஒன்பது கோயில் பிரிவுகள் காணப்படுகின்றன. ஒரு கோயில் பிரிவைச் சேர்ந்தவர்கள் தங்கள் பிரிவைச் சேர்ந்த குடும்பத்திலிருந்துதான் பிள்ளையைக் கூட்டிக் கொள்கின்றனர். சுவீகாரம் செய்து கொள்ளும் போது பிள்ளையைப் பெற்றவர்கள் தாங்கள் பெற்ற பிள்ளைக்கு மஞ்சள் நீர் கொடுத்துக் குடிக்கச் செய்து, பிள்ளையைக் கூட்டிக் கொள்ளும் பெற்றோரிடம் ஒப்படைப்பது முக்கியச் சடங்காக நடைபெறுகிறது.

காரைக்குடி முரு.லெ.கி.சொ. குடும்பத்தாரிடம் ஓர் ஓலைச் சுவடி உள்ளது. அந்த ஓலைச் சுவடி ஒரு நகரத்தார் குடும்பத்தார் சுவீகாரம் செய்து கொண்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. கி.பி. 1854 இல் நடந்த நிகழ்ச்சி. நகரத்தார் வசிக்கும் ஊர்களுள் ஒன்றான வேகுப்பட்டியில் பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சேர்ந்த ஒரு குடும்பத்திலிருந்து கிருட்டிணன் என்பவரை காரைக்குடி பிள்ளையார் பட்டிக் கோயிலைச் சேர்ந்த ஒரு குடும்பத்தார் தங்கள் வாரிசாகக் கூட்டிக் கொண்டுள்ளனர். அதைக் குறித்து இரு குடும்பத்தாரும் ஓர் உடன்படிக்கை முறி எழுதிக் கொண்டுள்ளனர். பிள்ளை கூட்டிக் கொள்பவருக்குப் பிற்காலத்தில் குழந்தைகள் பிறந்தால் குடும்பச் சொத்துக்களை எவ்வாறு பிரித்துக் கொள்வது, வளர வந்த பிள்ளைக்குத் தாய்மாமன் சடங்குகள் யார் செய்வது போன்ற செய்திகள் தீர ஆலோசித்துத் தெளிவாக எழுதப் பட்டுள்ளன. ஓலைச்சுவடி இதை 'மஞ்சள் நீர் வாசக முறி' என்று குறிப்பிடுகிறது. இறுதியில் இரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களும கையெழுத்திட்டுத் தங்கள் ஒப்புதலைத் தெரிவித்துள்ளனர்.

> "ஆனந்த வருஷம் கார்த்திகை மீ 23உ கல்வாச நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங் குடியான ராஜநாராயண்புரத்தில் பிள்ளையார்பட்டி திருவேட் பூருடையான் முருகன் செட்டி லெட்சுமணனுக்கு இவ்வூர் யின்னபடி மேற்படிபுரம் உடையான் நல்லகருப்பன் செட்டி கருப்பாத்தாள் மகன் கிஷ்ட்னனை மஞ்சள் நீர் பெத்த புத்திரனாக பிள்ளைவிட்ட படியினாலே லெட்சுமணன சீட்டு கொட்டி தேவதானம் கோவில் குளம் சகலமும் கல்லும் புல்லும் பூமியும் சந்திராதித்தர் உள்ள வரைக்கும் பரம்பரையாக கிஷ்ட்னனை ஆண்டு அனுபவித்துக் கொள்ளவும். இனிமேல் லெட்சுமணனுக்குப் பிள்ளை பிறந்தால் கிஷ்ட்னனுக்கு ஒரு பங்கும் பிறக்கிற பிள்ளைகளுக்கு ஒரு பங்குமாக ஆண்டு அனுபவித்துக் கொள்ளவும் பிள்ளைகளுக்கு கல்யாணம் புதுமை சீதனம் பொதுவில் செய்கிறது. லெட்சுமி சீதனம் பூசனம் சகலமும் பொதுவில் வாங்கிக் கொள்ளுகிறது. கிருஷ்ணனுக்கு மாமச்சடங்கு சாத்தன் செட்டி பெரிய கருப்பன் உள்ளிட்டார் செய்கிறது. முருகன் செட்டி ராமநாதன் உள்ளிட்டாரும் நல்லகருப்பன் செட்டி கருப்பாத்தாள் மகன் உள்ளிட்டாரும் சாத்தப்ப செட்டி பெரியகருப்பன் உள்ளிட்டாரும் சின்னான் செட்டி சேக்கப்பன் உள்ளிட்டாரும் சம்மதித்து சொல்ல இந்த வாசகமுறியெழுதினேன்

இவ்வூரில் யின்னபடி யின்னபுரம் உடையான் வெங்கிடாசலம் செட்டி சிதம்பரம் கையெழுத்து

முருகன் செட்டி லெட்சுமணன்

முருகன் செட்டி ராமநாதன் உள்ளிட்டார்

மேற்படி ராமநாதன்

நல்ல கருப்பன் செட்டி கருப்பாத்தான்

மேற்படி அண்ணாமலை உள்ளிட்டார்

சின்னான் செட்டி சேக்கப்பன் உள்ளிட்டார்

சாத்தன் செட்டி பெரியகருப்பன் உள்ளிட்டார்

# 30. முசிறித் துறைமுகம் சில புதிய செய்திகள்

கா. ராஜன், தஞ்சாவூர்

**கிரேக்க மொழி ஆவணம்**

மேற்குக் கடற்கரையில் பெரியாற்று வாயிலில் அமைந்திருந்த சங்ககாலச்சேரரின் துறைமுகமான முசிறியைப் பற்றி மேலும் அறிந்துகொள்ளஅண்மைக்கால கண்டுபிடிப்புகள் சில துணை புரிகின்றன. *

அண்மையில் வியன்னா அருங்காட்சியகத்தில் கி.பி. இரண்டாம்நூற்றாண்டைச் சேர்ந்த பேபிரஸ் (Papyrus) தாளில் எழுதப்பட்ட அரிய கையெழுத்துச் சுவடி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இச்சுவடி கிரேக்க மொழியில் இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. முன்புறம் முசிறியைச் சேர்ந்த வணிகர் ஒருவருக்கும் எகிப்து நாட்டில் நைல் ஆற்று வாயிலின் அருகில் அமைந்திருந்த நகரமான அலெக்ஸாண்டிரியாவில் உள்ள ஒரு வணிகருக்கும் இடையே ஏற்பட்ட வணிக ஒப்பந்தத்தைப் பற்றியது. பின்புறம் முசிறியிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் பட்டியலைத் தருகிறது. இவ்வொப்பந்தம் அலெக்ஸாண்டிரியாவில் எழுதப்பட்டது. முசிறியிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள் செங்கடலில் உள்ள ஒரு துறைமுகத்தில் மரக்கலங்கள் மூலம் வந்திறங்கியதாகக் குறிக்கப்படுகிறது. அத்துறைமுகத்தின் பெயர் உள்ள பகுதி அழிந்து போயுள்ளது. அத்துறைமுகத்தில் இறங்கிய வணிகப் பொருள்கள் ஒட்டகத்தின் மூலமாக நைல் ஆற்றுக்கும் செங்கடலுக்கும் இடையே உள்ள கிழக்குப் பாலைவனத்தைக் கடந்து நைல் ஆற்றுக் கரையில் உள்ள கோப்டாஸ் (Coptos) நகரத்தை அடைந்தன. பின் அவை மீண்டும் அங்குமரக் கலத்தில் ஏற்றப்பட்டு நைல் ஆற்று வழியாக மத்தியதரைக்கடலில் அவ்வாற்றின் வாயிலில் அமைந்துள்ள அலெக்ஸாண்டிரியா நகரத்தை அடைகிறது.

இவ்வொப்பந்தம் முசிறியில் பொருள்கள் ஏற்றப்பட்டது முதல் அலெக்ஸாண்டிரியாவை வந்தடையும் காலம்

வரையிலானது ஆகும். அலெக்ஸாண்டிரியாவில் இருந்து மீண்டும் மத்தியதரைக்கடல் வழியாக அப்பொருள்கள் ரோம நாட்டை அடைந்திருக்க வேண்டும். இதேவழியாகவே அலெக்ஸாண்டிரியாவில் இருந்து முசிறிக்கு வணிகப்பொருள் எதிர்த்திசையில் அனுப்பப்பட்டிருக்க வேண்டும்.

இக்காகிதச் சுவடி ஒரு வணிகருக்குச் சொந்தமான ஏற்றுமதிப் பொருள்கள், அதன் அளவு மற்றும் மதிப்பு ஆகியவற்றைக் குறிக்கிறது. அவைகள் ,

1) 700 முதல் 1700 பவுண்டு எடை கொண்ட வாசனைத்திரவியங்கள்.
2) 4700 பவுண்டு எடை கொண்ட தந்தப் பொருள்கள்.
3) 790 பவுண்டு எடை கொண்ட துணி வகைகள்.

இவை அப்பொழுது எகிப்தில் 2400 ஏக்கர் வளமான நன்செய் நிலத்தின் விலைக்கு ஈடானவை. இது ஒரு வணிகர் ஒரு கப்பலில் பெற்றிருந்த ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பு மட்டுமே. இதைப் போன்றே ஒரு கப்பலில் ஏறக்குறைய 150 வணிகர்களின் பொருள்கள் அடங்கியிருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. இப்பொருள்களுக்கு ரோம நாட்டுச் சுங்கவரி அதிகாரிகளால் வரி இடப்பட்டது. அவை அப்பொருள்களின் மொத்த மதிப்பில் 25 ஆகும். ஆனால் இச் சுங்கவரி செங்கடல் துறைமுகத்தில் பொருள்கள் வந்தடைந்த போது இடப்பட்டதா அல்லது நைல் ஆற்றுக்கரையை அடைந்த பொழுது இடப்பட்டதா எனத் தெரியவில்லை.

**அகழாய்வும் நிலப்பொதியியல் ஆய்வும்:**

*சங்க இலக்கியங்கள் முசிறித்துறை பற்றிப்பலபடப் பேசுகின்றன*

*"சேரலர், சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க*
*யவனர் தந்த வினைமாண் நன்கலன்*
*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*
*வளங்கெழு முசிறி" (அகம்.149)*

என்ற அகநானூற்றுப் பாடலின் அடிகள் சங்க காலத்தில் சேரருக்கும், யவனருக்கும் இடையே இருந்த வணிகத் தொடர்பைத் தெளிவுறுத்தக் காணலாம். இலக்கியச் சான்றுகள்

அனைத்தும் மேலைக் கடற்கரையில் முசிறித் துறைமுகம் இருந்திருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. இதற்கருகில் சேரர் தலைநகரான வஞ்சி யிருந்திருக்க வேண்டும். ஆயினும் சேரர்கள் மேலைக் கடற்கரையில் இருந்து ஆட்சி புரிந்தனரா அல்லது திருச்சி மாவட்டத்தில் உள்ள கரூரிலிருந்து ஆட்சி புரிந்தனரா என்பது பற்றி கருத்து வேறுபாடுகள் தொடர்ந்து நிலவுகின்றன. இதற்கு முதன்மையான காரணம் இதுவரை பெரியாற்றுக் கரையில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வும், அகழாய்வும் கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்கு முந்தைய சான்றுகளை அளிக்காமையே ஆகும். ஆனால் பெரியாற்றுக் கரையில் அமைந்துள்ள கொடுங்கல்லூருக்கு வடக்கே வணிகப் பாதையில் அமைந்துள்ள எய்யல் (Eyyal) என்ற இடத்தில் கிடைத்த ரோமானியக் காசுகளும், திருச்சூர் மாவட்டத்தில் உள்ள ஏராளமான பெருங்கற்படை சின்னங்களும் இப்பகுதியில் மக்கள் கி.மு. முதல் நூற்றாண்டுக்கு முன்பே வாழ்ந்ததற்கான தடையங்களாக உள்ளன.

சங்கப் பாடல்களிலும், வெளிநாட்டவர் குறிப்புக்களிலும் காணப்படும் முசிறியையும் வஞ்சியையும் அறியும் பொருட்டு கேரள மாநில அரசின் தொல்பொருள் ஆய்வுத்துறை 1993 சனவரி 8, 9 தேதிகளில் கொடுங்கல்லூரிலும், 1993 செப்டம்பர் 19 ஆம் தேதி திருவனந்தபுரத்திலும் நிலப்பொதியியல், தொல்லியல், வரலாறு மற்றும் இலக்கியம் தொடர்புடைய அறிஞர்களை அழைத்து கருத்தரங்கம் ஒன்றை நடத்தியது.

அக்கருத்தரங்கில் கொடுங்கல்லூரைச் சுற்றி ஏற்பட்டுள்ள நிலப்பொதியியல் மாற்றம் பற்றி சில புதிய செய்திகள் வெளியாயின. நீர் வாரியம், நிலப்பொதியியல் ஆய்வுத்துறை, கடலாய்வுத்துறை, எண்ணை மற்றும் இயற்கை எரிவாயுத் துறையைச் சார்ந்த வல்லுநர்கள் கடலிலும், நிலப்பரப்பிலும் ஆழ் குழாய்கள் செலுத்தி மேற்கொண்ட ஆய்வுகள் மூலம் அங்கு நில அமைப்பில் பெரிதும் மாற்றம் ஏற்பட்டிருப்பது அறிய முடிந்தது. கொடுங்கல்லூரைச் சுற்றியுள்ள நிலப்பகுதி நில மடிப்பினால் (Fault) 60 அடி ஆழம் ஆழ்ந்துவிட்டுள்ளது. அங்ஙனம் ஏற்பட்ட தாழ்வினால் பெரியாறு நீர் ஓட்டத்தின் தடமும் வேகமும்

பெரிதும் பாதிக்கப்பட்டது. மேலும் இப்பகுதி ஆழ்ந்து போனதால் இதைச் சுற்றியுள்ள மேடான பகுதிகளின் மண் சரிந்து தாழ்வுப் பகுதியை நிரப்பியுள்ளது. இம்மாற்றத்தினால் இப்பகுதியில் இருந்த வரலாற்றுச் சான்றுகளும் நிலத்தரைக்குக் கீழ் சுமார் 60 அடி ஆழத்திற்கு சென்றிருக்கக் கூடும் எனவும் இந்நிகழ்ச்சி சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்றிருக்கக்கூடும் என்றும் நிலபொதியியல் வல்லுநர்கள் கருகிறார்கள். ஆகவே இப்போது கொடுங்கல்லூரில் கி.பி.8 ஆம் நூற்றாண்டுக்கு பிந்தைய வரலாற்றுச் சான்றுகள் மட்டுமே கிடைப்பதில் வியப்பில்லை. இனிமேல் சங்ககால வஞ்சியோ, முசிறியோ தொல்லியலார் கண்ணில்பட வாய்ப்பே இல்லை.

- இக்குறிப்பு கீழ்க்கண்ட சான்றுகளின் அடிப்படையில் எழுதப்பட்டது.


1. H. Harraner and P. Sijpasteiju, " Ein Neues Dokument Zu Rome-Indianhandel : P. Vendob 6.40822 ", *Anzhien* 122 (1985), 1244-155 at 130 (*recto*, col. ii, 2-12).

2. L. Casson, "Ancient Naval Technology and Route to India", *Rome and India*, (ed.,) Vimala Begley and Richard Daniel De Puma, Oxford University, 1992, pp. 8-11.

3. Steven E. Sidebotham, "Ports of the Red Sea and the Arabia -India Trade ", *Universite des Sciences Humaines de Strasbourg Travaux du Centre de Recherche Sur Le Preislamique Et Son Environnement-Historique Et Cultural*, (ed.,) T. Fahd, 1989, pp. 195-223.

# 31. இந்தோனேசியாவில் இந்தியப் பண்பாட்டின் தாக்கம்

ப. சண்முகம், சென்னை.

தென்கிழக்காசிய நாடுகளுக்கும், இந்தியாவுக்கும் இடையிலான பண்பாட்டுத் தொடர்புகளைப் பற்றிய அண்மைக்காலக் கண்டுபிடிப்புக்களை நொபொரு கராஷிமா தலைமை யிலான எண்மர் குழு 1993 டிசம்பர் 1994 சனவரி மாதங்களில் மூன்று வாரங்கள் இந்தோனேசியாவில் கள ஆய்வு மேற்கொண்டது.[1] சுமத்ரா தீவில் பாலெம்பாங்கு, ஜாம்பி, ஜாவா தீவில் ஜகார்த்தா, சனூர், கோகஜ, குனுங்கவி மற்றும் வைசாகி கோவில் ஆகிய பல இடங்களில் உள்ள அகழாய்வுச் சின்னங்கள் கோயில்கள், அருங்காட்சியங்கள் ஆகியவற்றைப் பார்வை யிட்டதோடு ஆங்காங்கு சில தொல்லியல் அறிஞர்களையும் கண்டு கருத்துப் பரிமாற்றம் செய்யப்பட்டது. சில அரிய கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டன.

ஏறத்தாழ கி.பி. 6ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து தென்னிந்திய எழுத்துக்களில் கல்வெட்டுக்கள் காணப்படு கின்றன. ஆறாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்கள் (சுமார் 10) மட்டும் தனியாக சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ளன. அதற்குப் பின்பு கிடைப்பவை சிறு பகுதி (குறிப்பாக தேதி குறிப் பிடும் பகுதி) சமஸ்கிருதத்திலும் மற்றப்பகுதி பழைய ஜாவா மொழியிலும் எழுதப்பட்டுள்ளன. எழுத்துக்கள் மட்டும் தென்னிந்திய பல்லவ கிரந்த எழுத்துக்களின் தொடர்ச்சி யாகவே உள்ளன.

அண்மைக் காலத்தில் ஸ்ரீவிஜய அரசின் தொடக்க நிலை பற்றிய அதாவது கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த

1. இக்குழுவில் ஜப்பானியப் பேராசிரியர் நால்வரும் (நொ.கராஷிமா,சகுராய், ஒகுரா, இஷிஜவா) இந்தியப் பேராசிரியர் நால்வரும் கே.வி.ரமேஷ், கே.வி. ராமன், எ.சுப்பராயலு மற்றும் இக்கட்டுரை ஆசிரியர்) உள்ளனர். சென்ற ஈரா ண்டுகளில் இக்குழு வியட்நாம், லாவோசு, தாய்லாந்து, மலேசியா ஆகிய நாடு களில் கள ஆய்வு செய்தது.

சில புதிய கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன என்பதைக் குறிப்பிட வேண்டும். பழையஜாவா மொழியில் எழுதப்பட்ட இவற்றின் மூலம் ஸ்ரீவிஜய அரசு எப்படி சுமத்திரா தீவில் தோன்றி வெகு விரைவில் ஜாவாவையும், மலேய தீபகற்பத்தையும் ஆட்கொண்டு வளர்ச்சியடைந்தது என்பது பற்றி அறியமுடிகிறது. கி.பி. 1025 ஐ ஒட்டி ஸ்ரீவிஜயப் பேரரசு சோழ அரசன் முதல் இராஜேந்திரனுடைய கடற் படையால் தாக்கப்பட்டது என்பது சோழர் கல்வெட்டுக்களில் பெரிதும் பேசப்படும் செய்தி. ஆனால் இது பற்றி எந்த வகையிலும் ஸ்ரீவிஜயக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுவதாகத் தெரியவில்லை. இது ஒரு புதிராக உள்ளது.

பாலெம்பாங்கு, ஜகார்த்தா முதலிய இடங்களில் உள்ள அருங்காட்சியகங்களில் பல குண்டுக் கற்களில் சமஸ்கிருத மொழியில் "ஸ்ரீஜய ஸித்₃த₄ யாத்ரா" என்ற தொடர் கொண்ட சிறு கல்வெட்டுக்கள் (கி.பி. 6-8 ஆம் நூற்றாண்டு) உள்ளன (ஒளிப்படம் 14). வழவழப்பாகத் தேய்ந்துள்ள இக்குண்டுக் கற்கள் ஆற்றுத் துறைகளிலும் கடற்துறைகளிலும் கண்டெடுக்கப் பட்டவை. இவற்றின் உருவங்களைப் பார்த்தால் நங்கூரத்துக் காகப் பயன்படுத்தப்பட்டவையாக இருக்க வாய்ப்புண்டு. இக்கல் வெட்டுக்களைப் பற்றிப் பல கருத்துக்கள் உண்டு[2]. கடற்படையெடுப்பின் போதோ, வணிகத்துக்காக கடலில் செல்லும் போதோ வெற்றி அல்லது நன்மை அடைய வேண்டி "சித்தயாத்ரா" கற்கள் கடலிலோ ஆற்றிலோ போடப்பட்டிருக்கலாம்.

தமிழ்நாட்டுத் தொடர்பைத் தெரிவிக்கும் வகையில் இரு தமிழ்க் கல்வெட்டுக்கள் ஜகார்த்தா அருங்காட்சியகத்தில் கண்டறியப்பட்டன என்பது ஒரு மகிழ்ச்சியான செய்தி (பார்க்க: அடுத்த கட்டுரை).

---

2. K.A. Nilakanta Sastri, "Siddhayatra" *South India and South - East Asia* (1978), pp. 213-19.

இந்தியப் பண்பாட்டின் தாக்கத்தை பல இந்து, புத்தக் கோயில்களிலும் சிற்பங்களிலும் காணலாம். பிரம்மா, சிவன். விஷ்ணு ஆகிய மும்மூர்த்திகளுக்கும் தனித்தனியாக ஆனால் அருகருகே கோயில்கள் பல இடங்களில் உள்ளன. யோக்ய கர்த்தா நகருக்கருகில் பிரம்பானன் (Prambanan) என்ற இடத்தில் உள்ள கோயில்கள் மிகப் பெயர் பெற்றவை. 7-8ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டவை இவை. கோயில்கள் மேற்கு நோக்கியுள்ளன. சிவன் கோயில்களில் வழக்கமாக தக்ஷிணா மூர்த்தி யிருக்கும் இடத்தில் "சிவகுரு" என்றழைக்கப்படும் அகத்தியர் சிலையும் (ஒளிப்படம் 16), கோயிலின் கிழக்குச்சுவர் அதாவது பின் சுவரில் விநாயகர் சிலையும், வடக்குச் சுவரில் துர்க்கையின் சிலையும் வைக்கப்பட்டுள்ளன. விமானங்கள் வட இந்தியக் கோயில்களின் சாயலைப் பெற்றுள்ளன. கோயில்கள் சமவெளிகளில் மட்டும் அல்லாது உயரமான மலை உச்சிகளிலும் கட்டப் பட்டுள்ளன. ஜாவாதீவில் ஏறக்குறைய 2000 மீட்டர் உயரமுள்ள தியங் (Dieng) பீடபூமி, கெடுங் சொங்கோ (Gedung Songo) ஆகிய பகுதிகளில் பல கோயில்கள் உள்ளன. இவற்றில் பெரும் பாலானவை பள்ளிப்படைக் கோயில்களாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. பாலித்தீவில் உள்ள கோகஜ என்ற கோவில் குன்றைக் குடைந்து ஏற்படுத்தப்பட்ட குகைக் கோவிலாகும். குனுங்கவியில் பல குடைவரைக் கோவில்கள் ஒருங்கே அமைக்கப்பட்டுள்ளன (ஒளிப்படம் 15). இக்கோவில்கள் யாவும் உயர்ந்த மேடையின் மீது அமைக்கப்பட்ட மாடக்கோவில் களாகும். சிற்ப வேலைப்பாடுகள் யாவும் நுணுக்கமாக செய்யப் பட்டுள்ளன.

இந்து சமயச் சிற்பங்களில் விநாயகர், மகிசாசுரமர்தினி, சூரியன், சந்திரன், அகத்தியர் ஆகியோர் உருவங்கள் சிறப்பானவை. விநாயகர் உருவங்கள் நான்கு கைகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. மகிசாசுரமர்தினியின் உருவங்களில் (ஒளிப்படம் 17), துர்க்கையின் காலடியிலுள்ள எருமை வடிவிலிருந்து மகிசாசுரன் வெளிப்படும் வண்ணம் அமைக்கப் பட்டுள்ளது. இவ்வகையில் இவை தக்காணச்

சிற்பப் பாணியை ஒத்துள்ளன. சூரியன் சிலைகள் பெரும்பாலும் ஏழு குதிரைகள் இழுத்துச் செல்லும் தேரோடு வடிவமைக்கப் பட்டுள்ளன. அகத்தியர் சாமுண்டேசுவரி, கஜலக்ஷ்மி சிற்பங் களும் சிவன், விஷ்ணு, பிரம்மா சிலைகளும் இலிங்க வடிவங் களும் பல இடங்களில் காணக் கிடைக்கின்றன. பல கோவில்களின் அடித்தளங்களிலும் பிற இடங்களிலும் கதைகளைச் சித்தரிக்கும் தட்டையான சிற்ப வரிகள் (Panels) செதுக்கப் பட்டுள்ளன. இவைகளில் முக்கியமாக சத்தியவான் கதை, இராமாயணக் காட்சிகள், கண்ணன் அவதாரக் காட்சிகள் ஆகியனவற்றைக் குறிப்பிடலாம். செப்புச் சிற்பங்களில் முக்கியமான ஒன்று ஜாம்பி நகரில் உள்ள அருங்காட்சியகத்தில் காணப்பட்ட பாவை விளக்காகும் (ஒளிப்படம் 13). நின்ற நிலையில் தலைக் கொண்டையுடன் ஏந்திய அகல்விளக்குடன் காட்சிதரும் இந்நங்கையின் உருவம் சோழர் கலைப் பாணியில் செய்யப்பட்டுள்ளது. 12-13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகலாம்.

இந்துமதச் சின்னங்கள் தவிர புத்தமதச் சின்னங்களும் பல இங்கே உள்ளன. புத்த தூபங்களில் மிக உயரமானதும், உலகப் புகழ் பெற்றதுமான பொரோபுதூர் 9 தளங்களில் அமைக்கப்பட்ட பெரிய தூபம் ஆகும். புத்த ஜாதகக் கதைகள் மிக விரிவாக உயிர்த்துடிப்புடன் இங்கே முதல் நான்கு தளங் களில் சிற்பவரிகளாகச் செதுக்கப்பட்டுள்ளன. இந்தோனே சியாவின் பல பகுதிகளில் புத்த தூபங்களும் புத்தர்சிலைகளும் போதிசத்துவர் தாரா போன்றோரின் உருவங்களும் உள்ளன. முக்கியமாக சுமத்திராத் தீவில் முவாரா ஜாம்பியிலுள்ள 8 புத்த மடாலயங்கள் சிறப்பானவையாகும். இவைகள் செங்கற்களால் கட்டப்பட்டு நாளந்தா கலைப்பாணியின் தாக்கத்தைக் கொண்டு திகழ்கின்றன.

இந்தோனேசியாவுடன் ஏற்பட்ட இந்தியத் தொடர்பு கி.பி. முதல் நூற்றாண்டு முதலே தொடங்கி இருக்கலாம். ஆயினும் முக்கியமான சான்றுகள் கி.பி 5-6 ஆம் நூற்றாண்டு களிலிருந்து தான் கிடைக்கின்றன. எனினும், வெகு

விரைவிலேயே இந்தியப் பண்பாட்டின் தாக்கத்தையும் மீறி உள்நாட்டுப் பண்பாட்டின் ஆதிக்கம் மேலோங்குவதை மொழி வளர்ச்சியிலும், கலை வளர்ச்சியிலும் தெளிவாகக் காணலாம். இந்தியப் பண்பாட்டுப் பரிமாற்றங்கள் ஏறக்குறைய 10ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் அரிதாகின்றன. அதற்கு முன்பு ஏற்பட்ட தாக்கத்தின் எச்சங்களையே பின்வரும் நூற்றாண்டுக் கலைச் சின்னங்களில் காண்கிறோம்.



# 32. சுமத்ராவில் தமிழ்க் கல்வெட்டுக்கள்

எ.சுப்பராயலு, தஞ்சாவூர்

முன் கட்டுரையில் திரு ப.சண்முகம் குறிப்பிட்டபடி ஜகார்த்தா தேசிய அருங்காட்சியகத்தில் இரு தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளன[1]. இவற்றில் ஒன்று ஏற்கெனவே வரலாற்றாசிரியருக்கு ஓரளவுக்கு அறிமுகமான ஒன்று. அதைப் பற்றி முதன் முதல் 189192 ஆம் ஆண்டின் சென்னைக் கல் வெட்டு அறிக்கையில் அன்றைய அரசுக் கல்வெட்டாய்வாளர் ஆன உல்ட்சு (Hultzsch) அவர்களால் கீழ்க்கண்ட குறிப்பு வெளியிடப்பட்டது..

> To the kindness of Dr. J. Brandes I am indebted for two casts of a Tamil inscription from Loboe Toewa, Baros, Sumatra which is in the Archaeological Collection of the Batavian Society of Arts and Science (Catalogue , page 388, No. 12). The original stone is badly broken and injured; but so much is certain that the inscription is dated in the Saka year 1010* (AD 1088), and that it records a gift by a body of persons who are styled "the one thousand-five-hundred"**. It is interesting to learn that the Tamil language was used in public documents on the island of Sumatra in the 11th century.
>
> * சகரை ஆண்டு ஆயிரத்துப்பத்து (line 1ff)
> * ஆயிரத்தைந்நூற்றுவர்
>
> (*Madras Epigraphy Report*, 1891–92, p. 11, para. 14)

இக்குறிப்பின் படி இக்கல்வெட்டு 1890 ஐ ஒட்டிக் கண்டு பிடிக்கப்பட்டது எனலாம். உல்ட்சு அவர்களின் குறிப்பை யொட்டி பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் 1932 இல்

1. இக்கல்வெட்டுக்களைப் படிக்க இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை கூடுதல் மேலாண் இயக்குநர் முனைவர் கே.வி. ரமேஷ் அவர்கள் துணை புரிந்தார். ஜாவா மொழிப் பகுதியைப் படித்துதவிய இந்தோனேசியக் கல்வெட்டியல் அறிஞர் ஆத்மஜோ அவர்களுக்கும் நன்றி.

"சுமத்ராவில் ஒரு தமிழ் வணிகக் குழு" என்ற கட்டுரையெழுதினார். கல்வெட்டு முழுவதும் கிடைக்காத நிலையில் நீலகண்ட சாஸ்திரியார் ஊகித்து வெளியிட்ட கருத்துக்கள் அவருடைய நுண்ணிய வரலாற்றறிவை வெளிப்படுத்துவதாக உள்ளன[2].

> "லோபொ தோவ துண்டுக் கல்வெட்டு சுமத்ரா வரை அவர்களுடைய [ஐநூற்றுவர் வணிகக் குழுவுடைய] வணிகம் பரவியிருந்தது என்பதற்கு ஒரு நல்ல சான்று. இதிலிருந்து பதினோராம் நூற்றாண்டில் சுமத்ராத் தீவில் பொது ஆவணங்களின் மொழியாக தமிழ் வழங்கியது என்று ஊகிப்பது அவ்வளவு சரியாகாது. இருப்பினும் சுமத்ராவில் ஏறக்குறைய நிலையாக ஒரு தமிழ்க் குடியேற்றம் இருந்தது. அதில் கல்வெட்டுக்களைப் பொறிக்கக் கூடிய தச்சர்களும் இருந்தார்கள் என்று உறுதியாகச் சொல்லலாம். அந்தக் குடியேற்றவாசிகள் சோழர் காலத்துத் தென்னகக் கோயில்கள் சிலவற்றை அங்கு எழுப்பினார்கள், அக்கோயில் சுவர்களில் கல்வெட்டுக்களைப் பொறித்தார்கள்."

மூன்று துண்டுகளாக உடைந்த இந்தக் கல் நன்கு ஒட்டப்பட்டு அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக வைக்கப் பட்டுள்ளது. கல்வெட்டை உல்ட்சு முழுமையாகப் படித்துப் பதிப்பிக்காததற்குக் காரணம் அவர் பெற்ற மைப்படிகள் மிகவும் தெளிவில்லாமல் இருந்தமை என்று கருத வேண்டி யுள்ளது. ஏனென்றால் கல் உடைந்திருந்தாலும் கல்வெட்டுப் பொறிப்பு பெரும்பாலும் தெளிவாக உள்ளது. உடைந்த இடத்தில் மட்டும் ஒரு வரியும் *(வரி 18)* சில எழுத்துக்களும் *(வரி 2, 9, 20, 21)* அழிந்துவிட்டன.

கல் ஆறு பட்டைகளைக் கொண்டுள்ளது. மூன்று பட்டைகளில் கல்வெட்டு பொறிக்கப் பெற்றுள்ளது (ஒளிப்படம் 19–21). முதலிரண்டு பட்டையைச் சேர்த்து இயல்பான

---

2. K.A. Nilakanta Sastri, 'A Tamil Merchant–Guild in Sumatra', Overqedrukt uit het Tijdschrift voor Ind. Taal Land en Volkenkunde, LXXII, 1932, pp. 1–15 (Reprinted in K.A. Nilakanta Sastri, South India and South–East Asia, (Geetha Book House, Mysore, 1978), pp. 236-247.

முறையில் மேலிருந்து கீழாக 19 வரிகள் எழுதப்பட்டுள்ளன. தொடர்ந்து மூன்றாம் பட்டையில் (வரிகள் 20-26) பக்கவாட்டில் எழுதப் பெற்றுள்ளன. நான்காம் பட்டையில் ஸ்ரீ என்ற ஒரு எழுத்து மட்டும் தலைப்பக்கம் உள்ளது.

இக்கல்வெட்டு எழுத்துக்கள் முதற்குலோத்துங்கன் கல்வெட்டு எழுத்துக்களைப் பெரிதும் ஒத்துள்ளன. ஒரு சில கிரந்த எழுத்துக்களைத் தவிர கல்வெட்டு முழுவதும் தமிழில் உள்ளது. வரி 23இல் கல் என்பது "கள்' என்று தவறுபட எழுதப்பட்டிருக்கிறது. வரி 26 இல் 'மறவற்க' என்பது 'மறவெற்க' என்றுள்ளது. வரி 16இல் "நாம் வைத்துக் குடுத்த" என்பது "நா வைத்துக் கொடுத்த" என்று எழுதப்பட்டுள்ளது. இதில் "ம்" விடுபட்டுள்ளது அல்லது தொக்கியுள்ளது என்று கொள்ள வேண்டும்.

32.1

1 ஸ்வஸ்தி ஸ்ரீசக [ரை]

2 ஆண்டு ஆயிரத்து [ப்ப]

3 த்துச் செல்லா நின்

4 ற மாசித் திங்கள்

5 வாரோசாந மாதங்

6 கரி வல்லவத் தேசி உ

7 ய்யக் கொண்ட பட்

8 டிநத்து வேளாபுரத்து

9 கூடி நிரந்த தேசி[த் திசை]

10 விளங்கு திசை ஆயிர

11 த் தைஞ்னூற்றுவரோ

12 ம் நம்மகநார் நகர ஸேனாப

13 பதி நாட்டுசெட்டி

14 யார்க்கும் பதிநெண்பூமி

15 தேசி அப்பர்க்கு மா[வெ]த்

16 துகளுக்கும் நா வைத்துக்

*17 குடுத்த பரிசாவது [ம]ரக்*

*18 ———————————*

*19 ல மரக்கல நாயநுங் கேவி*

*20 களும் கஸ்தூ[ரி] விலை மு[தலகப்பட]*

*21. அஞ்சு துண்[டா]யம் பொன்னும் குடு*

*22 த்துப் பாவாடை ஏறக்கடவதாகவும்*

*23 இப்படிக்கு [இ]க்க[ள்] எழுதி நாட்டி*

*24 க்குடுத்தோம் பதிநெண்பூமி தேசித் திசை விள*

*25 ங்கு திசைஆயிரத் தைஞ்ஞூற்றுவரோம் அ*

*26 நமறவெற்க அறமேய் துணை*

வரி 1-3 இல் சக யாண்டு கொடுக்கப்பட்டுள்ளது. உல்ட்சு தெளிவாக "ஆயிரத்துப் பத்து" என்று படித்துள்ளார். ஆனால் இப்பொழுது கல்லில் "ப்ப" தெளிவாக இல்லை. இருப்பினும் "ப்ப" தவிர்த்த வேறு எழுத்துக்கள் அங்கே இட்டு நிரப்ப முடியாது. ஆகவே ஆண்டு கி.பி. 1088-89 என்று முடிவாகச் சொல்லலாம். இந்த ஆண்டு மாசி மாதம் மாதங்கரி வல்லவ தேசி உய்யக் கொண்ட பட்டினம் என்று மாற்றுப் பெயர் பெற்ற வாரோசு என்ற பட்டினத்தில் உள்ள வேளாபுரம் என்ற பகுதியில் கூடிய திசைஆயிரத்து ஐநூற்றுவர் (வணிகக் குழு) செய்த ஓர் ஏற்பாட்டைப் பற்றியது இக்கல்வெட்டு. இந்த ஐந்நூற்றுவர் குழு நகரஸேனாபதி ஆன நாட்டுச் செட்டியார் என்பவருக்கும் பதினெண் பூமி அப்பர் என்பவருக்கும், மாவெத்துகள் என்பாருக்கும் ஓர் ஊதியம் அல்லது கொடை ஏற்பாடு செய்கிறார்கள். அதாவது மரக்கலநாயகன், கேவிகள் ஆகியோர் மேற்குறிப்பிட்டோருக்கு தம் விற்பனைப் பொருள் மீது விலைக்கேற்றவாறு 'அஞ்சுதுண்டாயம்' பொன் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்த பின்பே பாவாடை ஏறலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.

மேற்கண்ட செய்தியை மேலோட்டமாகப் பார்த்தால் தெளிவாக இருந்தாலும் சில பகுதிகள் அவ்வளவு விளங்கவில்லை. இக்கல்வெட்டுக் கண்டுபிடிக்கப்பட்ட ஊர் இன்று பாரொஸ் அல்லது பாருஸ் (Baros/Barus) எனப்படும்

கடற்கரை ஊராகும். அதன் பழைய தமிழ் வடிவமே வாரோசு என்பதில் ஐயமில்லை. இந்த ஊர் மேற்குறிப்பிட்ட வணிகக் குழுவால் மாதங்கரி வல்லவ தேசி உய்யக்கொண்ட பட்டினம் என்று அழைக்கப்பட்டது. "மாதங்கரி வல்லவன்" என்ற அடைமொழி யானையின் தோலை உரித்த சிவனுடைய ஒரு பெயராகலாம்[3]. தேசி உய்யக்கொண்ட பட்டினம் தேசிகளான ஐநூற்றுவருக்கு நன்மை உண்டாகுமாறு ஏற்படுத்திய பட்டினம் என்று கொள்ள வேண்டும். அதாவது பெயரை வைத்து இது ஐநூற்றுவர் வணிகக் குழுவால் ஏற்படுத்தப்பட்டது எனலாம். இந்தப்பட்டினத்தின் ஒரு பகுதியாக வேளாபுரம் பேசப் படுகிறது. ஐநூற்றுவர் மெய்க்கீர்த்தியில் வரும் இச்சொல்லை வேளர்புரம் என்று வழக்கமாகப் படிக்கப்படுகிறது. தமிழ்க் கல்வெட்டுக்களில் "ளா" "ளர்" இரண்டுக்கும் குறியீட்டில் அவ்வளவு வேறுபாடில்லாததால் இந்த மயக்கம் ஏற்பட்டது. ஆனால் கன்னடக் கல்வெட்டுக்களில் இந்த மயக்கம் இல்லை. அங்கு "வேளாபுரம்" என்றுள்ளது. ஐநூற்றுவரின் வழக்கமான மெய்க்கீர்த்தி 18 பட்டினம், 32 வேளாபுரம், 64 கடிகைத்தாவளம் ஆகிய இடங்களில் இக்குழுவினர் தங்கள் தொழில் செய்தனர் என்கிறது. 18, 32, 64 ஆகிய எண்கள் மரபுவழி எண்களானாலும் பல இடங்களில் வேளாபுரம் இருந்திருக்க வேண்டும் என்பதில் தவறு இல்லை. அந்த வகையில் ஒரு தனி வேளாபுரம் இக் கல்வெட்டில் வருவது முக்கியமான செய்தி. அடுத்து, கொடைபெற்ற நகரசேனாபதி, முதலியோர் இவ் வணிகக் குழுவின் உள்ளூர்ப் பணிமக்களாக அல்லது முகவர்களாகக் கருத வேண்டும். நகர சேனாபதி 'நம்மகனார்' என்று அடை பெற்றுள்ளார். "நம்மகனார்" என்பது மேல்நிலையிலிருப்பவர் தங்கள் குடிபடைகளாக ஏவல் பணிபுரிவோருக்கு கொடுக்கும் அன்புப் பட்டம். இச்சொல் பன்மையில் நம்மக்கள் என்று வழங்கப்பட்டுள்ளது.[4] மாவெத்துகள் என்ற பெயர் புதிதாக

3. பார்க்க தமிழ் அகராதி, " மாதங்காரி"

4. ஏறக்குறைய இதே காலத்தைச் சேர்ந்த சமுத்திராபட்டி வீரதாவளம் கல்வெட்டில் "நம்மக்கள் நாட்டுச் செட்டிகளும்" என்றுள்ளதைக் காட்டலாம். (ஆவணம் 2, ப. 7).

உள்ளது. ஒரு வேளை அத்திகோசத்தார் என்ற யானை வீரரைக் குறிக்கலாமோ?

எப்படியிருப்பினும் மேற்குறிப்பிட்ட மூன்று வகையினருக்கும் (நகரசேனாபதி, பதினெண்பூமி அப்பர், மாவெத்துகள்) சேர்த்து கொடையளிக்கப்படுகிறது. பொருள் செலுத்துவோராகக் குறிப்பிடப்படும் மரக்கலநாயன் கப்பலின் தலைமை மீகாமன் அல்லது மாலுமி ஆகும். கேவிகள் என்ற சொல்லை கெவிகள் என்றும் படிக்கலாம். ஆனால் மலையாளத்தில் சிறு தோணிகளை இயக்கி மீன்பிடிப்போரைக் குறிக்க வழங்கப்படும் கேவு என்ற சொல்லின் இன்னொரு வடிவமாகக் கொள்வது பொருத்தமாக இருக்கும். இங்கு மரக் கலங்களிலிருந்து பொருள்களைத் தோணியில் ஏற்றிக் கரைக்குக் கொணர்பவர்களாகக் கொள்ளலாம். வரி 17 கடைசியில் "மரக்" என்று சொல் தொடங்குகிறது. அடுத்தவரி முழுவதும் சிதைந்து விட்டது. இருந்தாலும் இங்கு "மரக்கல உடைமையாளர்" குறிக்கப்பட்டிருக்க வாய்ப்புண்டு. ஆக தென்னகத்திலிருந்து அல்லது தமிழ் நாட்டிலிருந்து மரக்கலத்தில் வணிகத்துக்காக வாரோசுத் துறைமுகத்துக்கு வருவோர் யாவரையும் இக் கொடை ஏற்பாடு கட்டுப்படுத்தியது எனலாம்.

வரி 20 இல் கஸ்தூரி என்ற சொல்லில் "ரி" ஊகிக்கப் பட்டுள்ளது. கல்லில் அது முழுவதும் சிதைந்துவிட்டது. கஸ்தூரி ஒரு நறுமணப் பொருள். ஆனால் இங்கு இச்சொல் பொதுவாக மற்ற வணிகப் பொருள்களையும் மொத்தமாகக் குறிக்கிறது என்று கருதலாம். அஞ்சுதுண்டாயம் பொன் என்பது பொருளின் விலைமதிப்பை யொட்டி செலுத்த வேண்டிய ஒரு குறிப்பிட்ட அளவு பொன் ஆகலாம். இப்பொன்னைக் கொடுத்த பிறகே "பாவாடை ஏறக்கடவது" என்று அடுத்து வருகிறது. பாவாடை என்பது பொதுவாக துணியைக் குறிக்கும். பாவாடை ஏறுதல் என்பது துணிமீது அமர்தல் அல்லது நடத்தல் என்று கொள்ளலாம். இங்கு "பட்டினத்தில் நுழைதல்" என்ற சார்புப் பொருளில் வழங்கப்பட்டிருக்கலாம். அதாவது "இந்தப்

பட்டினத்தில் வணிகம் செய்ய உரிமை பெறலாம்". என்பதை இச்சொற்றொடர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.[5]

தமிழ்நாட்டிலிருந்து மரக்கலங்களில் கடல் வணிகர்கள் கூட்டமாக சுமத்திரா போன்ற தீவுகளுக்குச் சென்று வந்தனர். ஆங்காங்கு இவர்களுடைய வணிக மையங்கள் இருந்தன என்பதற்கு இக்கல்வெட்டு சிறந்த சான்றாகும். இக்கல்வெட்டில் வரும் மரக்கலநாயன் என்ற சொல் நிச்சயமாக மரைக்காயர் என்ற சொல்லின் பழைய வடிவமாகும்[6]. மரைக்காயர் பிற்காலத்தில் தமிழ்நாட்டு இசலாமிய இனத்தாரில் ஒரு பிரிவினரைக் குறித்தது. பின்னால் பெருவாரியாக மரக்கலங் களைச் செலுத்தியவர் என்ற நிலையில் இச்சொல் அவர்களை மட்டும் குறித்ததா அல்லது 11ஆம் நூற்றாண்டிலேயே மரக்கல மாலுமிகளாக தமிழ் இசுலாமியர்கள் விளங்கினார்களா என்பது ஒரு தனி ஆராய்ச்சியாகும்.

ஜகார்த்தா அருங்காட்சியகத்தில் (டி.181 என்ற எண் உள்ள) இன்னொரு தமிழ்க் கல்வெட்டு எங்கிருந்து வந்தது என்று தெரியவில்லை. பெரும்பாலும் இதுவும் சுமத்ராவில் கிடைத்திருக்க வேண்டும். இக் கல்வெட்டுப் பொறிக்கப் பட்டுள்ள கல் ஒரு நடனச் சிலை போல் காணப்படுகிறது. தலைப்பகுதியில் சிறிய விநாயகர் தலை செதுக்கப்பட்டுள்ளது. கல்வெட்டு (ஒளிப்படம் 22-24) சுற்றிலும் செல்கிறது. ஒரு பக்கம் மிகவும் தேய்ந்துள்ளதால் ஒவ்வொரு வரியிலும் இறுதிப் பகுதி படிக்க முடியவில்லை.

---

5. பாவாடை ஏறுதல், 'உள்ளே அனுமதிக்கப்படல்' என்ற பொருளில் திருவரஞ் சுரம் இடங்கைக் கல்வெட்டில் (கிபி. 1227) வருகிறது இ.கூ.ஆ. 1994, எண் 184), மலையமக்கள், நத்தமக்கள் ஆகியோர் இடங்கைப் பிரிவில் சேர்ந்தார்கள் என்பதை 'மலையமக்களும் நத்தமக்களும் இடங்கைத் தளத்திலே பாவாடை ஏறினோம்' என்று அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. (இக்கல்வெட்டுக் குறிப்பைக் கொடுத்துதவிய திரு. இல. தியாகராசன் அவர்களுக்கு நன்றி)

6. மரக்கல நாயகர் என்ற தமிழ்ச்சொல் மரைக்காயர் என்று அரேபியர்களால் திரித்து வழங்கப்பட்டது என்று திரு. சு.த. திருநாவுக்கரசு கருத்துத் தெரிவித்துள்ளார் (தென்கிழக்கு ஆசியநாடுகளில் தமிழ்ப் பண்பாடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987, ப. 326) ஆயினும் மரக்கல நாயகர் என்ற சொல்லாட்சி எங்கு வருகிறது என்று அவர் குறிப்பிடவில்லை.

ஜாவா மொழி

1 ஸ்வஸ்தி ஸ்ரீ ஸக வர்ஷாதீத — கார்த்திக்

2 மாஸ சுக்ல பக்ஷ ஏகாதஸி சுக்ரவார ரேவதி நக்ஷத்ர —

3 லநந் ஸேநாபதி ரகந் தீபங்கர மதா ப ———

4 ஹிதிதல்லஹ் கங்க ஸெபரநமாரு தீபங் ——

5 ஹலிகை ராகந் புண்ய பாதுக ஸ்ரீமஹாராச —

தமிழ்

6 [கர] யாண்டு [1108] . . . . . .

7 திகை மாஸத்து ஏகா. . . . . .

8 ரேவதி நக்ஷத்திரத்துச் . . . . . . .

9 தீபங்கர கண்ட ஆ . . . . . . . . . . .

10 [ச]காமென[ப] துவத்[த] . . . . . . . .

11 தும் பெரிது ஸ்ரீ மஹாராஜ . . . . . . . .

12 [ர்]மம்

கல்வெட்டு இரண்டு மொழிகளில் உள்ளது. முதலில் (ஐந்து வரிகள்) பழைய ஜாவா மொழியில் தென்னிந்திய எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது. அடுத்து ஏழு வரிகள் (6-12) தமிழில் உள்ளன. தமிழ்ப் பகுதி பெரிய எழுத்தில் எழுதப் பட்டுள்ளது. இரண்டு பகுதிகளுமே சிதைந்து குறை பாடுடையதாக உள்ளன. ஆனால் இரண்டும் ஒரே செய்தியைப் பற்றியன என்பதில் ஐயமில்லை. தமிழ்ப் பகுதிகளில் சக ஆண்டு எண்ணில் உள்ளது. அது ஒன்று 1108 ஆகக் கொள்ளலாம் அல்லது 1181-1189 க்குள் ஓரெண்ணாகக் கொள்ளவும் வாய்ப் புண்டு. மற்றப் பஞ்சாங்கக் குறிப்புக்களையும் வைத்துப் பார்த் தால் மூன்று தேதிகள் கிடைக்கின்றன. கி.பி.1187 நவம்பர் 13, 1258 நவம்பர் 8, 1265 நவம்பர் 20. எழுத்தமைதியை வைத்துப் பார்த்தால் கி.பி. 1258 அல்லது 1265 ஆகியவற்றில் ஒன்றை இக்கல்வெட்டின் காலமாகக் கொள்ளலாம்.

மற்றப்படி சேனாதிபதியான தீபங்கர என்ற அரசு அலுவலர் பெயர் வருவதாகத் தெரிகிறது. கடைசியில் ஸ்ரீ

மஹாராச என்று ஜாவா மொழியிலும் ஸ்ரீமஹாராஜ என்று தமிழிலும் அரசர் குறிப்பிடப்படுகிறார். முன்னதில் பாதுக என்று வரும் அடை வழக்கமாக ஜாவா கல்வெட்டுக்களில் பெரியவர்களுக்கு வழங்கப்படும் மரியாதைச் சொல். அதற்குச் சமமாகத் தமிழில் பெரிது என்று வழங்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இந்த அரசர் ஸ்ரீ விஜய அரசராகலாம். அரசரோ அல்லது அவருடைய அதிகாரியோ ஏதோ தர்மம் செய்ததாகத் தெரிகிறது. ஒரு வேளை இந்தக் கல்லை விநாயகர் சிலையாகக் கொண்டால் அதைச் செய்தளித்ததாகக் கொள்ளலாம்.

முடிவாக, பதின்மூன்றாம் நூற்றாண்டில் அரச ஆவணத்தில் ஜாவா மொழிக்குச் சமமாகத் தமிழ் வழங்கப் பட்டிருப்பது ஸ்ரீவிஜய நாட்டில் தமிழ்நாட்டு வணிகர்களுடைய செல்வாக்கைப் புலப்படுத்துகிறது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

# 33. செய்தித்திரட்டு

## 33.1 தமிழகத் தொல்லியல் கழகம்

தமிழகத் தொல்லியல் கழகத்தின் மூன்றாம் ஆய்வரங்கம் காரைக்குடியில் கம்பன் மணிமண்டப வளாகத்தில் 1993 சூலை 24, 25 தேதிகளில் நடந்தது. 24 மாலை தொடக்கவிழாவும் ஆவணம் 3 வெளியீட்டு விழாவும் குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடந்தது. பேராசிரியர் தமிழண்ணல் சிறப்புரை யாற்றினார். கருத்தரங்கு வளாகத்தில் காரைக்குடி வட்டாரந் தொடர்பான தொல்பொருள்கள், நாட்டுக் கோட்டைப் பகுதியில் வழங்கும் மங்கலவினை தொடர்பான பொருள்கள் ஆகியவற்றின் கண்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டது. கருதரங்கு 25 காலை 9 மணியிலிருந்து மாலை 5 மணி முடிய நடந்தது. பல கட்டுரைகள் படிக்கப்பட்டு விவாதிக்கப்பட்டன. அவற்றில் பெரும்பாலானவை இவ்விதழில் வெளியிடப்படுகின்றன. கருத்தரங்கின் முடிவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் குறிப்பிடத்தக்கவை:

1. பேரரசன் இராசராசனுடைய பள்ளிப்படை உள்ளதாகக் கருதப்படும் உடையாளூரில் முறையான அகழாய்வு மேற்கொள்ளவும்,
2. நுண்கற்கருவிகள் நிறையக் காணப்பெறும் திருத்தங்கல் வட்டாரத்தில் முறையானகளஆய்வும், அகழாய்வும் மேற்கொள்ளவும்

அரசு நிறுவனங்கள் ஆவன செய்ய வேண்டும்.

## 33.2 தொல்லியலுக்குத் தமிழக அரசின் ஊக்கம்

அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் முயற்சியின் காரணமாக தமிழக வரலாற்றிற்கு வளம் கூட்டும் வகையில் சிந்துவெளி நாகரிகம், நாணயம், கல்வெட்டு, கட்டிடம் மற்றும் பண்டைத் துறைமுகம் முதலியவற்றைப் பற்றி அடிப்படைச் சான்றுகளைக் கொண்டு ஆய்வு செய்யும் அறிஞர்களுக்கு ஊக்கம் அளிக்கும் வகையில் ஆய்வுத் திட்டம் ஒன்றைத் தமிழகஅரசு முதலமைச்சரின் பெயரில் அறிவித் துள்ளது. இத்திட்டத்தின் கீழ் ஆய்வு செய்பவருக்கு மாதமொன்றுக்கு ரூ.2500 உதவித்தொகையாகவும் ரூ.200 இதர

செலவினங்களுக்காகவும், மூன்றாண்டுகளுக்கு தொடர்ந்து வழங்கப்படும். இத்திட்டத்தின்கீழ் ஆண்டுக்கு ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார்.

*நன்றி: இந்து நாளிதழ், திசம்பர் 27, 1993.*

33.3. பாறை ஓவியங்கள் பற்றிய உலக மாநாடு

புது தில்லியில் உள்ள இந்திரா காந்தி தேசிய கலை மையம் யுனெஸ்கோ நிதி உதவியுடன் 29.11.1993 முதல் 7.12.1993 முடிய பாறை ஓவியங்கள் பற்றி உலகளாவிய மாநாடு (Global Conference on Rock Art) ஒன்றினை புது தில்லியில் நடத்தியது. அதில் சீனா, பல ஐரோப்பிய நாடுகள், ஆஸ்திரேலியா, சவுதி அரேபியா, கனடா, அர்ஜன்டைனா, அமெரிக்கா, கென்யா ஆகிய நாடுகளிலிருந்து வல்லுநர்கள் வந்து கலந்து கொண்டார்கள்.

உலக அளவில் பாறை ஓவியங்களின் தன்மை, பண்பாட்டுத் தொடர்பு, பாதுகாத்தல், பதிவு செய்தல், சுற்றுப் புறச்சூழல், காலம் கணித்தல், மீள் உருவாக்கம் செய்தல் போன்ற கருத்துருக்களின் அடிப்படையில் கட்டுரைகள் படிக்கப்பட்டன. குறிப்பாக ஆஸ்திரேலியாவில் பாறைக் குகைகளை கண்ணாடி இழை கொண்டு மீள் உருவாக்கம் செய்து காண்பித்தது அனைவராலும் பாராட்டப் பெற்றது. சவுதி அரேபியா பாலைவனத்திலுள்ள பாறைக்கீறல்கள் கண்டு பிடிப்பு அங்குத் தொல்பழங்காலத்தில் மக்கள் வாழ்ந்துள்ளமையைப் புலப்படுத்தியது. கருத்தரங்கு தொடர்பாக இந்தியப் பாறை ஓவியங்களில் மான்களின் நிலை பற்றிய அருங்காட்சி ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. இந்தியப் பாறை ஓவியங்களுக்கும், பன்னாட்டு ஓவியங்களுக்கும் இடையே உள்ள தொடர்பினை அறிந்துகொள்ள இது மிகவும் பயனுள்ள கருத்தரங்காக அமைந்தது.

கா. ராஜன்

33.4. மல்லூராரின் வரலாற்றுக் கருவூலம்

அண்மையில் சேலம் மாவட்டம் ராசிபுரம் வட்டம் மல்லூர் திரு. ந. சந்திரசேகரன் அவர்கள் தாம் நாற்பதாண்டுகளுக்கு மேலாக பெரிதும் முயன்று தொகுத்து

வைத்த எழுநூற்றுக்கும் மேற்பட்ட வரலாற்று நூல்களை தமிழ்ப் பல்கலைக்கழகம் கல்வெட்டியல் துறைக்கு அன்பளிப்பாகக் கொடுத்துள்ளார்கள். தமிழ்நாடு மற்றும் தென்னிந்திய வரலாற்றில் உயராராய்ச்சிக்கு உறுதுணையாகும் பல நூற்றுக்கணக்கான நோக்கீட்டு நூல்கள் இத்தொகுப்பில் உள்ளன. காட்டாக விஜயநகர அரசு வரலாற்றைப் பற்றி மட்டும் சுமார் ஐம்பது உள்ளன. மேலும் இந்திய வரலாறு, உலக வரலாறு பற்றிய நூல்களும் பல உள்ளன. இச்சிறப்பு நூற்தொகுப்பை நோக்கீட்டு நூலகமாக ஆய்வாளர் யாவரும் பயன்படுத்திக்கொள்ளலாம் எனத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் அறிவித்துள்ளார். இவ்வரிய கொடையை அளித்த மல்லூராரின் நல்லுள்ளத்தை வரலாற்றார்வலர் யாவரும் போற்றக் கடமைப்பட்டுள்ளனர்.

# 34. வெளியீடுகள்

34.1. D.Dayalan, *Early Temples of Tamily Nadu*, (Harman Publishing House, New Delhi, 1992) 268p.

இந்நூல் கி.பி. 6-10ம் நூற்றாண்டுத் தமிழகத்தில் சமூக பொருளாதார நிலைகளில் பல்லவர், பாண்டியர் கோயில்கள் வகித்த பங்கினை விரிவாகக் கூறுகிறது. சங்க காலத்தில் இருந்த திறந்தவெளிக் கோயில்கள் எவ்வாறு காலப்போக்கில் பக்தி இயக்கத்தாலும், வடக்கின் தாக்கத்தினாலும், அரசர்களின் அரவணைப்பாலும் வளர்ந்து பொருளாதார அமைப்பில் பெரும்பங்கு வகித்தன என்பதை விவரிக்கிறது. கோயில்களை நிர்வகிப்பதில் பதி, பாதமூலம், பட்டுடை, தேவகன்மிகள் ஆகிய குழுக்களின் பங்கினைத் தெளிவுபடுத்துவதோடு கோயில்களின் பல்வேறுபட்ட கொடைகளையும் அதன் வழிவரும் வருமானங்களையும் எடுத்துக் கூறுகிறது. கோயில்கள் கலை மற்றும் கல்வியை வளர்ப்பதில் ஆற்றிய பங்கினையும் விரிவாக விளக்குகின்றது.

கா. ராஜன்

34.2 எஸ்.எம்.கமால், சேதுபதி மன்னர் செப்பேடுகள், (ஷர்மிளா பதிப்பகம், 21, ஈசாபள்ளி வாசல் தெரு, இராமநாதபுரம், 1992) 321 பக்கம்

சேது நாட்டின் சிறப்பை வெளிப்படுத்தும் அழகிய பல செந்தமிழ் நூல்களை நடுநிலையுடன் எழுதிப் புகழ் கொண்ட இந்நூல் ஆசிரியர் தாம் அரிதின் முயன்று தேடித் தொகுத்த சேதுபதிகளின் செப்பேடுகள் 90ஐச் சிறப்பாக வெளி யிட்டுள்ளார்.

செப்பேடுகளைக் கால வரிசையில் ஏற்ற விளக்கத்துடன் அமைத்திருப்பது பாராட்டுக்குரியது. விளக்கம் பகுதியில் செப்பேட்டுச் செய்திகளுக்குத் தொடர்புடைய பிற ஆவணச் செய்திகள், செவி வழிச் செய்திகள், வரலாற்றுச் செய்திகள் ஆகியவற்றை உரிய சான்றுகளோடு ஆங்காங்கு அளித்திருக் கிறார். 17, 18ஆம் நூற்றாண்டுகளின் தென் தமிழ்நாட்டு

வரலாற்றுக்குப் பல புதிய செய்திகளை இச்செப்பேடுகள் தருகின்றன. சேதுபதி மன்னர் வரலாற்றை விரிவாக்கித் திருத்தி எழுத இச்செப்பேடுகள் மிகவும் பயனுடையதாக இருக்கும். பட்டறிவோடு எழுதப்பட்ட விரிவான ஆய்வுமுன்னுரை ஆய்வாளர்கட்கும். வரலாற்று மாணவர்கட்கும் மிகவும் பயன் படும்.

செ.இராசு

34.3. இல. தியாகராசன், கானக்கிளியூர் நாடு
(காமரசவல்லி பதிப்பகம், அரியலூர், 1992)
81 பக்கம், 13 படங்கள்.

இவ்வாசிரியர் அரியலூர் வட்டாரத்திலுள்ள எல்லா ஊர்களுக்கும் சென்று பல தொல்பொருள்கள், கோயில்கள், கல்வெட்டுக்கள் முதலியவற்றைக் கண்டுபிடித்து அவைகளை நூல்கள் வாயிலாகவும், கட்டுரை வாயிலாகவும் வெளி யிட்டுள்ளார். அவ்வாய்வுப் பணியின் மற்றுமொரு விளைவே கானக்கிளியூர் நாடு என்ற நாட்டுப் பிரிவைப் பற்றிய இவ்வாய்வு நூல்.

ஆசிரியர் கானக்கிளியூர் நாட்டின் வரலாற்றைச் சங்க காலம் முதல் அண்மைக் காலம் வரை தெளிவாகவும் எளிமையாகவும் எடுத்துச் சொல்லியுள்ளார். சோழர் காலத்தில் பல நாடுகளை ஒருங்கிணைத்து வளநாடுகள் உருவாக்கப் பட்டதன் விளைவாக ஏற்பட்ட மாற்றங்கள் கானக்கிளியூர் நாட்டின் பரப்பளவு, ஊர்கள், கோயில்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. வரலாற்று நிலப்படம் ஒன்று மிகவும் பயனுடையதாக உள்ளது. இறுதியில் கானக்கிளியூர் நாட்டுக் கல்வெட்டுக்களின் மூல பாடம் இணைக்கப்பட்டுள்ளது.

செ.இராசு

34.4. ஏ.கே.சேஷாத்திரி, தஞ்சைப் பெரிய கோயில்
(சேகர் பதிப்பகம், சென்னை, 1993) 212 பக்கங்கள், 120 படங்கள்.

இந்நூல் தஞ்சைப் பெரிய கோயிலின் கட்டிடம், சிற்பம், ஓவியம் மற்றும் படிமக் கலைகளின் சிறப்பை வரலாற்றுக்

கண்ணோட்டத்தில் பல ஒளிப்படங்கள் மற்றும் வரை படங்களைக் கொண்டு எளிய முறையில் விளக்குகிறது. சில மரபு வழிச் செய்திகளுக்கு இந்நூல் ஆசிரியர் புதிய விளக்கங்கள் அளித்துள்ளார். காட்டாக, ஓவியத்தில் கருவூர்த் தேவர், இராஜராஜன் இருப்பதாக கருதப்படும் இரு உருவங்களை ஆடையணிகளைக் கொண்டு முறையே மதுராந்தக உத்தம சோழன், இராஜராஜன் என்றோ இராஜராஜன் அவர்தம் மகன் இராசேந்திரன் என்றோ இருக்கலாம் என்று கூறுகிறார் (ப.8.). அக்கால கட்டிடக்கலையின் பொறியியல் நுணுக்கங்களும் பேசப்படுகின்றன. பெரிய கோயிலில் காணப்படும் இராஜராஜனுடைய கல்வெட்டில் தஞ்சாவூரில் புத்தவிகாரமும், சமணப்பள்ளியும் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது என்கிறார் (ப.24.). இப்படிப் பட்ட கல்வெட்டுச் சான்று இருப்பதாகத் தெரியவில்லை. இந்நூல் உல்லாசப் பயணிகளுக்கு ஒரு நல்ல வழிகாட்டி நூலாகப் பயன்படும்.

*பா. ஜெயக்குமார்*

34.5 நடன காசிநாதன், தொல்லியல் நோக்கில்–
(அன்றில் பதிப்பகம், சென்னை, 1993 ) 163 பக்கம், 40 படங்கள்

ஆசிரியருடைய 20 தேர்ந்த கட்டுரைகளின் தொகுப் பான இது பெரும்பாலும் தமிழ்நாட்டுக் கோயிற் கலைகள், சமய வழிபாடுகள், இலக்கியமும் தொல்லியலும் முதலியன பற்றிய ஆராய்ச்சிப் படைப்பாகும். தொல்லியல் நோக்கில் சங்க இலக்கியங்களின் காலம் என்ற முதல் கட்டுரை விவாதத்துக் குரிய ஒன்று என்றாலும் இது குறித்த ஆராய்ச்சியைத் தூண்டு வதாக உள்ளது. பல இலக்கியச் செய்திகளுக்குத் தொல்லியல், கல்வெட்டுச்சான்றுகளைக் கொண்டு புதிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

*எ.சுப்பராயலு*

34.6 குடவாயில் பாலசுப்பிரமணியன், நந்திபுரம்
(இன்டாக் நிறுவனம், சென்னை 1992), 100 பக்கம்

தீவிர கள ஆய்வின் விளைவாக உருவாகியது இந்தச் சிறந்த வட்டார வரலாற்று நூல். பல்லவர் காலத்திலிருந்து

சோழர் கால இறுதி வரை சிறந்த நகரமாகச் சுட்டப்படும் நந்திபுரம் பழையாறைக்கு அண்மையில் உள்ள நாதன்கோயில் என்று நீலகண்டசாஸ்திரியார் உள்ளிட்ட பல வரலாற்றா சிரியர்கள் கூறிய கருத்தே இன்று வரை ஏற்றுக்கொள்ளப் பட்டது. அக்கருத்தை மறுத்து ஆயிரத்தளி என்ற பண்டைய நந்திபுரமானது இப்போது கண்டியூருக்கு அருகில் உள்ள வீரசிங்கம்பேட்டை செங்கமேட்டுப் பகுதிகள் தாம் என்பதைத் தக்க சான்றுகளோடு நிறுவியுள்ளார். பல நூற்றாண்டுகள் சிறந்ததொரு நகரமாக, சோழர் அரண்மனை இருந்த இடமாக, திருக்கோயில்கள் பல சிறந்திருந்த ஊராகத் திகழ்ந்த நந்திபுர ஆயிரத்தளியின் பன்முக வரலாற்றை ஆசிரியர் விளக்குகிறார். குறிப்பாக இவ்வூர் இலகுளீச பாசுபத சைவ சமயத்தின் ஒரு மையமாக விளங்கியது என்பது ஒரு புதிய முக்கிய செய்தி. இன்டாக் நிறுவனத்தின் சார்பில் அழகுற அச்சிடப்பெற்றுள்ள இந்நூலுக்குப் பல நிலப்படங்களும் ஒளிப்படங்களும் அணி செய்கின்றன.

செ. இராசு

# 35. Plant Remains From Kodumanal Excavations

**M.D. Kajale,** Pune

This initial report is based on the materials from Kodumanal excavations, kindly referred to me by the Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur, Tamil Nadu through Dr. K. Rajan, lecturer in Archaeology of that Department for scientific investigations.

Kodumanal is located on the north bank of the Noyyal, about 20 km west of Chennimalai in Perundurai Taluk of Periyar District, Tamil Nadu. Archaeological excavations were conducted here in four summer seasons during the years 1985, 1986, 1989 and 1990. The ancient site at Kodumanal comprises a habitation mound (about 25 hectares) and a megalithic burial ground (about 40 hectares). The excavation have provided extensive data on the nature of the settlement, gem stone, iron and weaving industries, types of burial and their architectural features, usage of graffiti and Brahmi, etc. The site falls into two cultural periods. Period I is the late phase of the megalithic period datable approximately to 250 BC to AD 100. Period II belongs to the historic period C.AD 100-300.

The preliminary studies indicate presence of at least eight plant species [Plages 25-30] such as Pear millet (Bajra, *Pennisetum* typhoides *Stapf. and Hubbard), Wild Lady's* finger type (*Ablemoschus* sp. type), Indian jujube (*Zizyphus jujuba* lamk.), Kodo Millet (Paspalum scrabiculatum Linn. type, dehusked), Job's tears (*Coix lachryma jobi* Linn.), Graminaceaous weed seed, and indeterminate (non-graminaceous type) weed seed types and interwoven plant fibers. Further detailed studies are being carried out.

## Stratigraphic Occurrence of Grains of Different Plant Species

| Trench / Layer / Depth | Cultural Period | Name: Botanical | Name: Tamil / Hindi |
|---|---|---|---|
| ZM44 / 4/116 | Megalithic | Plant fibers (under study) | |
| ZB2 / 2/170 (pit sealed by layer 2) | Historic | a) *Ablemoschus sp.* _ (Wild Lady's finger type — worth measurements) | *Vendal/Bhindi* (வெண்டை) |
| | | b) *Euphorbiceae* type Single weed seed type | களை வகை |
| | | c) *Pennisetum typhoides*_ Stapf. & Hubbard (Worth measurements) | *Kambu/bajra* (கம்பு) |
| | | d) Dehusked single seed *Paspalum*_ sp. | *varagu / Kodo* (வரகு) |
| | | e) Indeterminate grass seed (weed type) Roundish weed type (Seeds to be measured) | |
| ZB2 / 2/95_120 (pit sealed by layer 2) | Historic | a) *Zizyphus jujuba* _ Ber. Lamk. (Single fruitstone) (Indian Jujube) | *Ilandai* / (இலந்தை) |
| | | b) *Pennisetum typhoides* Stapf. & Hubbard | *kambu/Bajra*_ (கம்பு) |
| | | c) *Coix lachryma_jobi*_ Linn. (Probably used as beads) | *Notpavalam/Gurlu*_ (நெற்பவளம்) |

குறிப்பு :

கொடுமணல் அகழாய்வில் கிடைக்கப் பெற்ற தீய்ந்து போன சில தானிய மணிகள், துணி ஆகியவற்றை பூனெ தக்காணக் கல்லூரி தொல்லியல் உயராய்வு மையத்தைச் சேர்ந்த வேதியியல் வல்லுநர் முனைவர் எம்.டி. கஜாலெ பகுப்பாய்வு செய்து கொடுத்த சுருக்கமான அறிக்கை மேலே கொடுக்கப்பட்டுள்ளது. சங்ககாலத்தை ஒட்டி கொங்கு நாட்டில் எவ்வகையான உணவுத்தானியங்கள் பயிராயின என்பது இதிலிருந்து ஓரளவு விளங்கும். கம்பு, வரகு ஆகிய புன்செய் தானியங்களும், வெண்டை விதையும், இலந்தைக் கொட்டையும் கஜாலெ அவர்களால் இனம் காணப் பட்டுள்ளன. இங்குக் கிடைத்த ஒரு துணிப் பகுதியைப் பற்றிய பகுப்பாய்வு முற்றுப் பெறவில்லை. பெரும்பாலும் அது ஒரு செடியின் நாரிலிருந்து நெய்யப்பட்டிருக்கலாம் என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

## ஒளிப்படங்கள்

# கட்டுரையாளர்கள்

1. ஆறுமுக சீதாராமன்
11, உமா நகர்
தஞ்சாவூர் 613 007

2. சு. இராசகோபால்
கல்வெட்டியல் ஆய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

3. சு. இராசவேலு
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
தென் மண்டலக் கல்வெட்டியல் பிரிவு
இந்திய தொல்லியல் அளவீட்டுத்துறை
கோட்டை, சென்னை 600 009

4. செ. இராசு
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

5. கரு. இராசேந்திரன்
மேலப்பனையூர் (அஞ்சல்)
விரையாச்சிலை (வழி)
புதுக்கோட்டை மாவட்டம் 622 420

6. மா. கணேசன்
தமிழியல்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர் 641 046

7. எஸ்.எம். கமால்
21, ஈசா பள்ளிவாசல் தெரு
இராமநாதபுரம் 623 505

8. அ. கிருட்டினன்
விரிவுரையாளர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

9. ப. சங்கரலிங்கம்
வரலாற்றுத் துறை
ஜி.டி.என். கல்லூரி
திண்டுக்கல்

10. ப. சண்முகம்
இணைப் பேராசிரியர்
பழம் வரலாறு மற்றும் தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

11. அ. சந்திரபோஸ்
கொத்தமங்கலம் அஞ்சல்
ஆலங்குடி வட்டம்
புதுக்கோட்டை மாவட்டம் 614 624

12. சொ. சாந்தலிங்கம்
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

13. சு. சுவாமிநாதன்
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
கல்வெட்டியல் இயக்குநர் அலுவலகம்
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை
மைசூர் 570 005

14. எ. சுப்பராயலு
பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

15. நா. சுலைமான்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
மதுரை 625 002

16. என். சேதுராமன்
நாகேஸ்வரன் வடக்கு வீதி
ராமன் அண்ட் ராமன் நிறுவனம்
கும்பகோணம்

17. இல. தியாகராசன்
முதுநிலை வரலாற்று விரிவுரையாளர்
அரசினர் கலைக் கல்லூரி
அரியலூர் 621 713

18. ஜி. திருமூர்த்தி
முதுநிலை தொல்லியல் உதவியாளர்
இந்திய தொல்லியல் அளவீட்டுத்துறை
சென்னை வட்டம்
கோட்டை, சென்னை 600 009

19. வெ.இரா. துரைசாமி
கோயில்காடு
வெள்ளைக்கல்பட்டி (அஞ்சல்)
நாமகிரிப்பேட்டை
சேலம் 637 406

20. ஆர். பாலச்சந்திரன்
19, முனியாண்டி நாடார் சந்து
கிழக்குத் தெரு
திருத்தங்கல் 626 130

21. பா. தெ. பாலாஜி
பழம் வரலாறு மற்றும் தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

22. மங்கையர்க்கரசி இராகவன்
ஐ.பி.எம்.எஸ். பில்டிங்ஸ்
கே.கே. சாலை
விழுப்புரம் 605 002

23. கா. ராஜன்
விரிவுரையாளர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

